உ

சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றிய

# திருக்குறளின்பம்

**(The Delight of Tirukkural)**

“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன், வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்”

:: அன்பு நிலயம் ::
இராமச்சந்திரபுரம்



[ரூபா 1-12-0

# சுவாமி சுத்தானந்த பாரதியார்



"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்."

உ

ஆதிபகவன் றுணை

# திருக்குறளின் சிறப்பு

செய்யொத்த பயிர்போலச் செந்தமிழுஞ்
செழும்பொருளுஞ் சேர்ந்த செல்வம்;
மையொத்த மனவிருளை மாற்றியொளிர்
மணிவிளக்கு; மாந்த ரெல்லாம்
வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தமர
வாழ்வெய்த வழிந டத்துங்
கையொத்த நற்றுணைவன்; வள்ளுவனார்
திருக்குறளெங் கண்க ளன்றோ! 1

காதொளிருங் குண்டலமுங் கைக்குவளை
யாபதியுங் கருணை மார்பின்
மீதொளிர்சிந் தாமணியு மெல்லிடையில்
மேகலையுஞ் சிலம்பார் இன்பப்
போதொளிர்பூந் தாமரையும் பொன்முடி சூ
ளாமணியும் பொலியச் சூடி,
நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குறளைத்
தாங்குதமிழ் நீடு வாழ்க! 2

தூய்மையே மணிமார்பு; தொன்மறையின்
பிழிசாறாய்த் துலங்கு கின்ற
வாய்மையே மணிநாக்கு; மங்கலஞ்செய்
மனைவாழ்வே கண்கள்; வீர
நேயமுறும் பொருநலமே திருமேனி;
நிறையின்ப முறுவல் பூத்துத்
தாயமுதாய் விளங்குகின்றாள்—அறத்தேவி
திருக்குறளாய்த் தாள்பெற் றுய்வாம்! 3

# திருக்குறளின் சிறப்பு

நால்வரிசை யமுதிருக்க, நம்மாழ்வார்
மொழியிருக்கச் சேக்கிழாரின்
பால்வடிசெந் தமிழிருக்கக் கம்பச்சித்
திரமிருக்கப் பகலே போன்று
ஞாலத்தி லறம்விளங்கு நாயனார்
குறளிருக்க, நமது நற்றாய்,
காலத்தை வென்றோங்குங் கற்பகம்போற்
கனிபெருகக் கண்டி லோமோ! 4

சாதிமதச் சச்சரவேன்? மேற்—கிழக்குச்
சழக்குகளேன்? சகத்தீர் வம்மின்,
மேதினியுண் டானபொழு துண்டான
பொதுநெறியை விளங்கக் காணீர்!
தீதிரிய நலம்வளரத் தேவர்திரு
வாய்மொழியை யியல்பாய்ப் போற்றி,
ஓதியுணர்ந் தெல்லோரும் ஒற்றுமையாய்
வாழ்ந்திடுவோம், உண்மை வெல்க! 5

சுத்தானந்த பாரதி.



# பதிப்புரை

தமிழின் புகழைக் குன்றின்மேலிட்ட விளக்காக்கியது **திருக்குறளே.** இன்று இந்த முப்பாலூற்றைப் பருகி, அதன் அமுதச்சுவையை வியக்காத நாடில்லை. நமது நாட்டின் பெருமையைத் திருக்குறள் உலகிற்கு விளக்கியுள்ளது. திருக்குறளைப் போற்றாத புலவரில்லை; எடுத்து வழங்காத கவிஞரில்லை. **கம்பர், நம்மாழ்வார்** போன்ற அருட் புலவர், சாகாவரம்பெற்ற தமது தங்கக் கவிகளில், திருக்குறள் மணிகளைப் பதித்திருக்கின்றனர். திருக்குறள் **அறத்துப்பால்,** இல்லறம் துறவறம் இரண்டிற்கும் உண்மைவழி காட்டி, உலகின் ஒப்பற்ற நீதிநூலாக விளங்குகிறது. **பொருட்பால்** மனிதனிடம் பொதிந்துள்ள அறிவு, ஆற்றல், ஆண்மை, வீரம் ஆகிய திறமைகளை நன்கு வளர்த்து, அத்திறமைகளால் இம்மையுலகிற் பேரும் புகழும் பெற்றுப் பெருவாழ்வு வாழ வழி காட்டுகிறது. இப்போது மதியூகம் மிக்க புலவர் பேசும் **அதிமனித தத்துவம்** (Ethics of Supermanhood) முழுதும் பொருட்பாலில் அடங்கியுள்ளது. பொருட்பாலை நன்குக் கற்று நின்றோர், வாழும் வகையறிந்து புகழ்பெற்றோங்குவர். **காமத்துப்பாலோ** இலக்கிய வுலகிற்கும் காதலுலகிற்கும் பேரின்பமளிக்கும் ஒப்புயர்வற்ற மகாகாவியம். அது, ஆண் பெண் காதலை இரண்டு உள்ளங்களிலும் உள்ள இன்பமயப் பொருளின் ஒன்றுபட்ட அன்பு வெள்ளமாக்கி, யாக்கையில் ஆத்மானந்தத்தை நுகர்விக்கிறது.

இவ்வுலகில், ஆண்பெண் வாழ்விற்கு அறம், அன்பு ஆகிய இரண்டு இனிய வழிகளைக் காட்டுகிறது திருக்குறள்.

ஆண்பெண் வாழ்வு இன்புற்று, மாசற்று, நாளடைவில் அறிவினும், அருளினும் பழுத்துப் பேரின்பம் பெறுதற்கு என்னென்ன பயிற்சிகள் உள்ளவோ அத்தனையும் திருக்குறளிற் காணலாம். நன்மைகளை எப்படிப் பயிலவேண்டும், எப்படிப் பேசவேண்டும், தீமைகளை எப்படி விலக்கவேண்டும், கல்விகேள்விகளால் அறிவை எப்படி வளர்த்து மெய்யுணர்வு பெறவேண்டும், ஆண்பெண் உடலிரண்டு உயிரொன்றாக வாழும் காதலின்பம் எவ்வாறு நிகழவேண்டும் என்று திருக்குறள் விளக்குகிறது. இல்லறம் நல்லறமாகச் செழித்தற்பொருட்டு இயற்றத்தக்க தாளாண்மை, வேளாண்மை, ஈட்டிய பொருளைப் பலருக்கும் ஈந்துவக்கும் வகை, வீட்டிற்கு மட்டுமல்ல, மனிதன் தனது ஆண்மையால் நாட்டிற்குதவி வீரனாக வாழும் வகை, நாட்டாட்சியின் பான்மை, மன்னறம், போர்முறை, செங்கோன்மை ஆகிய இத்தனையும் விளக்கி வாழ்வைப் பூரணப்படுத்துகிறது திருக்குறள்; அதன்பின், பல அனுபவங்களால் உலகநிலையும் மெய்யுணர்வும் பெற்று மனிதான்மா, நில்லாதவற்றைத் துறந்து, என்றும் நிலையான, அனைத்தும் வல்லவனான, எல்லார் உள்ளத்தும் கோயில் கொண்ட அருளிறைவன் திருவடிபற்றி, அப்பற்று விடாது அமரவாழ்வெய்தும் வழியைக் காட்டுகிறது.

திருக்குறளிற் பொதிந்துகிடக்கும் இந்த அறிவின்பச் சுரங்கத்தை உட்புகுந்து, அனுபவத்தால் அகழ்ந்தெடுத்து இன்று நமது பேரறிவாளர் **ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார்** உலகிற்கு வழங்குகின்றார். இயந்திர நாகரிகத்திற் காலம் சுழன்றோடும் இந்நூற்றாண்டில், பழைய நன்னூல்களை அமைதியாக அமர்ந்து சுவைத்தற்கு நேரமிராது. திருக்குறளை வியந்து கொண்டாடாதவரில்லை. எனினும்,

நமது தமிழர் பலர், அருமையறிந்து இத்தெய்விக நூலை ஊன்றிப் படிப்பதில்லை; நடை கடினம் என்கின்றனர். திருக்குறளுக்குப் பல விரிவுரைகள் உள்ளன. தங்கள் தங்கள் கொள்கைக்கேற்ற உரைகளையே விரிவுரையாளர் வகுத்துள்ளனர். அவற்றைக்கூடக் கற்கமுடியாத நிலையிற் பலர் இருக்கின்றனர்.

இத் **திருக்குறளின்பம்,** அனைவரும் எளிதிற் படிக்கும் படியான முறையில் எழுதப்பட்டுள்ளது. இதன் ஒவ்வொரு வாக்கியமும் அநுபவ மணியாகும். தமிழைப் புறக்கணிப்போரையும் இந்நூல் தன்வசப்படுத்தும். விஷயங்களைக் கோவையாக வைத்து, உபமானம், உதாரணக் கதைகள், சுருக்கமான விளக்கம், ஆங்காங்கு ஆன்றோர் வாக்குகளினின்று மேற்கோள் முதலியவைகூடிய இந்நூல், சிறந்த பொதுமறை விளக்கமாகும். இந்நூலின் ஒவ்வோர் அதிகாரத் தலைப்பும் திட்ப நுட்பமான **சூத்திரமாக** அமைந்து, அவ்வதிகாரத்தின் கருப்பொருளை விளக்குகிறது. பதினைந்து பகுதிகளாக வகுக்கப்பட்டு, ஒப்பற்ற குறள் மணிகளுடன் பொலியும் இந்நூல், தமிழுலகிற்குப் பெரும் பயனாகும். இந்நூலில் நாளொன்றுக்கு ஒருபக்கம் படித்துச் சிந்தித்தாலும் போதும்; வாழ்வு ஒளி பெறும்.

இந்நூலாசிரியர் **ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார்,** தமிழன்னையின் அரிய தவப்புதல்வரில் ஒருவர்; சிறுவயது முதல் அத்யாத்ம யோகத்திலும் தமிழ்ப்பணியிலும் ஈடுபட்டவர்; கவிதாசக்தி இவருடன் பிறந்தது. பல்லாண்டுகளாக யோகத்தனிமையிலேயே ஆழ்ந்திருப்பதால், இவரைப்பற்றி வெளியுலகிற்கு அதிகமாகத் தெரிவதில்லை. தமது ஆத்மாநுபூதியிற் பூத்த உண்மைகளையே இவர் பாமாலைகளாகக் கோத்து உலகன்னைக்கு அணிவித்து வருகிறார். '**தமிழ்,**

**தமிழர், தமிழகம்,'** இம்மூன்றும் உலகில் ஒப்பற்ற பெருமை பெற்று விளங்கவேண்டும்' என்பது இவர் அவா. இவர் ஏராளமான செய்யுள்நூல்கள் எழுதியிருக்கிறார்; இவர் பாமலர்களை 20 அரியநூல்களாகத் தொகுத்து அச்சிட்டு வருகிறோம். இவர் சுமார் 100 உரைநடைநூல்கள் எழுதியுள்ளார். இவர் உரைநடை வீறுபெற்றது. எங்கள் வேண்டுகோட்கிணங்கி, ஒரு மாதத்திற்குள்ளாகத் '**திருக்குறளின்பம்**' என்னும் இந்நூலை இவ்வளவு தெளிவான இனிய எளிய தமிழில் எழுதியுதவிய இப்பெரியாருக்கு எமது நன்றியுள்ள வணக்கத்தைச் செலுத்துகிறோம். இந்நூல் முதற்பதிப்பை வெளியிட் டுதவிய **அன்பு வள்ளலப்பருக்**கும், முன்னுரை மதிப்புரைகளைத் தந்த பெரியார்களுக்கும் எமது நன்றியும் வணக்கமும் உரித்தாகுக!

பணிவுடன் எம்மையாளும் பராபரன் பாதப் போதில்
அணிவித்தெம் மாவி யன்பை யருட்பணி செய்து வாழ்வோம்,
தணிந்தெம திதயத் தாகந் தமிழர சிக்குத் தங்க
மணியரி யணை சமைத்து, மந்திர மெழுப்ப மாதோ!

**அன்பு நிலயத்தார்**

மகா மகோபாத்தியாய, தக்ஷிணாத்யகலாநிதி

## டாக்டர் உ. வே. சாமிநாதையர்

# அணிந்துரை

---

**ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்** அவர்களுடைய **"திருக்குறளின்பம்"** என்னும் அரிய புஸ்தகம் வரப்பெற்றுப் படித்துப் பேரானந்த மடைந்தேன். தவமும், கலையும் ஒருங்கியைந்த அவர்கள், பேராறு மடை திறந்து பாய்வதுபோல இன் சுவை கெழுமிய, நூல்கள் எழுதி வருகிறார்கள். பழம்பெரு நூல்களிற் கண்ட அரும்பொருள்களைப் புதுமுறையில் அமைத்துக்காட்டும் ஆற்றல் ஸ்ரீ பாரதியார் அவர்களுக்கு இருத்தலை, இப்புஸ்தகம் நன்றாக வெளியிடுகின்றது. இனிய எளிய நடையும், பொருட் செறிவும், மனத்தைக் கவரும் அமைப்புங் கலந்து விளங்கும் இத்தகைய புஸ்தகங்கள் வெளிவருதல் தமிழுலகின் நல்லதிர்ஷ்டமென்றே சொல்லவேண்டும். **திருக்குறளின்பத்தை இந்த முறையில் எடுத்துக் காட்டியவர், இதற்குமுன் வேறு யாருமிலர்.** படிக்கப் படிக்க இன்பத்தை மேன் மேலும் உண்டாக்கும் இப்புஸ்தகம் தமிழன்பர்கட்குக் கிடைத்தற்கரிய விருந்தாகும். **ஸ்ரீ பாரதியார் அவர்களுடைய பேராற்றல் வியக்கத்தக்கது.** அதனை அறிந்து பயன் படுத்திக் கொள்ளுதல் நல்ல காலத்தின் அறிகுறி. மேலும் மேலும் இத்தகைய நூல்கள் வெளிவரவேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்

**வே. சாமிநாதையர்**

# முகவுரை

தமிழுலகிற்கு நன்மை புரிதலையே தமது வாழ்வின் பெருநோக்காகக் கொண்டு உழைத்துவரும் அறிஞருள்ளே முன்னணியில் நிற்பவர், **சுவாமி சுத்தானந்த பாரதிகள்.** சுவாமிகளுடைய பாடல்கள், தமிழ்நாட்டில் வழங்கி வருகின்றன. அவற்றிலே, தமிழ்க் கவியரசுகளில் ஒருவராகிய **ஸ்ரீசுப்பிரமணிய பாரதியாரது** பாடல் நயங்கள் பல காணப்படுகின்றன. இனிமை, எளிமை, உண்மை, இம்மூன்று குணங்களும் சுவாமிகளுடைய பாடல்களின் உடன் பிறப்புகளா யுள்ளன. தேசபக்தியும், தமிழன்பும் அப்பாடல்களிற் பொங்கித் ததும்புகின்றன. அறிவும் ஆற்றலும் செறிவுற்று விளங்குகின்றன. கருத்துலகிற் புதுப்பிரதேசங்களிற் சென்று வெற்றிகொள்ளும் **ஆத்ம சக்தி** நிரம்பக் காணப்படுகின்றது.

சுவாமிகளது வசன நடையிலும் மேலே கூறிய இயல்புகள் பல பயின்றுவருதல் காணலாம். செவ்விய மதுரமான சொற்கள், சுருங்கிய தொடர்கள், ஆழ்ந்த கருத்துக்களைச் சிறப்பாகக் கொண்ட பல வசன நூல்களைப் புதிய முறையில் எழுதியிருக்கிறார்கள். அவை, நெடுங்காலமாகத் தேங்கிச் சிறையுண்டு கிடந்த தமிழர் வாழ்விற்குப் புதிய வழி காட்டி, அவ்வழியில் உய்க்கும் ஆற்றல் சான்ற நூல்கள். அவை, தமிழ்மக்களுக்கு வேண்டும் உறுதிமொழிக் களஞ்சியம்.

இறைக்குந் தோறும் ஊறுகின்ற மணற்கேணி போன்றவர்கள் சுவாமிகள். தமிழுக்கு உயிரெனத்தகும் பெருந்தகையார்களது பேரிலக்கியங்களினின்றும் அவர்களுடைய அறிவாற்றல் உரம்பெற்றுள்ளது. இங்ஙனம் உரம்பெற்

றுள்ள அறிவாற்றல் புதுப்புது நூல்களாகப் பரிணமிக்கிறது. இவ்வண்ணம் தோன்றிய நூல்களுள் **திருக்குறளின்பமும்** ஒன்றும்.

தமிழ்நாடும், தமிழ்மொழியும் முயன்ற அருந்தவப் பயன்காரணமாக, ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் நமது நாட்டில் திருவவதாரஞ் செய்தருளிய புண்ணிய மூர்த்தி **வள்ளுவர்.** இவரது அவதார நிகழ்ச்சியைப்போன்று அத்துணைச் சிறப்புடையதாகப் பிறிதொரு நிகழ்ச்சி தமிழ்மொழிச் சரித்திரத்தில் இல்லை. தமிழணங்கு தலையெடுத்து, அவளது புதல்வர்களாகிய நமக்கு இன்முகங் காட்டி நிற்பது இத்திருவவதாரத்தின் பயன்கொண்டேயாகும். தமிழ்நாடு புண்ணிய பூமியாகக் கொள்ளப்படும் பெருமை வாய்ந்தது, இவ்வவதாரத்தின் பெருமை பற்றியேயாகும். தமிழ் மக்களாகிய நாம், கௌரவமுடையதோர் சமுதாயத்தைச் சார்ந்தவர்களென்று எண்ணப்பெற்று வருவதற்கும் இவ்வவதாரமே காரணமாகும். ஆனால் இது பழம் பெருமை. இக்காலத்தில், தமிழ்நாட்டில் அஞ்ஞானவிருள் பரந்து நிலைத்திருக்கின்றது. இவ்வஞ்ஞான விருளில் உழன்று தத்தளிப்போருக்கு உய்தியுண்டென்று உணர்த்தி, நம்மை நன்னெறியில் உய்க்குந் தெய்வவொளியாக வள்ளுவர் விளங்குகிறார்.

இத்தெய்வவொளியின் சரித்திரம் நம்மால் அறிதற்கரிதா யிருக்கின்றது. எத்தனையோ கட்டுக் கதைகள் புனையப்பட்டுள்ளன. ஒருண்மையை இக்கதைகளால் உணர்கின்றோம்: வள்ளுவரது திருமேனிக்குத் தமிழ்மக்கள் பண்டுதொட்டு இன்றுவரை இடையறாத அன்புபூண்டு வந்திருக்கிறார்க ளென்பதுவே அது. அவரது திருநாமம் சிந்தைக்குஞ் செவிக்கும் இனிதா யுள்ளது. அவரது சரிதமெனப் பெயர்கொண் டெழுந்தன வெல்லாம் புண்ணியம்

பயப்பனவாக நம்மவராற் கருதப்பட்டுள்ளன. கரையிறந்து பொங்கியெழுந்த அன்பின் பெருக்கால் இக்கதைகள் முளைத்துச் செழித்து வளர்ந்தனவென்று நாம் உணர்ந்த வளவில், நமது மனம் பக்தியாற் கனிவெய்துகின்றதே யன்றி, அவற்றின் பொய்ம்மை மெய்ம்மைகளைத் தெரிதற்கு ஒருப்படுவதில்லை. குணத்தாலும் செயலாலும் பெரியரா யுள்ளவர்களைப்பற்றிய அழகிய கதைகள் நம்மை வசீகரித்து விட்டனவென்று நாம் ஒப்புக்கொள்ளுதலிற் குற்றம் சிறிது மில்லை. ஆனால் வள்ளுவரது புகழ்மண்டலத்தைக் கடந்து அவரது உண்மைச் சரித்திரத்தை யுணருதற்கு நம் அறிவு வலியற்று நிற்கின்றது. இதனை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுதல் பெரிதும் ஆவசியகம்.

ஓருண்மை மாத்திரம் நமது அறிவைவிட்டு எவ்வகை யானும் தப்பிச்செல்ல முடியாதபடி நமது பார்வையிலேயே மிகவெளிதில் சிக்கிக்கொண்டது. அவ்வுண்மை யாதெனின், **'திருவள்ளுவர் திருக்குறள் செய்தநலினர்'** என்பதேயாகும். இதனை அறியாதார் இல்லை; ஆனால், பொருண்மையும் பய னும் உணர்ந்தோர் மிகச் சிலரே யாவர். ஆசிரியன் தன் னையே தனது நூலில் அமைத்து விடுகிறான். ஆசிரியனது ஜீவநாடி அவனது நூலிலேயே துடிதுடித்துக்கொண்டிருக் கும். ஆசிரியனுக்குரிய விசேஷ ஆத்ம குணங்களெல்லாம் நூலினகத்துங் காணப்படுதல் நிச்சயம். நூலிற் கூறுகின்ற வாழ்க்கைநிலையில், ஆசிரியன் தானே வாழ்கின்றான்; தனது கூரிய கட்புலன் கொண்டு, அந்நிலைகளை நோக்குகின் றான்; தனது நுண்மாண் நுழைபுலங்கொண்டு,விஷயங்களின் உண்மையை நுனித்து உணருகின்றான். தனது பேராற்ற லால் அவ்விஷயங்களின் பொருளைக் கூர்ந்துணர்ந்து தனது அரிய புலமைத் திறத்தால் அவற்றைப் பிறரும் கூர்ந்துண ரச் செய்கின்றான். சுருங்கக் கூறின், ஆசிரியனது உயிர்வாழ்

வின் சாராம்சமே அவனியற்றிய பெருநூலெனத்தகும். இவ்வுண்மை அருஞ்சிறப்பு வாய்ந்த பெருநூல்களோடு மாத்திரமே பொருந்துவதாகும். இதனுலே, 'வள்ளுவர் வேறு, அவரது தெய்வத் திருக்குறள் வேறு' என்பது இல்லை. **திருக்குறள்** என்பதுதான் **வள்ளுவர்.** ஆகவே, வள்ளுவரது வாழ்க்கையில், பிறமக்களோடொப்ப அவர் செய்திருக்கக்கூடும் சிறுசெயல்களால் நமது மனம் அலேப்புண்டு உழலாதபடி, தம்வாழ்வின் தனிப்பெரு நோக்கமாகக் கொண்டியற்றிய நூலின்கண்மாத்திரம் நம் அறிவைச் செலுத்திப் பயன்பெறுமாறு ஆணையிடுவித்த ஊழ்விதிக்கு ஒருமுறையில் நாம் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேம். இக்கருத்துப் பற்றியே ஸ்ரீ சுத்தானந்த பாரதிகளும், "குறளே வள்ளுவர் வாழ்வும் உள்ளமும் எனக்கொண்டு பயன் பெறுக" என்று எழுதியுள்ளார்கள். உலகத்திற் பேரறிவாளர் என்றழைத்தற்கு வள்ளுவரைக்காட்டிலும் சிறந்த உரிமையுடையார் அரியர். இவர் தந்தருளிய திருக்குறள் நூலேக்காட்டிலும் பெரியதோர் செல்வம் உளதெனல் அரிதாம். செல்வத்துட் செல்வமாகிய இத் திருக்குறளேக் கற்று இன்புறுதற்கு ஒரு வாயிலாக இயற்றப் பெற்ற இத் **திருக்குறளின்பம்** தமிழ் மக்களுக்குப் பெருவிருந்தாக அமையுமென்பது ஒருதலே. தமிழ்மொழியின் முன்னேற்றங் குறித்து **ஸ்ரீ சுத்தானந்த பாரதிகள்** கொண்டுள்ள கருத்துக்களெல்லாம் இனிது நிறைவேறும்படி எல்லாம் வல்ல இறைவனேப் பிரார்த்திக்கிறேன்!

இங்ஙனம்,

சென்னை
17-9-'37

**S. வையாபுரிப் பிள்ளை**, B. A., B. L.

# சிறப்புப் பாயிரம்

---

*புத்தேரிப் புலவர், கவிஞர்,*

**ஸ்ரீ. S. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள்**

*இயற்றியது*

---

நேரிசை யாசிரியப்பா

*ஓதுநர் தாய்மொழிக் குயிரை யொத்தநூல்*
*பூதல முழுவதும் புகழ்ந்து போற்றுநூல்*
*பொய்யகம் போக்கிப் புனித மாக்குநூல்*
*மெய்யக நாட்டிமேல் வீடு காட்டுநூல்*
*ஒருமத வொருநெறி யொருபொரு ளுண்மையை*
*விரிநில மெங்கணும் விளங்க வைத்தநூல்*
*அறிவின தெல்லையை யளந் தமைந்தநூல்*
*தெள்ளிய தமிழ்மறை வள்ளுவர் நூலே;*
*ஒப்பரு மிந்நூற் குரை வகுத்தவர்*
*பற்பலர்; அவரெலாம் விற்பன ராயினும்,*
*உலகிருள் விலக்க வுதித்தொளி வீசு*
*முழுமதி யினைத்தம் முன்றிலி னின்று,*
*நோக்கி "ஈ தெம்மதி, நும்மதி யன்றெ"னச்*
*செப்புஞ் சிறுமகார் செய்கையே போன்றத்*
*தெய்வப் புலவனைச் செந்நாப் போதனைச்*
*சைவன், வைணவன், சமணன், பௌத்தன்*
*எனக்கொண் டவரவர்க் கிசைந்த படிநூற்*
*செம்பொருள் முற்றுந் திரியச் செய்தனர்.*

ஆதலின்

உள்ளதை யுள்ளவா றுணர்ந்துளங் கண்டு,
நடுநிலை யமர்ந்து, நவிலுமிந் நல்லுரை,
எம்மதத் தவர்க்குஞ் சம்மத மாமுரை,
சிறியருங் கற்றுத் தேறத் திகழுரை,
பெரியரும் விரும்பிப் பேணும் புத்துரை,
ஆழ்பொரு ளுள்ளே மூழ்கி யெடுத்து,
நிரல்படக் கோத்து நித்தில மாலைபோல்,
குறள்மணி யிடையே குயிற்றிய வொள்ளுரை,
வாழ்வாங்கு வாழும் வழியைத் துலக்கும்
**திருக்குற ளின்பத்** தெளிவுரை யிதனைத்
தேனினு மினிய செஞ்சொலி னமைந்த
வசன நடையில் வழங்கின னறமும்
உண்மை யறிவும் உலகெலாம் பரவ,
அல்லும் பகலும் அயர்விலா துழைப்போன்;
சாதி, சமய, சாத்திர, கோத்திர
வேற்றுமை காணா வீதியி லுலாவுவோன்;
தவத்திற் பெரியோன்; தமிழ்ப்பயிர் வளர்ப்போன்;
களங்கமி லுளத்தாற் கைம்மக வனையோன்;
அன்பா லெவரையுந் தன்பாற் கொள்வோன்;
**புதுவை**யம் பதிவாழ் புண்ணியன்; எங்கும்
துதிபெறு **சுவாமி சுத்தா னந்த**
**பாரதி** யெனப் பெயர் பகரும்,
சீரிய ஞானச் செல்வமிக் கோனே!

# அணிந்துரை

"சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள்வெண் பா"—கவுணியனார்.

தமிழ் மறையென விளங்கும் திருக்குறளின் சிறப்பை யறியாத தமிழர் இல்லை. தமிழர் எப்பொருளை யிழப்பி னும், உயிர்க்கு உறுதிபயக்கும் உத்தம நூலாம் திருக் குறளை யிழவாதிருப்பின் அவர்கட்கு இல்லாத தொன் றில்லை யெனலாம். திருக்குறளின் சிறப்பை யுணர்ந்த பிற நாட்டவரெல்லாம் இந் நூலை ஆழ்ந்தாழ்ந்து ஓதி யுணர்ந்து உவக்கின்றனர். நந்தமிழரிற் பெரும்பான்மையோர் அங்ஙனம் திருக்குறளை ஓதாதிருத்தற்குக் காரணம், அவர்கட்குத் தமிழ்மொழியில் நிரம்பிய புலமை யின்மையே யாம். அதனை நன்குணர்ந்துள்ள **ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார்** என்னும் பெரியார், தமிழ் மொழியில் சிறிது பயிற்சியுள் ளோரும் திருக்குறட் பாக்களின் கருத்துக்களை நன்குணர் ந்து பெரும் பயனடையவேண்டு மென்னும் பெருங் கருணை யால், **திருக்குறளின்பம்** என்னும் இத் திப்பிய நூலைத் தெள்ளிய செந்தமிழில் இனிது யாத்துள்ளார்.

திருக்குறளின்பம் என்னும் சீரிய நூலின் ஆசிரியராய் விளங்கும் சுவாமி சுத்தானந்த பாரதியார் என்னும் பெரி யார், **புதுவையில் பகவான் ஸ்ரீ அரவிந்தர்** ஆசிரமத்தின்கண் அமர்ந்து, "செயற்கரிய செய்வார் பெரியார்' என்னும் தெய் வப் புலமைத் திருவள்ளுவரது திருமொழிக்கிலக்காய்

யோகப் பயிற்சியை மேற்கொண்டு, என்ஞான்றும் பேரின்பப் பெருங்கடலுள் திளைத்து வருகின்றார். இவர் பன்மொழிப்புலவர். இப் பெரியாரின் கல்விப்பெருக்கும், அறிவின் ஆழமும், ஒழுக்கத்தின் உயர்வும் அளப்பரிய. தமிழ்ப்பணி புரிதலே பெருந்தவமெனக் கருதித் தமிழில், பைந்தமிழ்ச் சோலை, இன்பமாலை, யோக சித்தி, இராமலிங்க விஜயம், சிலம்புச்செல்வம், பொதுநெறி, தமிழுணர்ச்சி, கம்பக் கவியின்பம் முதலிய பற்பல சிறந்த நூல்களை இயற்றியுள்ள இப்பேரறிஞர்க்குத் தமிழுலகும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுளது.

ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் தாம் இயற்றியுள்ள **திருக்குறளின்பத்தில்** மனித வாழ்வில் நிகழ்வனவற்றை நன்குச் சிந்தித்து வகுத்துள்ள முறை உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மைத்து. இப்பெரியார் தாம் கூறக்கருதும் செய்தியைச் சுருங்கக்கூறி விளங்கவைக்கும் ஆற்றல் வாய்ந்தவர் என்பது, இவர்தம் ஒரு சிறு நூலையேனும் ஆழ்ந்து ஓதுவோர்க்கு இனிது புலனும். இத்தகைய பேரறிஞர், தமிழ்மொழிக்கண்ணுள்ள கடினமான நூல்களையெல்லாம் இங்ஙனம் எளிய தீந்தமிழில் யாவரும் ஓதியுணருமாறு செய்வரேல், தமிழுலகம் பெரும் பயனைப் பெறும் எனல் மிகையாகாதெனக் கருதுகிறேன்.

இங்ஙனம்,

**கு. மதுரை முதலியார்**

சென்னை லயோலாக் கல்லூரி மாஜித்
தமிழ்ப் புலவர்.

சென்னை
24–9–1937

# APPRECIATION

I have received an advance copy of this new Tamil book "Tirukkural Inpam" by **Sri Swami Shuddhananda Bharatiar** and have glanced through it and read as much as possible in the short time at my disposal. This book presents the different teachings of the **Kural** in **124** short chapters. In each chapter, stanzas dealing with the subjects under review are brought together so that the reader can get a clear picture of the ethical ideals of the Kural. It is a new method of treatment of this old Tamil classic, but it certainly helps to bring out clearly the ethical teachings of the book and to present a unified picture of the kind of life which will emerge by following out these teachings. This method also helps those who are already students of the Kural and fairly well versed in its stanzas to renew their studies with fresh zest by bringing together appropriate stanzas from different sections. The author also enriches our understanding of the Kural and helps us to see new facets of its ethical teaching.

There is no doubt that the Kural will repay all the study that can be given to it. It is one of the most noteworthy ethical books in any language and its picture of the ideal man comes nearer to that of Christ's teaching in the Sermon on the Mount.

It is needless to say that the book is written in vivid and lucid Tamil. Swami Shuddhananda Bharatiar has a style of his own which not only attracts but also compels the attention. It is full of striking and apt alliterations and pregnant with meaning in each little phrase. It is a Tamil

far removed from the old stilted Tamil of the Pandits and yet is classical in its range and purity. He uses the minimum number of words to express his ideas and no one can read his work without a feeling of pride in the possibilities of Tamil prose. He is a master of the Tamil language and it becomes in his hands an instrument which can express the most subtle lights and shades of human thought.

We are very grateful indeed to him for this new work and trust that it will have a wide circulation and help the Tamil people everywhere to realise the supreme value of the Kural in ethical literature.

H. A. POPLEY

*Erode*
*31-8-1937*

# பொருளடக்கம்

## நூல் 2 : அறநெறி யொழுக்கம்



## நூல் 3 : சொல்லறம்

## நூல் 5 : நட்பும், அன்பும்

வரிசை எண் பக்கம்

## நூல் 6 : கல்வி, கேள்வி



## நூல் 7 : காதல் விளக்கம்

வரிசை எண் பக்கம்

## நூல் 8 : இல்லற வொழுக்கம்



## நூல் 9 : முயற்சியும் செல்வமும்

## நூல் 10 : ஈகையும் புகழும்



## நூல் 11 : நாடும், அரசும்

வரிசை எண் பக்கம்



## நூல் 12 : வினைத் திறன்

## நூல் 13 : போர், புகழ், வீரம்

## நூல் 14 : மெய்ப்பொரு ளுணர்ச்சி



## நூல் 15 : துறவுந் தவமும்

# திருவள்ளுவ நாயனார்




உள்ளஞ் சிலிர்க்கு முயிர்சிலிர்க்கும் விண்ணமுதம்
வள்ளுவனின் வாய்மை மறை.

உ

ஆதி பகவன் துணை

# திருக்குறளின்பம்

## தேவரும், தெய்வ நூலும்

### 1. குறளின் பெருமை

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்." —ஔவை

நமது நாட்டின் பெருமை, இரண்டு அற்புத நூல்களால் உலகளாவியது, ஒன்று கண்ணன் **கீதை**; மற்றொன்று வள்ளுவர் **குறள்**. கீதை, போர்க்களத்தில் விசயன் சோர்வை யகற்றி, வீரப்பணியைக் கடவுட் பணியாகச் செய்யத் தூண்டியது; கண்ணன் விசயனுக்குச் சொன்னது; சஞ்சயன் கேட்டது; வியாசர் கவிதையாகத் தொடுத்து உலகிற்கு வழங்கியது. **குறள்**, எளிய, தூய, இல்லற முனிவரால், அமைதியாக, நீண்ட அனுபவங்கொண்டு இயற்றியருளப் பெற்றது. ஈரடிகளால் ஆன இரண்டும் இறைவனடி பற்றிய அறவழி வாழ்வையே விளக்குகின்றன.

வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து, தெய்வநிலை பெறும் வழியைத் துலக்கும் குறளின் பெருமை மிகப் பெரிது. தமிழர் பெற்ற செல்வத்துட் செல்வம் திருக்குறட் செல்வமாம். "திருக்குறள், சாதி மத நிற வேறுபாடின்றி, உலகெல்லாம் ஓதி யுணரும் பொதுமறை; ஒப்புயர்வற்ற இலக்கிய மணி; கல்விக் களஞ்சியம்; நீதிச் சுரங்கம்; வெள்ளிப் பையி

விட்ட தங்கக்கனி. வள்ளுவன் புலவர்க் கரசன், உலகாசான்," என்று மேனாட்டறிஞர் ஒருங்கே வியந்து போற்றுகின்றனர். 'பொய்யாமொழிப் புலவன், தேவன், ஈரடியால் மாந்தர் உள்ளத்தை யளந்தான், உலகிற் கெல்லாம் பொது மறை வகுத்தான்.'

"வள்ளுவ ரின்குறள் வெண்பா, அகிலத்தோர்
உள்ளிருள் நீக்கு மொளி"

என்று தாய்நாட்டுப் புலவர் மணிகள் போற்றுகின்றனர். குறள், தமிழர் நாகரிகக் கண்ணாடி; தமிழின் முதுமைக்கும், இளமைக்கும் சான்று; தமிழரின் அகப் புற வாழ்வின் விளக்கம்; சொல்லுக் குறுதி தருவது; நக்கீரர், சாத்தனார், இளங்கோ, கம்பர் போன்ற பேராசிரியர் எடுத்தாண்ட பெருஞ்செல்வம்; வடமொழி, இந்தி, தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம், லத்தீன், ஜெர்மன் பிரஞ்சு முதலிய பல மொழிகளில் உலவித் தமிழ்ப் பெருமையை நிலை நாட்டிய வெற்றிக்கொடி. அதை யெடுத்தாளாத புலவரில்லை! குறள், இல்லறத்தார் செல்வக் கற்பகம்; இம்மையில் மறுமைப் பயனளிக்கும் இன்ப ஆற்று. குறளினின்று கணக்கற்ற நூல்கள் பிறந்தன. படிக்கப் படிக்கப் பயன் மிகும் 1,330 குறட்பாக்கள் மனிதன் அடையத்தகும் எல்லா நலன்களையும் விளக்குகின்றன. கல்வி, தொழில், அருள், பொருள், காதல், மகப்பேறு, அரசாட்சி, நாட்டு முன்னேற்றம், நன்னெறி, அருந்தவம், கடவுளடைவு, பேரின்பம் அனைத்திற்கும் வழிகாட்டும் இந்த முப்பாலைத் தாய்ப்பாலெனப் பருகுவோம்.

## 2. வள்ளுவர் வரலாறு

குறளே வள்ளுவர் வாழ்வும் வரலாறுமாம். வள்ளுவர் சுமார் 1900 ஆண்டுகட்குமுன் பிறந்தார்; மைலாப்பூரில்

எளிய தூய இல்லறத்தில் வாழ்ந்தார்; நூறாண்டு இருந்தார் என்பது புலனாகிறது. பரம்பரைக் கதைகள் பல; பயனுள்ளவற்றை அறிவாம். அடக்கம், பொறுமை, வாய்மை, தூய்மை, எளிமை, அறம், அருள், அன்பு, கடவுளுறுதி, தெள்ளறிவு மிக்க வள்ளுவரை, **அந்தண் முனிவர்** என்றே வணங்குவோம்.

## ஆதி பகவன்

உறையூருக்கு அடுத்தது மேலூர் அகரம்; அதில் நீதி ஐயர் சத்திரம் ஒன்றிருந்தது. ஐயர் பொது நோக்காளர்; ஒரு திருக்குலப் பெண்ணைத் தமது மகள்போல் எடுத்து வளர்த்தார். ஒருநாள் காசியாத்திரை போகும் ஒரு வேதியன் அச்சத்திரத்தில் வந்து இறங்கி, ஆசாரமாகச் சமைத்துக்கொண்டிருந்தான். மேற்சொன்ன திருக்குலச்சிறுமி எட்டிப்பார்த்தாள். விழுந்தது சட்டுவப் பூசை! புண்ணைப் பொறுத்துச் சிறுமி ஓடிப் போனாள். ஆனால் அந்த வைதிகனை அவள் மறக்கவில்லை.

சில மாதங்கள் சென்றன: அதே வேதியனாகிய, **பகவன்,** காசியிலிருந்து இராமேசுவரம் சென்றான்; வழியில் அதே சத்திரத்தில் இறங்கினான்; ஆங்கே ஒரு மின்னிடையைக் கண்டான்: மதிமுகம், மலர் விழி, பவளச்செவ்வாய், அன்ன நடை, மயிற்சாயல் வாய்ந்த அழகின் அமுதம் அவன் எதிரே நின்றது. கண்கள் பொருந்திக் கருத்திற்குக் கண்ணி வைத்தன. பெரிய அரசாங்கங்களையே ஒருகை பார்க்கும் காதற் கடவுளின் அம்பு இருவர் மனத்திலும் தைத்தது. நீதி ஐயர் இதை அறிந்தார்; "ஐய, இவள் எனது அன்புச் செல்வி; இவளை மணந்து இங்கேயே இருந்தருளுக" என்றார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது! "மெத்த மகிழ்வு; இதோ ராமேசுவரம் சென்று வந்ததும், முகூர்த்

தம் நடத்தலாம்" என்று விடை பெற்றுக் கொண்டான் பகவன். அவ்வாறே திரும்பி வந்ததும், சிறப்பாக மண வினை நிறைவேறிற்று. ஐந்தாநாள் மங்கள ஸ்நானத்திற் காகப் பெண்ணின் தலையில் எண்ணெய் விடும்போது, ஒரு வடுவைக் கண்டான் பகவன்; சட்டுவக் காயம்! "பெண் ணே, நீ ஆதி அல்லவா?" என்று கேட்டான்; வரலாற்றை அறிந்தான்; காதல் மணம், கலப்புமணம் எனத் தெரிந்தான். காதலுக்குச் சாதி யில்லை. சாதிப்புத்தி வந்ததும் காதல் நோதலாயிற்று. பார்ப்பான் எடுத்தான் ஓட்டம். கற்புறுதி கொண்ட ஆதி, காதலைத் தொடர்ந்தாள்.

## வள்ளுவர் பிறப்பு

இரவு; ஆதி, தன் கணவனை ஒரு மண்டபத்திற் கண்டு, நாணும் நிறையும் பூண்ட நயமொழி கூறினாள்:— "ஆருயிர்க் காதல, ஊழ்வலியாலும், இறைவன் இச்சை யாலும் காதலித்தோம்; மணம் புரிந்தோம். மனங் கலந் தோர் இனம் பார்ப்பரோ? குணஞ் சிறந்தோர் குலம் பார்ப் பரோ? காதல் வெள்ளத்திற்குச் சாதி யணை யுண்டோ?" பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்; தம்முயிர் வேறு? என் னுயிர் வேறு? உம்மைப் பிரிந்து உயிர் வாழ்வதோ? உம்மைக் காணுக்கண்கள் உறங்குமோ? தலைவ, அன்பின் வழியது உயிர்நிலை. காதலிற்கூடி, மங்கல மனையாட்சி செய்வோம். உலகிற்கு நன்மக்களை அளிப்போம்".

பகவன், மனம் இளகி, "பெண்ணே, என்பால் அவ் வளவு அன்பிருந்தால், நான் சொல்லியபடி நீ செய்யவேண் டும்: நமக்குப் பிறக்குங் குழந்தைகளை ஆங்காங்கு அப் படியே விடுத்துச் செல்லவேண்டும்; எனில் உன்னை ஏற்றுக் கொள்ளுகிறேன்" என்றான். ஆதி சம்மதித்துக் கணவனைப் பின்பற்றினாள்.

இந்தக் கலப்பு மணத்தால், உலகம் போற்றி வணங்கும் தெய்வமணி மக்கள் பிறந்தனர். ஆதி பெற்ற ஏழும் சோதிச் சுடர்கள், பிறவிக் கவிகள். கணபதி அகவல், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நல்வழி, மூதுரை, அருந் தமிழ்மாலை, தினசரிப் பத்து, ஞானக் குறள் முதலிய திரு மறைகளை அருளிய **ஔவை** முதலிற் பிறந்தாள். அதன்பின், **உப்பை, அதிகமான், உறுவை, கபிலர், வள்ளி** ஆகிய மாணிக்கங்கள் பிறந்தன. பிறந்தவாறே இறைவன் பாது காப்பில் விடுத்துக் காதலர் மேற் சென்று, மைலாப்பூரில், ஒரு இலுப்பந்தோப்பில் தங்கினர். அங்கேதான், நமது தெய்வப் புலவர் திருவவதரித்தார். மலர்ந்த முகம், மாங் கனி வாய், பொன்னார் மேனி, அறிவுச்சுடர் விழி கொண்ட இவ்வதிசயப் பிள்ளையைக் கணவன் ஆணைப்படி விட்டுப் பிரிய மனமின்றி, ஆதி வருந்தினாள். அப்போது அந்த அன்புக் குழந்தை வாய்மலர்ந்து, ஆறுதல் சொன்னது:—

"எவ்வுயிருங் காக்கவொரு ஈசனுண்டோ இல்லையோ?
அவ்வுயிரில் யானொருவன் அல்லனோ?—வவ்வி,
யருகுவது கொண்டிங் கலைகுவதேன்? அன்னே!
வருகுவது தானே வரும்".

இந்த ஞானமொழியால் பெற்றமனம் ஆறுதல் அடைந்தது. ஆதியும் பகவனும் குழந்தையை இலுப்ப மரத்தடியில் விடுத்துச் சென்றனர். பிற்காலம் வள்ளுவர், மீண்டும் தமது பெற்றோரைச் சந்தித்திருக்கவேண்டும்.

## குழந்தை

அவ்வூரில், அன்புமிகுந்த வேளாளர் ஒருவர், தமது காதல் மனைவியுடன் இல்லறம் நடத்திவந்தார். அவருக்கு எல்லாச் செல்வமும் வாய்ந்தும், பிள்ளைச் செல்வம் இல்லை. ஒருநாள், அவ்வேளாளர் மனைவி, இலுப்பமரத்தடியில் நமது

தெய்வக் குழந்தையைக் கண்டாள். மரத்திலிருந்து சொட்டும் தேனையுண்டு பிள்ளை பிழைத்திருந்தது. இத் தங்க மணிக் குழந்தையைக் கண்டதும், அந்த அம்மை மார்பில் பால் ஊறியது; 'என் முத்தே, செல்வமே' என்று கொஞ்சி, மார்பில் அணைத்து, வீட்டிற்குக் கொணர்ந்து கணவனிடங் கொடுத்தாள். இறைவன் கொடுத்த அருட் கனி என்றெண்ணி, இருவரும் குழந்தையை அருமையாகப் பேணி வளர்த்தனர். சவலைக் குழந்தை சான்றோனைக் காட்டியது; தனது பிஞ்சு மொழிகளால் புதுப்புது இன்ப மீந்தது. எனினும், சுற்றத்தார், 'சாதி இனம் பாராது, இந்த அநாதைக் குழந்தையை நடுவீட்டில் வைத்து வளர்க்கலாமா' என்று இடித்துரைத்தனர். சுற்றத்தார் இடும்பை தாங்காது, அவ்வேளாளனும் அவன்றன் மனைவியும், குழந்தையை மாட்டுத் தொழுவத்தில் வைத்துப் பண்ணையாட்களைக் கொண்டு வளர்த்தனர். அதுகூடச் சுற்றத்தாருக்குப் பொறுக்கவில்லை. பார்த்தான் ஐந்து வயது பிள்ளை. "பெற்றோரைக் காட்டிலும் அன்புடன் என்னை வளர்த்த பெரியீர், எளியேனால் தங்களுக்கு இடர் வேண்டா. பெற்றார் பெருமை பிள்ளையால் விளங்கும். பயிரை வளர்க்கும் மழைபோல இதுகாறும் என்னை வளர்த்ததற்காக நன்றி பாராட்டுகிறேன். இனி விடைபெற்றுக் கொள்ளுகிறேன்" என்றான் அவன். "எமது பிள்ளைக் கலி தீர்க்க வந்த செல்வமே, அறிவுக் கிளியே, நின்னைப் பிரிந்து எப்படி வாழுவோம்?" என்று ஏங்கிக் கலங்கினர் வளர்த்த நல்லோர். "நீங்கள் வேண்டும்போது வந்து செய்வன செய்வேன்; வணக்கம், நன்றி" என்று விடைபெற்றேகி, ஒரு பனை மரத்தடியில் அமர்ந்தான் அந்த அறிவுசால் பிள்ளை. அந்த அற்புதக் குழந்தையின் மன வுறுதியை ஊரெல்லாம் கண்டு வியந்தது. திடீரென்று ஒருநாள் அப்பிள்ளை மறைந்தான்.

## தவச்சுடர்

ஒரு மலைமீது, சித்தர் கூட்டத்தில் வள்ளுவரைக் காண்கிறோம்: சுடச்சுட நோற்ற உடல் தவச்சுடர் காந்துகிறது. கல்லாக் கல்வியும், கேளாக் கேள்வியும்பெற்ற அருட்புலமை, கண்களில் கதிர் விடுகிறது. கைக்கனி போல மெய்ப் பொருள் கண்ட இன்பம் முகத்திற் பொங்குகிறது. ஐம் புலனடக்கி, ஐயந் தெளிந்து, தானே தானாக விளங்கும் இத் தவராஜனை ஒரு அன்பன் வந்து வணங்கினான். அவன் பெயர் **மார்க்க சகாயன்** (வழித் துணைவன்); காவேரிப்பாக் கத்தில் ஆயிரம் ஏர்கட்டி யாளும் நற்குடி வேளாளன். "சித் தர் பெருமானே, ஒரு வேதாளம் புகுந்து, எமது ஊரில், உயிர்களையும் பயிர்களையும் அழிக்கிறது. யாராலும் அதை அடக்க முடியவில்லை. தேவரீர் தவத்திறலால் தான் அது முடியும்; அருள்புரிக" என்று திருவள்ளுவரை நோக்கி விண்ணப்பித்தான். அருளும் இரக்கமும் மிக்க நமது அருந்தவச் சித்தர், மார்க்க சகாயனுடன் புறப்பட்டார்; ஐந்தெழுத்தை ஓதி, இறைவனை வழுத்தியதும், வேதாளம் அலறி யோடி யொழிந்தது. பெரியார் அருளால் ஊர் பிழைத்தது. அன்பன் மகிழ்விற்கு அளவில்லை. வள்ளுவருக்கு மார்க்கசகாயன் மாமனாரானான்; தனது அருங் குணச் செல்வி **வாசுகியை** (பாப்பம்மாள்) வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினான். உலகிற்கு அறவழிப்பட்ட இல்வாழ்வைத் தாமே வாழ்ந்துகாட்ட விரும்பி, வாசுகியின் மாசறு கற்பைச் சோதித்தறிந்து, அவளை மனைவியாக ஏற்றார் வள்ளுவர். இருவரும் மைலாப் பூரில் அன்பும் அறமும், பண்பும் பயனுமாக நிறைந்த இல்லறம் நடத்தினர்.

## வள்ளுவர் இல்லறம்

வள்ளுவர்-வாசுகியின் இல்லற வாழ்வு, மனித சமுதாயத்திற்கே எடுத்துக்காட்டாம். ஆற்றுவ தாற்றி, அஞ்சுவ தஞ்சி, அறனிழுக்காது, அன்பும் பணிவும், அழகும் அடக்கமும், பொறுமையும் எளிமையும் பொலியும் இக் காதலர் வாழ்வு பேரின்பக் கற்பகம் போலத் தழைத்தது. **கபீர்தாஸ்** போல வள்ளுவர் தறி நெய்து, அதில் வந்ததைக்கொண்டு சிக்கனமாக வாழ்ந்தார். **"செய்யுந்தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்த்திடினே, நெய்யுந் தொழிற்கில்லை நிகர்"** என்கிறார் வள்ளுவர். சிலர் இதை மறுத்து, 'திருக்குறளில் நெசவைப்பற்றி எக்குறிப்பும் இல்லை; உழவைப் பற்றியே இருத்தலால், அவர் உழவுத் தொழிலே செய்திருக்கவேண்டும்; அதற்குத் தக்க நிலமும் கருவியும் தமது மாமனார் உதவி யிருக்கவேண்டும்' என்று ஊகிக்கின்றனர். வள்ளுவர் நெய்து பிழைத்ததாகவே பெரியோர் நம்புகின்றனர். ஒருதரம் சபாநாயகர் காளியுடன் திருநடனம் செய்தார்; இடையே குண்டலம் கழன்றது; காலைத்தூக்கி யாடி அதைச் சரி செய்தார். இஃதறியாத பெரியார், வள்ளுவரிடம் இதைப்பற்றி வினவினர்.

"இழைநக்கி நூல்நெருடும் ஏழை யறிவேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூற்று?"

என்று பொருந்தக் கூறி ஐயந் தவிர்த்தார் வள்ளுவர். இதனால் நெசவே வள்ளுவர் தொழிலென்பர்.

## பொறுமை

இப்பெரியார் பொறுமையைப் புல்லறிவாளர் சோதித்தனர்: ஒருநாள், நெய்த ஆடையை விலைகூறி நின்றார் வள்ளுவர். "என்ன விலை?" என்றான் ஒரு கொடியன். "நாலு

பணம்" என்றார் வள்ளுவர். ஆடையை வாங்கி இரண்டாகக் கிழித்து, "இப்போது என்ன சொல்லுகிறாய்?" என்றான், கயவன். "துண்டு இரண்டு பணம்" என்றார் அறிஞர். மீண்டும் துண்டை நாலாகக் கிழித்து, "விலை யென்ன?" என்றான் கொடியன். "ஒரு துண்டு ஒரு பணம்" என்றார் புலவர். "சீ, போ, கிழிந்தவேட்டி எனக்கு வேண்டா" என்று எறிந்தான் முரடன். துண்டுகள் விலைப்போக வில்லை. 'இன்று ஆண்டவன் அளந்தது இவ்வளவுதான்' என்று பொறுமையுடன் கிழிந்த துண்டுகளை எடுத்துக் கொண்டு வீட்டைநோக்கினார் வள்ளுவர். அந்தச் சிறுமதியாளனும் வாயுள்ளமட்டும் வசை மாரி பொழிந்தான். நிலத்தினும் பொறுமைகொண்ட வள்ளுவர், தீது செய்தவனுக்குத் தீமை நினைக்காமல் சாதுவாக வீடு சேர்ந்தார். புலவர் பொறுமையைக் கண்டு புல்லன் வெட்கினான்; பிழைவருந்தினான்; அத்துண்டுகளுக்குரிய தொகை தந்து, வணங்கிச் சென்றான். வள்ளுவர் பொறுமையாளர்; ஆனால் ஏமாளியல்லர். ஒரு குறும்பன், அவர் பொறுமையைப் பார்க்க, வாசுகியின் கையைப் பற்றி யிழுத்தான். பொறுமையாகப் பார்த்துக்கொண்டிருந்தாரோ வள்ளுவர்? இல்லை. சரியானபடி அக்கயவனைத் தவடை சுத்தி பண்ணி விரட்டினார். "அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல, இகழ்வாரைப் பொறுக்கவேண்டும் என்று பாடினீரே, ஏன் இப்போது அடித்தீர்?" என்றான் கயவன்.

> "செய்தக்க வல்ல செயக்கெடும்; செய்தக்க
> செய்யாமை யானுங் கெடும்"

ஆதலால் செய்ய வேண்டிய கடமையே செய்தேன். இன்றேல் நீ கெட்டுப் போவாய்" என்றார் வள்ளுவர்.

## வாசுகி மாண்பு

வாசுகியின் அடக்கமும், பணிவும், கற்பும் பொற்பும் உலகெலாம் கொண்டாடத்தக்கன. ஒரு நாள் வள்ளுவரது இல்லறப் பெருமையைக் காணக் **கொங்கணச்** சித்தர் வந்தார். வரும் வழியில், அவர் ஒரு மரத்தடியில் தங்கினார். மேலே யிருந்த ஒரு கொக்கின் எச்சம், சித்தர் தலைமேல் பொத்தென விழுந்தது. சித்தர் சினந்தார்; "கொக்கே, நீ சாம்பலாகக் கடவாய்" என்று சாபம் போட்டார். அவ்வாறே நிகழ்ந்தது. தமது ஆற்றலிற் பெருமை கொண்ட கொங்கணர், வள்ளுவர் வீட்டுமுன் வந்து பிச்சை கேட்டார். வாசுகி பிச்சை கொண்டுவந்தபோது, கணவன் அழைத்ததால், உடனே உள்ளே சென்று ஏவிய பணி புரிந்து வந்து பிச்சை யிட்டாள். தாமதத்திற்காகச் சித்தர் சினந்தார். **"கொக்கென்று நினைத்தாயோ கொங்கணனே?"** என்று சுருக்குக் கொடுத்தாள் வாசுகி. கொங்கணர் திகைத்துப் போனார். சினமொழித்தார்; இல்லறம் பெரிதா, துறவறம் பெரிதா என்ற ஐயத்தைத் தீர்த்துக்கொள்ளவே தாம் வந்ததை யுரைத்தார். வள்ளுவர் விருந்தாளியை முகமலர்ந்து ஏற்றுச் சில நாட்கள் இருந்து ஐயந் தீர்த்துக்கொள்ளச் சொன்னார். சித்தர், வள்ளுவர் இல்லறத்தின் மாசற்ற பெருமையைக் கண்டு வியந்தார். கணவனும் மனைவியும் இரு கண்கள் போலப் பொருந்தி யிருந்தனர்; அருந்தல், பொருந்தல், அனந்தலில் நிறைமுறையுடன் நடந்து நோயற்று வாழ்ந்தனர்; அறவழி நின்றனர்; நெசவில் வந்ததைக்கொண்டு மகிழ்ந்தனர்; எளிமையும் செம்மையும் பூண்டனர்; தீவினை யஞ்சினர்; நல்வினை யாற்றினர்; விருந்தோம்பினர்; வீண்வம்பில்லார்; பயனில சொல்லார்; பழி பகைகொள்ளார்; பசித்துண்பர்; சிந்தாது சிதறாது பொரு

ளைப்பேணுவர். மனைவி மனைத்தக்க மாண்பினள்; கணவன் சொற்கடவாள். வாசுகி, ஒருநாள் கிணற்றில் தண்ணீர்இழுத்துக்கொண்டிருக்கும்போது, வள்ளுவர் அழைத்தார்; அப்படியே கயிற்றைவிட்டு ஓடிவந்தாள் அம்மாதரசி. கயிறும் அப்படியே நின்றதாம்! மற்றொருகால், பழஞ்சோற்றிற்கு விசிறிபோடச் சொன்னார் வள்ளுவர். அவ்வாறே செய்தாள் வாசுகி. இன்னொரு சமயம், பட்டப்பகலில் கீழே விழுந்த நெய்குழலை விளக்கேற்றித் தேடி யெடுக்கச்சொன்னார் கணவனார். அவ்வாறே செய்தாள் மனைவி. இத்தகைய பணிவைக் கண்டு கொங்கணர் வியந்தார். "சித்தரே, இத்தகைய கற்பும் பணிவும், அன்பும் ஆதரவும்கொண்ட மனைவியிருந்தால், இல்லறமே நல்லறம்" என்றார் வள்ளுவர். கொங்கணர், இல்லற வுண்மை யறிந்து, வள்ளுவரை வணங்கிச் சென்றார். வாசுகி உயிர்பிரிந்த நாள், வள்ளுவர் மனமுருகிப் பாடியுள்ள வெண்பாவே அக்கற்பரசியின் பெருமையைக் காலச்சிலையில் பதிய வைத்துள்ளது.

"அடிசிற் கினியாளே, யன்புடை யாளே,
படிசொற் றவறாத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே, போதியோ!
என்றூங்கும் என்கண் இரா!"

## ஏலேல சிங்கம்

அந்நாட்களில், தமிழர் கப்பல் வாணிபத்தால் குபேரராயினர். அவருள் **ஏலேல சிங்கம்** என்னும் தனவணிகச் செல்வன் முதன்மை பெற்றவன். அவன், முன்னே இலங்கையை வென்று புரந்த ஏலேல சிங்கன் எனும் சோழவீரன் மரபினன்; தனது கப்பலில் கதர்நூல் ஏற்றுமதி செய்து பொருள் குவித்தான்; ஈகை மிக்கவன்; சிவ பக்தன்; குரு பக்தன். இவனிடமே வள்ளுவர் தமது தறிக்கு நூல் வாங்கி வந்தார். ஒரு நாள் வள்ளுவர் நூலுக்காக வந்த

போது, "**செட்டியார் வழிபாடு செய்கிறார்**" என்றாள் மனைவி. "**வழிபாடு வீட்டிலா, குப்பத்திலா?**" என்று வினவினார் புலவர். அதனைச் சிங்கன் கேட்டு, ஓடி வந்து, "ஐய, உண்மை; கைதான் மலர் தூவுகிறது; மனம் அலைகிறது. அதை நிறுத்த வழி காட்டவேண்டும், குருவே" என்று வள்ளுவரை அடிபணிந்தான். மாணவன் பக்குவமறிந்து வள்ளுவர், அவனுக்கு வேண்டிய உபதேசஞ் செய்தார். வள்ளுவர் அருளால் சிங்கனுக்கு **அழகானந்தன்** என்னும் குழந்தை பிறந்தது. அக்குழந்தையின் பொலிவை அவ்வூர் அரசன் கண்டு வியந்து பாராட்டினன். ஆசான் கட்டளையை அப்படியே நிறைவேற்றுவான் சிங்கன். "என் பின்னே ஆற்றில் நட"; 'சரி.' "மரத்தில் ஏறு; உச்சிக்குப் போ; பிடித்த கொம்பை விடு;" 'சரி, அப்படியே.' கடும் பஞ்ச காலத்தில், "நீ கட்டிவைத்திருக்கும் நெல்லை கொள்விலைக்கு (cost price) குறுணி ஏற்றமாக வில்," 'சரி.' நெல்முழுதும் விற்கப்பெற்றது; ஏராளமான பொருள் குவிந்தது; பஞ்சந் தெளிந்தது. "இப்போது நெல்லைக் குறுணி குறைத்து வில்;" 'அவ்வாறே' "விற்றுவந்த பொருளையெல்லாம் ஒரு தங்கக் கட்டியாகச் செய்; அதில் உன் பெயரைப் போடு; உடனே கட்டியை அப்படியே கடலில் தூக்கியெறி." அப்படியே நடந்தது. சில ஆண்டுகளாயின; ஒரு நாள், செம்படவர் பிடித்த மீன் வயிற்றில், பாசிபிடித்த கல் அகப்பட்டது. அவர் அதை ஏலேல சிங்கனிடம் கொடுத்தார். குளிக்கும் அறையில் அக்கல்லைப் பதித்தான் சிங்கன். நாளடைவில், பாசி நீங்கிப் பளபளத்தது கல். பிறகு அதில் அவன் பெயர் தெரிந்தது. வள்ளுவர் பெருமையும், பணிவின் சிறப்பும் விளங்கின. ஒரு நாள், சிங்கன் கப்பல் தரை தட்டியது. அவ்வூர் அரசனும், "உமது ஆசானிடம் போம்" என்றான். அவ்வாறே செய்தான் சிங்கன்; வள்ளுவர், "**ஏலேலையா**" என்று

கூறிக் கப்பலைத் தொட்டார். உடனே அது நேராக மிதந்தது. அன்றுமுதல், '**ஏலேலோ, ஏலையா**' என்ற மந்திரம் பாரமிழுக்கும் ஒவ்வொரு தொழிலாளியின் நாவிலும் ஒலிக்கிறது. தமது சீடன் பெருமையை இவ்வாறு உலகிற்கு விளக்கினார் வள்ளுவர்.

## திருக்குறள்

அக்காலத்தில், ஏசுதாசரான **தோமஸ் முனிவர்** மைலாப்பூரில் மாதாகோவில் கட்டி, கிறிஸ்து சமயோபதேசஞ் செய்துகொண்டிருந்தார். வள்ளுவர், பைபிளையும் கேட்டிருக்கிறார்; புத்த சமண மதங்களையும், வேதாந்த சித்தாந்த தத்துவங்களையும், கௌடில்யர் அர்த்த சாத்திரத்தையும், மனுதர்மத்தையும் நன்கு அறிந்திருக்கிறார்; நன்மாணுக்கர் வேண்டுகோட்கிணங்கி, வையத்தில் வாழ்வாங்கு வாழும் நெறியைத் **திருக்குறளாக** இயற்றி யருளினார்.

ஓதாதுணர்ந்த தெய்வப் புலவர், நீண்ட காலமாகக் குறித்து வைத்த அனுபவ உண்மைகளே திருக்குறள்; அது அவரது தனிப்புலமையில் ஊறி எழுந்த பொன்னருவியே. குறள் மணிகளை அதிகாரமாகப் பிரித்தவர் பிற்காலத்து உரையாசிரியர். தமது நினைப்புகளைக் குறட்பாக்களாக வார்த்து, மெருகு பிடித்து, நகாசு செய்து, நீண்ட காலம் உழைத்தே வள்ளுவர் ஒரு அற்புத நீதி நூலை உலகிற்கீந்தார். அவர் செய்தது குறள் ஒன்றே. அவர் இல்லறக்கனியும் **குறளே**. அவருடைய ஊனுடல் மைலாப்பூரில் மண்ணானது. ஆனால் அவரது அறிவுடலான குறளோ என்றுமுள்ளது. தமது குறளை அரங்கேற்ற வள்ளுவர் மதுரைச் சங்கத்திற்குச் சென்றார். ஔவையும் இடைக்காடரும் உடன் சென்றனர். வள்ளுவர் நூலைக் கேட்டு, கடைச்சங்கப் புலவர் வியந்துபோற்றினர்; அவரது ஊர், பெயர் வினவினர்.

"எந்தவூர் ? என்றீர் ; இருந்தவூர் நீர் கேளீர் :
அந்தவூர்ச் செய்தி யறியீரோ ?—வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாழும் பாழா யறும்"

என்றார் நமது ஞானமணிப் புலவர். மற்றும் அவர்கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பட் பட்டென்று பதில் வந்தது. முடிவில் புலவர்மணிகள் திருக்குறளைச் சங்கப் பலகையில் ஏற்றினர். பலகை மற்றெல்லா நூல்களையும் கீழேதள்ளிக் குறளுக்கே இடமளித்தது. திருக்குறளைத் தமிழ் வேத மெனப் போற்றி, சங்கப்புலவர் ஒவ்வொருவரும் ஒரு வெண்பா சாற்றிக் கொண்டாடினர். அதுவே **திருவள்ளுவ மாலை.** (தற்கால ஆராய்ச்சியாளர் சிலர், திருவள்ளுவ மாலை ஆதாரமற்ற தென்பர்). **"வள்ளுவன் வாயதென் வாக்கு"** என்றாள் கலைமகள். "வள்ளுவன் வாய்ச்சொல், செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்" என்றார் இறையனார். மதுரையை அப்போது ஆண்ட **உக்கிரப் பெருவழுதி**, குறளைக்கேட்டுப் பெருமகிழ்வெய்தி,

"நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னி ; வாய் வாழ்த்துக ; நன்னெஞ்சஞ்
சிந்திக்க : கேட்க செவி"

என்று புகழ்ந்தான். கபிலர், பரணர், நக்கீரர், கல்லாடர், மணிமேகலை பாடிய சாத்தனார், ஆசிரியர் நல்லந்துவனார், கீரந்தையார், மாங்குடி மருதனார், பாரதம் பாடிய பெருந் தேவனார், இடைக்காட்டுச் சித்தர், ஔவைப் பிராட்டியார் முதலிய அரிய பெரிய புலவர்மணிகளெல்லாம் திருக்குறளைப் பாமலரால் போற்றி நன்கு மதித்தனர்.

## புதிய ஆராய்ச்சி

இது காறும் சொன்னது பரம்பரைக் கதை. ஆராய்ச்சி யாளர் முடிபையும் அறிவாம். வள்ளுவர் கி. மு. 75-ல்

வைகாசி விசாகத்தில் பிறந்து, கி. பி. 36-ல் மாசி உத்திரத்தில் பர முக்தி பெற்றார். அவர் மதுரையில், வேளாளர் குலத்திற் பிறந்தார்; இயற்பெயர் **நெடுமாறன்.** வள்ளுவர் என்பது சாதிப் பெயரன்று; அரசாங்கம் கொடுத்த பட்டம். வள்ளுவர், வேளாளரான மார்க்க சகாயர் மகள் வாசுகியை மணந்து இல்லறங் காத்தார். அவரது தொழில் நெசவன்று, வேளாண்மையே. **"நாவில் இழைநக்கி நூல் நெருடும் ஏழை"** என்பதற்கு, நாவினால் பனுவல்களைச் செய்து, நூல்களை முடிக்கும் எளியேன் என்பது பொருள். வள்ளுவர் எல்லாக் கலைகளையும் கற்றுணர்ந்தவர்; பாண்டியன் **பெரும்பெயர் வழுதியிடம்** உள்நாட்டு மந்திரியாயிருந்தவர் (Home Minister); அரசன் வேண்டுகோட்கிணங்கியே திருக்குறளாகிய பொதுமறை யியற்றிச் சங்கத்தில் அரங்கேற்றினார். வீரத்தைச் சிறப்பாகக் கூறியிருப்பதால், வள்ளுவர் வாள் வீரருமாவார். பெரும்பெயர் வழுதி, கி. பி. 30-ல் காலஞ்சென்றான். அரசன் பிரிவைத் தாங்காமல், வள்ளுவர் மைலாப்பூருக்கு வந்து, தமது அரிய நண்பனான ஏலேல சிங்கனுடன் இருந்தார்; அங்கு ஒரு குருகுலம் கண்டு, மாணவர்க்குத் தமது குறளை உபதேசித்தார். வள்ளுவர் அறநெறியை வாழ்ந்து காட்டினார். வாசுகி காலஞ்சென்ற சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் முக்தி பெற்றார்.

பொருட்பாலை ஆராய்ந்தால், வள்ளுவர் அரசியல் நுட்பம் புலனாகும். வள்ளுவரைப்பற்றி வழங்கும் கதை, அறிஞர் முடிபு இவற்றை இங்கே குறித்தோம். ஆயினும், குறளே வள்ளுவர் வாழ்வும் உள்ளமும் எனக்கொண்டு பயன் பெறுக.

## இறுதி

ஒரு தெய்வப் புலவரை, அக்காலம் அவ்வாறு சிறப்பித்தது. வாசுகி காலத்திற்குப்பின் வள்ளுவர் துறவு பூண்டு,

அன்பருக்குக் குறட்பாக்களை உபதேசித்து வந்தார்; "இறுதி நாளில், உயிர் பிரிந்ததும் இவ்வுடலை காக்கை கழுகுண்ணும்படி புதரிற் போட்டுவிடுக" என்றார்; தமது உடலைத் தங்கப் பேழையில் வைக்க விரும்பிய சிங்களைத் தடுத்தார். குறித்த நாளில் உயிர் பிரிந்தது. யாக்கை காக்கைக்கே யிரையாயிற்று. ஆங்கே வள்ளுவர் கோயில் இன்று முள்ளது. வள்ளுவர் உலகின் உள்ளத்தில் குறள் வடிவாகக் கோயில் கொண்டுள்ளார்.

## குறள் மணிகள்

அறமே தகளி, பொருளே நெய், இன்பமே திரியாக விளங்கும் குறள்மணி விளக்கே வள்ளுவர்.

பாயிரம் 4 அதிகாரம், இல்லறவியல் 20, துறவியல் 13, ஞானம் 1, ஆக அறத்துப்பால் 38 அதிகாரத்திற்கு 380 குறள். அரசியல் 25, அங்கவியல் 32, ஒழிபியல் 13, ஆக பொருட்பால் 70 அதிகாரங்களுக்கு 700 குறள். களவியல் 7, கற்பியல் 18, ஆகக் காமத்துப்பால் 25 அதிகாரங்களுக்கு 250 குறள். முப்பாலும் சேர்ந்து 133 அதிகாரங்கள், 1,330 குறள்மணிகள் ஆம். மனிதன் பிறந்தது முதல் இறுதிமட்டும் காக்கவேண்டிய கடமைகளுக்கு வள்ளுவர் காட்டும் வழியை எளிய உரைநடையில் விளக்குவோம். வள்ளுவர் உள்ளத்தைப் பொதுவாக அனைவரும் எளிதில் உணர்ந்து பயின்று பயன்பெறச் செய்வதே இந்நூலின் நோக்கம்.

"எனைத்தானு நல்லவை கேட்க; அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்."

**தேவரும், தெய்வ நூலும்**
**முற்றிற்று.**

# நூல் 1

## கடவுள், வான், அறவோர், அறம்

---

### 1. கடவுளைப் பணிதலே கற்றதன் பயனும்.

நிலமிசை நீடு வாழ வழி காட்டுகிறார் வள்ளுவர். வழி? மனக்கவலை மாறவேண்டும். கவலை ஏன்? அறியாமையால் வரும் இருவினைக் கட்டால் கவலையுண்டாம். இக்கட்டு நீங்கும் வகை? கட்டற்ற தனிமுதல், அழியாப்பொருள் ஒன்றைப் பற்றவேண்டும். அழியாப் பொருள் எது? கடவுள். கடவுள் எங்கே உள்ளான்? பொதுவாக எங்கும், சிறப்பாக அவரவர் உள்ளமலரிலும் எழுந்தருளி யுள்ளான். உடல் கோயில், உள்ளம் சந்நிதி, இறைவன் மூர்த்தி. எல்லார் உள்ளத்தும் இறைவன் உள்ளான். அவன் என்றும் உள்ளவன். அவன் திருவடிப்பற்றுள்ளவர், உலகின் இருவினைக் கட்டின்றி நீடு வாழ்வார்.

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

உலகின் முதல்வன் இறைவன். ஒரு உதாரணம் காட்டுவோம்: உலகில் பல மொழிகள் வழங்குகின்றன. அவற்றின் வரிவடிவம் பல. எனினும், எல்லாம் **அகர** வொலியையே முதன்மையாகக் கொண்டன. வேதசாரம் **ஓம். அ, உ, ம்,** மூன்றும் சேர்ந்தது ஓம். "ஓரெழுத்தான ஓமே பிரமம்" என்கிறது வேதம். அந்த ஓமிற்கும் தாய் ஒலி அகரம். ஒரு குழந்தை முதலில் பேசுவதும் **அ....ம்....மம்....மா.** "எழுத்துக்களில் நான் அகரம்" என்கிறான் கண்ணன்.

பலவான ஒலிகளுக் கெல்லாம் அகரம் முதன்மையாக இருக்கிறது. அதுபோலவே, பலவான உலகிற்கெல்லாம் முதல்வன் **ஆதி பகவன்.**

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

ஆதிபகவன் அருளிறைவன். **ஆதி** என்றால், முதல், தொன்மை, கதிரவன், ஆதி பராசக்தி எனப் பொருளாம். **பகவன்** என்ற மொழி, அரன், அரி, அயன், குரு, அருகன், புத்தன், அல்லா, பரமபிதா, யகோவா, அனைவருக்கும் பொருந்திய கடவுட் பெயர். அறிவு, நிறைவு, ஆட்சி, ஆற்றல், செல்வம், வைராக்கியம் இவை பகவன் பெருமை. தான் எதனின்றும் தோன்றாதவன், அனைத்தையும் தோற்றியவன், மூலப் பழம் பொருள், அவனே **ஆதி பகவன்.** அவனையே, "அந்தப் பரமாத்ம ஞாயிறு" (**தத் ஸவிதுர் வரேண்யம்**) என்று காயத்திரி மந்திரம் சிறப்பிக்கிறது. இறைவன் இருந்தபடி யிருப்பவன். **ஆதி** யாகிய தனது அருட் சக்தியால் ஐந்தொழில் புரிந்து, யாங்கும், யாது மாய் விளங்குகிறான். இறைவன் எண்குணத்தான். சுயேச்சை, கட்டின்மை, இயலுணர்வு, தூய அருளுடம்பு, முற்றறிவு, எல்லாம் உடைமை, பேராற்றல், நிறை யின்பம், இவை எண்குணம். அவன் தானே தானான தன்னிலையில் வாய்மனங் கடந்தவன்; ஈரறக் கலந்த இன்பத் தூயருக்கே உணர நிற்பவன். இயற்கையை உடலாகக் கொண்டு விளங்கும் போதே அவனை வழுத்தி வணங்க வல்லோம். ஐம்பொறி யடக்கிய ஞான தீரரான குருமார்கள் மூலமும் அவன் அருள் புரிகிறான். அருவாக, அருவுருவாக, குருவாக, எவ்வகை யாகவேனும் இறைவனைப் பற்றுக. "என்னையே அன்புசெய்; என்னையே நினை, பணி,

நம்பு, துதி; செயற்பயனை எனக்கே நிவேதி, என்னைச் சரண்புகு; தீவினை மாற்றி விடுதலை தருகிறேன். என்னடி புகுந்தோரே மாயையைத் தாண்டுவார். என்னன்பர் அழிவுறார், நீடு வாழ்வார்" என்பதே கண்ணன் பொன் மொழி. எவ்வளவு கற்றாலும் மாந்தர் அறிவு சிற்றறிவே. இறைவன் முற்றறிவன். அவனடி பணிதலே கற்றதன் பயனாகும். உலகவாழ்வு, விருப்பு வெறுப்பு என்னும் இரு கரை வழியே சென்று இடும்பைப் படுகிறது. இடும்பை தீரும் வழி என்ன? விருப்பு வெறுப்பில்லாத பரிபூரணன், எல்லார்க்கும் பொதுவான இறைவன் திருவடியைப் பற்று தலே வழியாம்.

> வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
> கியாண்டு மிடும்பை யில.

இரவிமுன் இருள் நிற்காது. இறைவன் மெய்ப்புகழ் போற்றுவாரிடம் இருள்சேர் இருவினைகள் சேரா. பொறி வாயில் ஐந்தையும் அடக்கி வென்ற குருமார்கள் மூலம் அவன் மெய்ந்நெறி காட்டுகிறான். அந்த உண்மையான வழியில் நின்றொழுகும் தூயர், கவலை, பிணி, கட்டு, துயர் இன்றி நிலமிசை நீடு வாழ்வார். எவ்வாற்றானும் தன்னி கரற்றவன் இறைவன். அவனடிப் புகுந்தாலேதான் மனக் கவலை தீரும்.

> தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
> மனக்கவலை மாற்ற லரிது.

பிறவிக்கடல் தாண்டுவ தரிது. இறைவன் திருவடித் தோணிபற்றியே அதைத் தாண்டமுடியும். அவன் அறக் கடல், அந்தணன், இனிய தன்மையன், எண்குணன். அவனை உணராப் பொறியும், வணங்காத் தலையும் குண மில்லை. "தலையே நீ வணங்காய்" என்றார் **அப்பர்**. அவ

லேயே நினைந்து, அவனடிப் புகுந்து, அவன் புகழ் ஓதும் நல்லாரே, இருவினைக் கட்டின்றி, மனக்கவலை மாறி, மெய் வழி யறிந்து, பொய்வழி தவிர்த்து, பிறவிப் பெருங் கடலைத் தாண்டிப் பேரின்பம் பெறுவர்.

பிறவிப் பெருங்கட னீந்துவர் ; நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

தூண் பிடித்தாடும் சிறுவர் போல, இறைவன் திருவடி பற்றி வாழுதலே, எல்லாச் சமய சாரமும் ஆகும்.

இன்பந் தருவ திறைவன் மலரடி.

## 2. வான்மழை யின்றி வாழுல கில்லை

வாழ்வின் நிலைக்களன் உலகம். அதை வாழவைப்பது வானமுதம், மழை. மழை இறைவன் அருளிற்கு அறிகுறி. கடல், கதிர், காற்று இவற்றின் பெருமையும் வான் சிறப்பில் அடங்கும். இவை எல்லையற்ற திருவருட் சக்திக்கு அறிகுறி. கதிர் வெப்பத்தால், கடல் ஆவியாகி, மேகமாகி, மழை பொழிகிறது. மழையின்றேல் வற்றாக் கடலும் தன்னியல்பிற் குன்றும். மழை, பிழைக்கும் உயிர்களுக்கு இனிய உணவுப் பொருள்களைத் தருகிறது; தானே நல்லுணவாகிறது. மழை பெய்யாவிட்டால், பசும் புல் கூட முளையாது; ஏர்த்தொழில் நடவாது. பருவ மழை பொய்த்தால், உயிர்களைப் பசி வாட்டும்; தானம், தவம், வழிபாடு இவை நடவா. பெய்யாமல் கெடுப்பதும் மழை; அப்படிக் கெட்டவர்களைத் தனது வண்மையால் கைதூக்கி விடுவதும் மழை. தண்ணீரின்றி மண்வாழ்வில்லை. விண்ணின்றித் தண்ணீரில்லை.

நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

அறம் பொருள் இன்ப வாழ்விற்கு உயிர்த் தாரை போன்ற மழையை வாழ்த்துவோம். மன்னுயிர் வாழ விண்பால் பொழிக!

## 3. துறந்தார் பெருமை தோல்புவிப் பெருமை

மெய்வழி காட்டுவோர் செய்ய மா முனிவர். அறத்தின் காவலர் அருந்தவப் பெரியார். அறிவென்னும் அங்குசத்தால் ஐம்பொறிகளைப் புறஞ்செல்லாது காப்பவர்; ஐம்புல வேட்கைகளை அறவே துறந்தோர்; அழிபொருள் விடுத்து மெய்ப்பொரு ளடைந்தோர்; நான் எனதென்னும் ஆணவம் ஒழிந்தோர்; இம்மை மறுமைப் பயன்களைத் தெளிந்தோர்; அறிவு, அடக்கம், அவாவின்மை முதலிய அரிய குணமலையின் உயரஞ்சென்று நிலைத்தவர்கள்; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய தன்மாத்திரைகள், ஐம் பூதங்கள், ஞான கருமேந்திரியங்கள், அந்தக் கரணாதிகளின் காரியமே இயற்கை புலமென்றறிந்து, அவற்றைத் தாண்டி, ஆன்ம மயமாகி முக்குணப் போராட்டத்தில் ஒட்டா திருப்பவர்—இவரே முனிவர், அறவோர், துறவோர், அந்தணர், நீத்தார்ஆவர். "மாசற்ற மதியுடையோன், தன்ன டக்க முடையோன், ஓசை முதலிய விஷயாதிகளை நீத் தோன், விருப்பு வெறுப்பில்லாதவன், மனவுறுதியாளன், ஆசையாணவமற்றவன், நடுநோக்காளன், முக்குணமாயை யில் பற்றில்லாதவன், உபசாந்தன், அவனே பிரமத்தை யடைந்த முனிவன்; அவன் அனைத்தையும் தன்னிலும், தன்னை அனைத்திலும் காண்போன், சமரசன், அனைத்துயிர் களுக்கும் இனிதே செய்யும் அருளாளன்" என்று **கீதை, உபநிடதம், பாகவதம்** முதலிய நன்னூல்கள் முனிவர் இலக்

கணத்தை விளக்குகின்றன. இவ்வாறு முனிதர்மத்தில் விளங்கும் துறவிகளையே நன்னூல்கள் பெருமைப் படுத்துவ. உலகில் இறந்தவர் கணக்கை எடுக்க முடியுமா? அதுபோலத் துறந்தவர் பெருமையும் சொல்லற் கரிது. நிலைப்பது-அழிவது, மெய்-பொய், இம்மை-மறுமை என்னும் இருமை வகை தெரிந்து, தெளிந்து, துறவறம் பூண்ட பெரியார் பெருமையால் உலகமே ஒளி பெறும்.

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

அவர்கள் மேலான முத்தி நிலத்தின் வித்து. அப்படி ஐம்புலனடக்கிய முனிவர் ஆற்றல் மிகப் பெரிது. தேவர் தலைவனை தேவேந்திரனையும், கௌதம முனிவர், சொல் வன்மையால் தண்டித்தாரல்லவா? உண்மையான முனிவருக்கே உலகம் அடங்கி நடக்கும்.

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

அவர் மொழி நிறை மொழி. அவர் பெருமையை அருள்வாக்கான மறைமொழியே காட்டும்.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

அவர்கள் சொன்னது பலிக்கும். அவர்கள் சினந்தால், உலகம் ஒரு கணம் தாங்காது. அடங்கிய முனிவர் அருஞ்செயல் புரிவர். சிற்றுலகின்பமே தேடும் சிறியர் அவ்வாறு செய்யார்.

செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

இத்தகைய அறவோர், இனிய தன்மையுள்ள அந்தணராவர். தாம் அறவழி நின்று, அருளாளராகி, மற்றெல்லா

உயிர்களுக்கும் இன்னருள் கொண்டு ஈடேறத் துணைசெய் வார் அந்தண் முனிவர்.

> அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
> செந்தண்மை பூண்டொழுக லான்.

அந்தண் அறவோர் ஆருயிர்க் கினியார்.

## 4. அறத்தால் வருவதே யின்பமென் றறிக

இத்தகைய அருளாளர் மெய்யுரையே **அறம்**. அறம் கடவுளின் சட்டம்; உயிர்வாழ்விற்குச் சீரும் செல்வமும் தரும்; இம்மை மறுமைப் பயன் நல்கும். அறத்தினும் ஆக்க மில்லை. அறத்தை மறந்தால் அழிவு விளையும்.

> அறத்தினூஉங் காக்கமு மில்லை; யதனை
> மறத்தலி னூங்கில்லை கேடு.

"இந்த அறத்திற் சிறிது செய்தாலும், அது பெரிய இடர்களினின்று அன்னோரைக் காப்பாற்றும்" என்கிறான் கண்ணபெருமான். "ஒல்லும் வகையான் அறஞ்செய்க" என்கிறார் வள்ளுவர். மனமொழி மெய்யால், இடைவிடாது முடிந்தமட்டும், அறவினை செய்க. 'முடிவுகாலத்தில் பார்த் துக்கொள்வோம்' என்று ஆலசியமா யிருக்கவேண்டா. உயிர் பிரிந்து செல்லும் போதும்,அறத்தின் பயன் அழியாது துணைநிற்கும். பூவினின்று காற்று மணத்தை எடுத்துச் செல்வதுபோல, மனத்தையும் வினைப்பயனையும் உயிர் கொண்டு செல்கிறது. தருமம் தலைகாக்கும். காலம் வீணாகாது நல்லறஞ் செய்க. அது பவ நெறி தவிர்க்கும் பெருந்துணையாகும். அறஞ் செய்தவன் யார் என்று சொல்லவேண்டுவ தில்லை; பல்லாக்குச் சவாரி செய்வா னையும்; அதைச் சுமந்து செல்வானையும் கண்டு தெளிக. அதாவது, நல்லறம் பல்லாக்கேற்றும்; இம்மையில் சீரும்

சிறப்புந் தரும். தீவினை ஒருவனை இழிவாக்கும். ஆதலின் உலகில் செய்யத்தக்கது அறம். விலக்கத்தக்கது பழி, பாவம், அதர்மம்.

அறமாவ தென்ன? மனத்தில் மாசற்று நடத்தலே அறம்; மற்றதெல்லாம் வீண் பகட்டு, துன்பம். "மாசறு மனத்தார் வாழ்க; ஈசனைக் காண்பார்" என்றார் ஏசு நாதர்.

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்,
ஆகுல நீர பிற.

மாசுகள் எவை? அவை, பொறாமை, பேராசை, கோபம், கடுஞ்சொல்; இப்பிழைகளை ஒழித்தால்தான் நல்லறம் இயலும்.

அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்.

இத்தகைய அறத்தினால் எய்தும் வாழ்வுப்பயனே இன்பமாகும். அதர்மம், துன்பமாகும், புகழாகாது.

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.



## நூல் 2

## அறநெறி யொழுக்கம்

---

### 5. ஒழுக்கமே உயிரினும் உயர்வெனப் போற்றுக

வாழ்வு தொடக்கத்தினின்றே அறவழி யொழுகி, இறுதியில் அறத்தின் ஆழியான இறைவன் திருவடியிற் கலக்கவேண்டும். குழந்தைப் பருவத்தினின்றே நல்லொழுக்கம் பிடிபடவேண்டும். இல்லறம் புகுமுன் ஆண் பெண் இருவருக்கும் நல்ல நடையுடை பாவனைகளும், போதிய கல்வியும் இருக்கவேண்டும். அத்தகைய நல்லொழுக்கமும், கல்வியறிவும், ஆற்றலும் நன்கு வளர்ச்சிபெறுவதற்கே ஆன்றோர் பிரமசரிய ஆசிரமத்தை முன் வகுத்தனர். முதலில் ஒழுக்கம், பிறகு கல்வியறிவு ஆகிய இரண்டுமில்லா இல்லறம், கண்ணும் கையும் இழந்த வாழ்வைப்போலாகும். என்று பிறந்தோமோ அன்றே ஒழுக்கமும் பிறக்கிறது. பெற்றோர், ஆசிரியர், நண்பர் கூட்டுறவாலும், கல்விப்பயிற்சியாலும் அந்த ஒழுக்கம் மேன்மேலும் வளருகிறது. குழந்தையின் இயல்பைப் பெற்றோர் கண்ணுங் கருத்துமாகக் கவனிக்கவேண்டும்; தாமும் நல்லொழுக்கத்தை நடந்து காட்டவேண்டும். வாய்மை, நாண், பண்பு, அடக்கம், நன்றி, நடுநிலை, சான்றாண்மை முதலிய ஒழுக்கங்கள் இளமையிலேயே நன்குப் பிடிபட்டு இயல்பில் அமையவேண்டும்.

சாதி, மதம், நிறம், பிறப்பு வேற்றுமையே பார்க்க வேண்டா. ஒழுக்கத்தைப் பார்த்தே மனிதனை அறியலாம். ஒழுக்கம் உயர் குலம். இழுக்கம் இழிகுலம். ஒழுக்கமே

ஒருவனுக்கு மேன்மையும் புகழுந் தரும். ஒழுக்கத்தை உயிரினும் பெரிதாகக் காக்க வேண்டும்.

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினு மோம்பப் படும்.

ஒழுக்க முடைமை குடிமை; யிழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

ஆதலால் ஒழுக்கத்தைப் பரிந்து காப்பாற்றுக. கற்றறிந்து தெளிந்தவர்க்கும், ஒழுக்கமே நற்றுணையாகும். வேதத்தை மறந்தாலும் மீண்டும் ஓதி யறியலாம். ஒரு பார்ப்பான், தனக்குரிய பிறப்பொழுக்கத்தில் குன்றினால் வீழ்ச்சி யடைவான். ஆதலால் கல்வியினும் ஒழுக்கமே மேல். அழுக்காறுடையானுக்கு ஆக்கமில்லை. ஒழுக்கமில்லானுக்கு உயர்வில்லை. உறுதியுள்ளவன் ஒழுக்கங் குன்றான். ஒழுக்க முள்ளவன் மேன்மை பெறுவன். ஒழுக்கங் கெட்டவன் பெரும்பழி சுமப்பன். நன்மைக்கு வித்து நல்லொழுக்கம். தீயொழுக்கம் என்றும் துன்பமாம்.

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும்.

நல்லொழுக்கப் பெரியார், வாய் தவறிக்கூடத் தீமை சொல்லார்; மன மொழி மெய் மூன்றிலும் செம்மை காப்பர்.

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

அறிவாளிகள் உலகிற்கு எதிரிடையாக நடக்க மாட்டார்கள்; உலகை அனுசரித்து நடப்பர். உலகம் என்பது உத்தமப் பெரியார். பல கற்றும், அவ்வாறு உலகத்தை ஒட்டி ஒழுங்கு முறையாக நடக்கத் தெரியாதவர் அறிவில்லாதவராவர்.

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

இனி, அனைவருக்கும் இன்றியமையாத அடிப்படையான ஒழுக்கத்தை விளக்குவாம்.

## 6. வாய்மையே அறத்தின் தாயக மாகும்

மன மொழி மெய்யால் பொய்யா தொழுகினால், வேறு அறம் செய்யவேண்டிய தவசியமில்லை. "உண்மையைக் காட்டிலும் உயர் அறம் இல்லை" (ஸத்யாந் நாஸ்தி பரோ தர்ம:) என்பது வேதவாக்கு.

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

நெஞ்சார அறிந்ததை மறுத்துப் பொய் சொல்லற்க. அப்படிப் பொய்த்தால், தனது மனச்சாட்சியே தன்னைச் சுடும்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க: பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

உள்ளொன்றுவைத்துப் புறமொன்று செய்யாது, உள்ளார மெய்வழியில் நடப்பவன், மனச்சாட்சிக்குப் பொய்யாது நடக்கும் உண்மையாளன், உலகத்தார் உள்ளத்தில் எல்லாம் இருப்பான். அதாவது, அவனை உலகம் சத்திய வந்தனென்று நினைத்துப் போற்றும்.

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்.

மனதார உண்மை சொல்பவன், தானம், தவம் செய்தவர்களைவிட மேலானவனாகிறான். ஏனெனில், பொய்யாமை போன்ற புகழில்லை. உடலை வருத்தித் தவஞ் செய்யா

மலே அது எல்லா அறப்பயனையும் நல்கும். உடலைச் சுத்தம் செய்வது தண்ணீர். மனதைச் சுத்தம் செய்வது உண்மை.

புறந்தூய்மை நீரா னமையும்; அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

ஆனால், வாய்மையைக்கூட ஆராய்ந்து பேசவேண்டும். பிறர்க்குத் தீங்கு நேரிடுமானால், அதையும் பேசாமல் இருக்க வேண்டும். யாதும், யார்க்கும் தீமையில்லாது பேசுதலே வாய்மை.

வாய்மை யெனப்படுவ தியாதெனில், யாதொன்றும்
தீமை யிலாத சொலல்.

கொலையாளிக்குப் பயந்து ஒருவன் நமது வீட்டில் அடைக்கலம் புகுகின்றான். கொலையாளி வந்து, 'ஆள் இருக்கிறானா' என்று கேட்கிறான். அப்போது உள்ளதைச் சொன்னால் என்னவாகும்? கொலைப்பழி வரும். இத்தகைய சந்தர்ப்பங்களில் உள்ளதைச் சொல்லாதிருப்பதும் நல்லதாகும். அதே சாக்குவைத்து, தன்னலத்துடன் பொய் பேசக்கூடாது. உண்மையைக்கூடப் பிறர் மனம் நோகாது, கலகம், தீங்கு, அபாயம் நேராது பேசவேண்டும் என்பது கருத்து. அதனாலேதான் "**புரை தீர்ந்த** நன்மை பயக்குமெனின், பொய்மையும் வாய்மையிடத்த" என்றார். கதிர், மதி, மீன், மின்விளக்கு, நெய்விளக்கு ஆகிய விளக்குகளெல்லாம் புறவிருளைத்தான் போக்கும். உள்ளத்தால் பொய்யாத மெய்விளக்கு, அகவிருளை நீக்கி, ஞானச்சுடர் விரித்தோங்கும். அதனாலேதான் சான்றோர் சத்தியத்தையே மெய்விளக்கெனக் கொண்டாடுவர். உலகில் எத்தனையோ பொருள்களைக் கண்ணுக்கு மெய்யாகப் பார்த்திருக்கிறோம். எனினும், வாய்மையைவிட உயர்ந்த பொருள்

இல்லை. புத்தர், ஏசுநாதர், நபிநாயகம், பரமஹம்ஸர், குருநானகர், அப்பர், திருமூலர் போன்ற மகான்களெல்லாம் எதனால் சிறந்தனர்? புவிப் பொருளாலா? இல்லை. தாம் மனதாரக்கண்ட சத்தியத்தை நடந்துகாட்டிப் பிறரையும் நடக்கும்படி செய்ததனாலேயே அப்பெரியோர் சிறந்தனர். உண்மையே உயர்வு. உண்மையே வெற்றி.

மன மொழி மெய்யில் வாய்மை வாழ்க!

## 7. நன்னடத்தைக்கு நாணமே வேலி

பழி பாவத்தை நாணி நடக்கவேண்டும். செய்யத்தகாத காரியத்தைச் செய்ய நாணவேண்டும். இத்தகைய நாணத்தால் தீமைகள் குறையும். ஊண், உறக்கம், மக்களைப் பெறுதல் முதலிய காரியங்கள் எல்லா வுயிர்களுக்கும் பொதுவாம். நாணமே மாந்தர் சிறப்பு. உயிர்களெல்லாம் ஊனுடலை இருப்பிடமாகக்கொண்டு வாழும். பெருந்தன்மைக்கு நாண் என்னும் நல்லொழுக்கமே இருப்பிடம். சான்றோர்க்கு நல்லணி நாணம். நாணமில்லாத செருக்கு நடை, கொடிய பிணியைப்போல நலத்தையெல்லாம் தேய்க்கும்.

> அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
> பிணியன்றோ பீடு நடை?

தம்மால் பிறர்க்குப் பழிவராமலும், பிறர் தம்மைப் பழிக்க இடமில்லாமலும் கவனமாக, மட்டு மரியாதையுடன் நடப்பவரை, 'இவரே நாணமென்னும் நற்குணத்திற்கு உறைவிடம்' என்று உலகம் மதிக்கும். இந்த நாண் வேலி யில்லாது, பெரியார்கள் உலகைக்கொடுத்தாலும் வேண்டார். அதாவது, வெட்கமில்லாது, இன்னொருவன் நிந்திக்கும்படி, அகௌரவமான வழிகளால், உலகரசே தமக்குக் கிடைப்பதானாலும், பெரியோர் மறுத்துவிடுவர். நாண

முள்ளவர் உயிரைத் துறந்தாலும் துறப்பர்; மானத்தை விடமாட்டார்கள். உயிரினும் நாணமே பெரிது. பிறர் கண்டு 'சீ, சீ,' என்று வெட்கி வெறுக்கும் காரியத்தை ஒருவன் செய்ய நாணவேண்டும். இல்லாவிட்டால், தரும தேவதை அவனைக் காண நாணும்.

பிறர்நாணத் தக்கது தானுணா னாயின்,
அறநாணத் தக்க துடைத்து.

ஒழுக்கந் தவறினால் குலங்கெடும். நாணந் தவறினால் நலங்கெடும். நாணமற்றவர் உயிர்கொண்டு நடமாடுவது, கயிறுகட்டி யாடும் பொம்மலாட்டம் போல வெறும் போலி நடமாட்டமாகும்.

நாணகத் தில்லார் இயக்க மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று.

இந்த நாணென்னும் குணம் வாழ்விற் பதிந்தால், ஒருவரை யொருவர் மதித்து நடப்பர்; பஞ்சமா பாதகங்கள் ஒழியும். சட்டதிட்டம், காவல், நீதிமன்றம், படைகளில்லாமலே, மாந்தர் மனச்சான்றின்படி பழிபாவத்திற்குப் பயந்து நடந்து ஒற்றுமையாக வாழுவர்.

நாகரிகத்தின் நல்லணி நாணமே.

## 8. பண்பொடு நடந்தால் அன்பொடு மதிப்பர்

மாந்தரை மாந்தர் மதித்து, மரியாதையுடன், அன்பும், ஆதரவுங்காட்டி யொழுகுதலே பண்பு. நம்மை நாடி வந்தோரை அகமகிழ்ந்து, முகமலர்ந்து தாராளமாக வரவேற்க வேண்டும். அத்தகையோருக்குப் பண்பு மிகும். பண்பிற்குத் தக்கபடி அன்பும் குலமாண்பும் ஓங்கும். புற வுறுப்புக்களில் ஒத்திருத்தலன்று; ஒருவருக்கொருவர் பண்பு கொண் டொழுகுவதே மாந்தரை ஒன்றுபடுத்தும். நீதியும் அறமும் புரிந்து, பலர்க்கும் பயன்பட வாழுவோரின் பண்பை உலகம் பாராட்டும்.

நயமொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

பிறர் இயல்பறிந்து நடக்கும் நல்லார் பகைவரிடத்தும் பண்புடன் நடப்பர். விளையாட்டிற்குக்கூடப் பிறரை இகழ மாட்டார்கள். ஏனெனில், நகையுள்ளும் இகழ்ச்சி இன்னலாகும். உலகியல், பண்புள்ள நல்லோரால் நடக்கிறது. இன்றேல் அது கெட்டு மண்ணாகி மாயும், அரம்போலக் கூர் மதியாளரேனும், மனிதருக்குரிய பண்பில்லாதவர் மரக் கட்டைக்குச் சமானமேயாவர்.

அரம்போலுங் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

நட்பின்றிப் பகை செய்வாரிடமும் அறிவாளிகள் பண்பின்றி நடக்கமாட்டார்கள். புன்னகையுடன் பிறரோடு கலந்து மகிழா மாந்தர்க்கு, இப்பெரிய நிலம் பட்டப் பகலிலும் இருளின்பாற் பட்டதாகும்.

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

பிறர்க்குதவும் பண்பில்லாத லோபியின் பெருஞ்செல்வம், தீய கலத்தில்வைத்த நல்ல பாலைப்போலத் திரிந்து கெடும்.

பண்பில்லான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

ஆதலால் அறிஞர், செல்வர், பொதுநலவீரர் யாவர்க்கும் பிறரை நன்குமதித்துப் பண்புடன் நடத்தல் கடனாகும்.

## 9. அடங்கி நடத்தலே அறிவிற் கழகு

கற்றறிந் தடங்கி நடத்தல் மாந்தர் கடமை. இடம்பமும், ஆரவாரமும், பகட்டும், மினுக்கும், வாய்நீளமும் வாழ்

வைக் கொடுக்கும். அடக்கமே ஆக்கம். அடக்கம் அமரருடன் சேர்க்கும்; அடங்காமை ஒருவனைக் கொடிய இருளில் வீழ்த்தும். ஆதலால் அடக்கமே பொருளாகக் காக்க வேண்டும். கோபமில்லாதவனாகி, கற்றறிந்து அடங்கி நடப்பவன் பெற்றியைப் பார்க்க, சமயம்பார்த்து, தருமதேவதை வீடு தேடி வரும்.

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

அறிவதறிந்து நல்வழியில் அடங்கி நடப்பவன் சீர்மை பெறுவான். எல்லார்க்கும் பணிவு நல்லது. செல்வருக்கோ, அது இன்னொரு செல்வச் சிறப்பாகும்.

எல்லார்க்கு நன்றும் பணிதல்; அவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

முதன்மையாக ஒவ்வொருவருக்கும் நாவடக்கம் வேண்டும். அடங்கா நாக்குக் கரும்பாம்பாகும். ஒருவன் எதைக் காக்காமற்போனாலும் போகட்டும், நாவைக் காக்கவும்; இல்லாவிட்டால் சொல்லிழுக்குப் பட்டுத் துன்புறுவன்.

யாகாவா ராயினு நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

ஒரு தீச்சொல் நன்மையனைத்தையும் கெடுக்கும். தீச்சுட்டபுண் ஆறிப்போகும். நாச்சுட்ட வடு மாறாது, உள்ளிருக்கும்.

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும்; ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.

மனமடங்கவேண்டும். நாலுகால், தலை ஆகிய ஐந் துறுப்புக்களையும் ஆமை உள்ளே இழுத்துக்கொள்ளும்.

அதுபோல், ஒருமைப்பட்ட மனவுறுதியால் ஐம்பொறி களைப் புறஞ்செலுத்தாது உள்முகப்படுத்த வல்லவனானால், எழுமையிலும் இன்பம் பெறுவான். எழுமை என்பதை எழு பிறப்பென்பர். ஆனால் அவ்வாறு ஐந்தடங்கி ஒரு மனப்பட்ட யோகி பிறப்பற்றவனாகிறான். ஆதலால் எழுமை என்பது எழு ஆதாரநிலைகள் என்றும் பொருளாம். அவ்வாறு மனமடங்கிய யோகிக்கு, குண்டலி சக்தி யெழுந்து, ஆறு ஆதாரகமலங்களையும் மலர்த்தி, ஏழாவதான ஸஹஸ்ராரத்தில் ஜீவாத்மாவுடன் கலந்து பேரின்ப மளிக்கும். இதுவே எழுமையின் ஏமாப்பு என்றறிக. "ஆமை அங்கங்களை உள்ளே யிழுத்துக்கொள்வதுபோல இந்திரியங்களை அடக்கியவன் நிலைத்த ஞானி" என்று கீதை சொல்லுகிறது.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்,
எழுமையும் ஏமாப் புடைத்து.

இவ்வாறு தன்னிலை திரியாது உள்ளடங்கி நிலைத்தவன் காட்சி, மலையினும் மிகப் பெரிதாகும்.

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்,
மலையினு மாணப் பெரிது.

## 10. நன்றி செய்தாரை யென்றும் மறவேல்

நாம் ஒரு உதவியும் செய்யாமலிருக்க, நமக்குச் சமயத்தில் ஒருவர் உதவினால், அவ்வுதவிக்கு உலகும் வானும் கொடுத்தாற்கூட ஈடாகாது.

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

பயனைக்கருதாது, எதிர்பார்ப்பின்றி, செய்த உதவியின் நன்மை கடலினும் பெரிது. கடல் எதுவும் எதிர்

பாராது மேகங்களுக்குத் தனது ஆவியைத் தந்து உலகிற்கு வான் வழங்கச் செய்கிறதன்றோ !

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்,
நன்மை கடலிற் பெரிது.

தக்க சமயத்தில் ஒருவர் செய்த சிற்றுதவியும், உலகினும் மிகப்பெரிது.

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

இதனால் உதவிசெய்வோர், பயன் கருதாது, சமயம் பார்த்து, உபகாரம் செய்யவேண்டும். அவ்வுதவி, பயிர்களை விளைவித்து உயிர்களைக்காக்கும் நிலத்தினும், அந்நிலத்தைச் செழிப்பிக்கும் மழையினும், அம்மழை வழங்க மேகத்திற்கு ஆவிதரும் கடலினும் பெரும் பயனளிக்கும். இத்தகைய உதவி தினைத்துணையாயினும், பயனறிந்த நல்லார் பனைத்துணையாகக்கொண்டு நன்றிபாராட்டுவார். பெற்றவர் தகுதியே உதவிக்கு அளவு. பாத்திரமறிந்து உதவி செய்க. மாசற்ற பெரியார் நட்பை மறவற்க. துன்பத்தில் உதவிய நல்லோர் நட்பைத் துறக்கவேண்டா.

மறவற்க மாசற்றார் கேண்மை ; துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

துன்பந் துடைத்தவர் நட்பை நல்லோர் எழு பிறப்பிலும் நன்றியுடன் நினைப்பர். கொன்றார் போலக் கெடுதல் செய்தாலும், ஒருவர் செய்த ஒரு நன்றியை நினைக ; தீமை கெடும். நன்றிமறவேல். தீமையை உடனே மறக்க மறவேல்.

நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்ல (து)
அன்றே மறப்பது நன்று.

ஏனெனில், எந்த நலத்தைக் கெடுத்தவர்க்கும் உய் வுண்டு. செய்ந்நன்றி கொன்ற மனிதனுக்கு உய்வில்லை.

> எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

இவ்வாறு, பயன்கருதாது, காலத்தில் தக்காருக்கு உதவிசெய்தல் வேண்டும். பிறர் நமக்குச் செய்த உதவியை நன்றியுடன் நினைக்கவேண்டும்.

உதவி செய்க; உதவி நினைக.

## 11. நடுநிலை யாளன் கெடுவதில் கில்லை

கேடில்லாது வாழவேண்டுமானால், சந்ததி வழங்க வேண்டுமானால், ஓரம், வஞ்சனைகளை ஒழித்து, நடுக்கண்ட நியாயப்படி நடக்கவேண்டும். சமமாகத் தூக்கி நிறுக்கும் துலாக்கோல்போல, ஓரமில்லாத நடுநிலைமையே சான் றோர்க்கு அழகு.

> சமன்செய்து சீர்தூக்குங்கோல்போல்அமைந்தொருபாற்
> கோடாமை சான்றோர்க் கணி.

நண்பன், பகைவன், அயலான் என்னாது, அனைவரிட மும் பண்புடனே நடக்கும் நடுநிலையே தக்க நல்லறமாகும். நடுநிலையாளன் செல்வம் சிதையாது சந்ததிகளுக்கு உறுதி யாகத் தக்கும். மக்களைப் பார்த்தால், அவரவர் பெற்றோர் தக்கவர் தகாதவர் என்பது தெரியும். நடுவுநிலையாளருக்கு நல்ல சந்ததிகள் எய்தும்.

> தக்கார் தகவில ரென்ப தவரவர்
> எச்சத்தாற் காணப் படும்.

கேடும் பெருக்கமும், செல்வமும் வறுமையும் எவருக் கும் உண்டு. எந்நிலையினும் மனங்கோடாமல் நேர்மை

யாக நடத்தலே பெரியார்க்கு அழகு. நடுநிலையாளன் வறுமையை உலகம் ஒரு கெடுவாகக் கருதாது; வறுமையால் அவனை அவமதிக்காது.

கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

நடுநிலை தவறித் தீமை செய்தால், வஞ்சம் புரிந்தால், நீ கெடுவது உறுதி என்றறி. மனக்கோட்ட மில்லாத நேர்மையான சொல்லே நடுநிலையாகும். நல்ல லாபமானாலும் சரி, நடுநிலை யற்ற செல்வத்தை உடனே நீக்குக.

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
அன்றே யொழிய விடல்.

வாணிபத்திலும் நடுநிலை காக்கவேண்டும். தனக்கு ஊதியம் கருதுவதுபோலப் பிறர்க்கும் நல்ல பொருள்களைத் தரவேண்டும்; தன்னலம்போலப் பிறர்நலமும் கருதும் வாணிபனுக்கு நல்ல வியாபார மாகும்.

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தம்போற் செயின்.

இவ்வாறு, நடுநிலை போற்றி நடப்பது கடனாம்.

## 12. சான்றோன் எனவே தக்கார் சொல வாழ்

ஒவ்வொரு நாளும் சிறுமை போக்கிப் பெருங்குண மேலோனாக வேண்டும். குணமே சான்றோர் நலம். பிறப்பு, கல்வி, பட்டம், பதவி முதலிய நலமெல்லாம் பொருளல்ல. நல்லவெல்லாம் சான்றோர் கடமையாம். நல்லவை எவை? அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை இவ்வைந்தும் சான்றாண்மை (சால்பு) என்னும் மாளிகையைத் தாங்கும் ஐந்து தூண்களாகும்.

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ (டு)
ஐந்துசால் பூன்றிய தூண்.

தவத்திற் கழகு கொல்லாமை. சான்றாண்மைக் கழகு பிறர் கெடுதலைச் சொல்லாமை.

கொல்லா நலத்தது நோன்மை; பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

ஒரு காரியசாதனைக்குப் பணிவு பேராற்றலைத்தரும். அதையே படையாகக் கொண்டு சான்றோர் பகைவர் பகைமையை மாற்றுவர்.

ஆற்றுவா ராற்றல் பணிதல். அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

தம்மைவிடத் தாழ்ந்தோரிடமும் சான்றோர் தோல்வியை ஒப்புக்கொள்வர். தீமை செய்தவருக்கும் நன்மையே செய்வது சான்றோரியல்பு. அப்படிச் செய்யாத சால்பு பயனில்லை.

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்,
என்ன பயத்ததோ சால்பு?

சான்றோர் வறியராயினும் இழிவல்ல. உலகில் வரும் எத்தகைத் துன்பத்திற்கும் சான்றோர் அஞ்சார். ஊழி பெயர்ந்தாலும் தமது ஒழுக்கத்திற் சிதையாதவர் சான்றாண்மைக்கு ஆழியாவர்.

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக் (கு)
ஆழி யெனப்படு வார்.

சான்றவர் சான்றாண்மையிற் குன்றினால் உலகம் தாங்காது. இவ்வாறு, அன்பு, நாண், பரோபகாரம், பழைய நண்பரை மதித்தல், உண்மையுரைத்தல், கோள்-பொய்

உரையாமை, குண்டுணித்தனம் செய்யாமை, சிறுமை பொறுமையின்மை, பணிவு, இனிமை, கனிவு, ஒழுக்கத்தில் உறுதி, இவையெல்லாம் சான்றோர் தன்மை. இவற்றைச் சிறு வயதினின்றே வாழ்வில் அமையச் செய்க.

# நூல் 3

## சொல்லறம்

---

### 13. இன்சொல் இனிது; வன்சொற் கொடிது

நல்லதும் பொல்லதும் சொல்லாலே வரும். ஆதலால் அறநெறி யொழுக்கத்திற்கும், உலகில் வெற்றிபெற வாழ்வதற்கும் நயனுள்ள, பயனுள்ள இன்சொல் முதன்மை யானது. குழந்தை முதல் இந்தச் சொல்லறங் காக்க வேண்டும். பள்ளிப் பிள்ளை முதல், பாராளும் மன்னர், அமைச்சர், பொதுநல ஊழியர் வரைக்கும் சொல்லறங் காத்தல் நல்லறமாகும். தெய்வப் புலவர், பல இடங்களில், நாவடக்கம், இன்சொல், பயனுள்ள சொல், திறம்படப்பேசுதல் அரங்கங்களில் பேசும் வகை, அரசியலார் பேசுந்திறமை முதலிய பொருள் பற்றி அரிய உண்மைகளை விளக்குகிறார். அவற்றை இப்பகுதியில் தொகுத்துரைப்பாம்.

செம்பொருள் கண்ட சீரியர் வாய்ச்சொல் இன்சொல். அதில் அன்பு கலந்தொளிரும்; வஞ்சனையிராது. அவர் உள்ளொன்றுவைத்துப் புறமொன்று பேசார்; தீச்சொல் வழங்கார். கரவற்று, கேட்போர் நன்மை பெறும்படியே அறிந்த அறவோர் பேசுவர். மனமுவந்து ஒரு பொருளைத் தருவதினும், முகமலர்ந்து, அன்புடன் இனிய மொழிகள் கூறுவது மேலானது. அதனால் கொடுக்காது இனிது பேசிமட்டும் வந்தவரை அனுப்பவேண்டு மென்பதன்று. ஈகையுடன் இன்சொல்லும் சேர்ந்திருக்க வேண்டும். முகமலர்ந்த சொல் ஈகையைவிட மேலானது என்பதாம்.

அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.

முகமலர்ந்து, இனிது நோக்கி, அகமலர்ந்து, உள்ளாரப் பேசும் இன்சொல்லில் அறம் நிலவும். இவ்வாறு எல்லாரிடமும் இன்சொல் வழங்குவானைத் துன்புறுத்தும் வறுமைப் பிணி யணுகாது. அவனுக்கு எல்லாரும் நண்பராவர்; துணைபுரிவர். பெரியோரிடம் பணிவு, அனைவரிடமும் இன்சொல்—இவையே ஒருவனுக்கு அணியாகும்.

> பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்
> கணியல்ல மற்றுப் பிற.

விருப்பமுடன் இன்சொல் வழங்கிவந்தால், தீமைகள் விலகும்; புண்ணியம் பெருகும்.

பண்பும் பயனும் கொண்ட இன்சொல்லால், பலர் நட்புறவின் நயமும், கருதிய நலமும் கைகூடும். கடுமை, பொறாமை, புறங்கூறுதல், சிடுசிடுப்பு, செருக்கு, முதலிய சிறுமைகளின்றி, பண்புடன் இன்சொல் வழங்குதல் இம்மைக்கும் நல்லது, மறுமைக்கும் நல்லதாம். இவ்வளவு நன்மைகளைத் தருவதைக் காணும் எவனே இன்சொல்லை விட்டு, வன்சொல் வழங்குவான்? அப்படி இன்சொல் இருக்க, வன்சொல் உரைப்போன், இனிய கனியை விட்டுப் புளித்த காயைத் தின்றவன் போல்வான்.

> இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
> வன்சொல் வழங்கு வது?
> இனிய வுளவாக வின்னாத கூறல்,
> கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

## 14. பயனில சொல்வான் மக்கட் பதடி

இன்சொல் பேசுவதுடன் பயன்படப் பேசவேண்டும்—வீண்பேச்சும், வெட்டி வம்பும், பிறர் பழியும் தீங்காகும். பலரும், 'சீ, சீ' என்று வெறுக்கும்படியாகப் பயனில்லாது

வாய்க்குப்பை கக்கும் மனிதன் எல்லாராலும் இகழப்படு வான். நண்பர்களிடம் நயந்தப்பி நடக்கக் கூடாது. அதை விடக் கெடுதல், பலபேர் முன்னே பயனில்லாத வெற்றுரை யாடல். அப்படி வளர்க்கும் வெற்றுரையே ஒருவனை வீணன் என்று காட்டும்.

நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

பலர் கூடிய சபையில் பண்பின்றி, பயனில்லாது சொல்லளப்பவன், நயமிழந்து, நலமிழந்து வருந்துவான். நல்ல குணவான்கள் கூடப் பயனில்லாத வெற்றுரை சொன்னால், தமது பெருமையும், புகழும் இழக்க நேரிடும்.

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

பயனில்லாது சொல்லளக்கும் வீணனை, மனிதன் என்னற்க. அவனை மனிதப் பதர் என்க.

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

அறிவாளிகள் நயமில்லாத கடுமொழி வேண்டுமானா லும் சொல்லட்டும். பயனற்ற வீண்வார்த்தை சொல்ல வேண்டா.

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

பெரிய காரியங்களை எண்ணி, அரிய பயன்களைக் கரு தும் அறிவாளிகள் பெரும்பயனில்லாத, ஆழ்ந்த பொரு ளில்லாத சொல்லை வழங்கமாட்டார்கள்.

அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

காமம், வெகுளி, மயக்கமாகிய குற்றமற்ற சுத்தான்மக் காட்சியுள்ள ஞானிகள், மறந்து கூடப் பொருளில்லாத வெற்றுரை சொல்லார். பயனுள்ள வார்த்தையைச் சொல்லுக. ஒருகாலும் வீண்பேச்சு வேண்டா.

சொல்லுக சொல்லிற் பயனுடைய, சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

## 15. புறங் கூறுவோன் புல்லரிற் புல்லன்

மிகவும் வெறுக்கத்தக்க வெற்றுரை புறங்கூறல். புறங் கூறி ஒருவருக்கொருவர் சிண்டு முடித்துத் திரிபவன் ஒரு நாள் இருவராலும்வெறுக்கப்படுவான். அறம் என்ற பேச்சே யில்லாது, அதற்கு எதிரான காரியங்கள் செய்கிறவனை யும் சரி, 'இவன் புறங்கூறுவதில்லை' என்று பெயரெடுப் பது மிகவும் நல்லது. அதாவது, புறங்கூறுதல் அதர்மத் தினும் அதர்மம், மகா பாபம். அறம் வழுவி அதர்மம் செய்தல் தீது. அதனினுந் தீது, ஒருவனைக் காணாத போது புறம்பேசிப் பழித்துக் கண்டபோது போலி நகை புரிதல்.

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழுதலைக் காட்டினும், புறங்கூறாமல் உயிர் விடுதல் நல்லது. அப்படி உயிர்போ னாலும் புறங்கூறாதவன் அறநூல்களில் சொல்லப்பட்ட நல்ல பலன்களை அடைகிறான். கண்முன்னே ஒருவன் உன்னைக் கண்ணோட்டமின்றிப் பேசினாலும், அவன் முன்னில்லாத போது, பின்னால் வரும் தீமையை மதிக்காது, புறஞ்சொல் லிப் பழிக்க வேண்டா.

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

கொடுமை செய்தவன் மேலும் கோட் சொல்லக் கூடாது. ஒருவன் வாயினால் தருமோபதேசஞ் செய்ய லாம்; அல்லது மனத்தில் நினைக்கலாம். புறஞ்சொல்லும் புன்மையே அவனது போலித்தனத்தைக் காட்டிவிடும்.

> அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
> புன்மையாற் காணப் படும்.

நீ பிறனைப் பழித்தால், உனது குற்றங்களில் பொறுக்கி யெடுத்துக் கேவலமானவற்றை அவன் பழித்துத் தூற்று வான். பழிப்பவர் பெரும் பழிப் படைவர். ஒருவருக் கொருவர் மனமகிழும் இனிய மொழிகளைச் சொல்லி நட் பாடத்தெரியாத பேதைகள், பகைமூட்டி, நண்பரைப் பிரிப் பர். கோட்சொல்லிகளிடம் கவனமா யிருக்கவேண்டும்.

> பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர், நகச்சொல்லி
> நட்பாடல் தேற்றா தவர்.

அதுமட்டுமா? அத்தகைய புல்லர், தமது நண்பர் குற்றத்தையும் அயலில் தூற்றித் திரிவர் எனில், பகை வரைத் தூற்றாது விடுவார்களா? காணாதவிடத்தில் புல்லிய பழிச்சொல் பேசித் திரியும் பாவியை உலகம் எப்படித் தாங்குகிறது? ஒருக்கால், பொறுப்பதே தனது கடமை யென்றெண்ணி அது அப்பாவியைத் தாங்குகிறது போலும்! இப்புறங் கூற்றொழிய ஒரு வழியுண்டு. அது, பிறர் குற்றம் காண்பதுபோல ஒவ்வொருவனும் தன்குற்றம் கண்டு, தன்னைத் திருத்திக்கொள்ளலே. அனைவரும் இப் படி நடந்தால் எவர் உயிர்க்கும் துன்பமிராது.

> ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
> றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

இனி, பெரிய பொதுநலப்பணி தாங்கும் அறிவாளி கள் எவ்வாறு பேச வேண்டுமெனக் காண்போம்.

## 16. நல்லதும் பொல்லதும் நாவினால் வருமே

யா நலத்துள்ளும் நா நலம் உயர்ந்த நலமாகும். ஆக்கமும் கேடும் அதனால் வரும். ஆதலால் சொற் சோர்வுபடாமல் கவனமாயிருக்க வேண்டும். நமது சொல், நண்பர் மனத்தை இன்னும் நெருங்கிய நட்புரிமையால் பிணிக்கத்தக்கதா யிருக்கவேண்டும். நமது சொல்லைக் கேளாப் பகைவரும், 'ஆகா இவ்வளவு அருமையான மனிதனைப் பகைக்கலாமா; அவனை நேசிப்போம்' என்று விரும்பும்படி நம் சொல்லிருக்கவேண்டும். அதுவே நல்ல சொல்லாகும்.

> கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
> வேட்ப மொழிவதாஞ் சொல்.

திறனறிந்து, நன்றாக நிறுத்துப்பார்த்து, ஆட்களின் தன்மை யறிந்து திறம்படப் பேசுக. அதுவே அறமும் பொருளும் தரும். ஆணித்தரமாகப் பேசவேண்டும். நமது சொல்லுக்கு எதிர் பேச முடியாது சீர்தூக்கிப் பேசவேண்டும். நமது சொல்லை வெல்லும் மற்றொரு சொல் இருக்கக் கூடாது. பிறர் 'இன்னும் இன்னும்' என்று விரும்பிக் கேட்கும்படி பேசுக. பிறர் பேசுவதில் பயனுள்ளதைக் கொள்க. இது மாசற்ற சொல்-மாண்புடையவர் கொள்கையாகும். சொல்வன்மையும், சோர்வின்மையும், அஞ்சாமையும் கொண்ட ஒருவனை எதிராளிகள் வெல்ல முடியாது.

> சொலல்வல்லன், சோர்விலன், அஞ்சான்; அவனை
> இகல்வெல்லல் யார்க்கு மரிது.

காரியங்களை நிரந்து, நயமாகச் சொன்னால் உலகம் விரைவாகக் கேட்டு நடக்கும். வழவழவென்று பேசிக் கேட்போரை ஆயாசப் படுத்தக்கூடாது. மாசற்ற சில

மொழிகளை மனத்திற் பதியும்படி பேசத்தெரியாதவர்களே தேவையில்லாத பலவார்த்தைகளைப் பேச விரும்புவர்.

பல்சொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சில்சொல்லல் தேற்று தவர்.

கற்றதை விரித்துரைக்கத் திறமையற்றவர்கள் கொத்திலே மலர்ந்தும் மணக்காத பூவைப்போல்வர்.

## 17. கண்ணும் முகமும் கருத்தைக் காட்டும்

எதிரே யிருப்பவர் என்ன நோக்கங் கொண்டிருக்கிறார்களென்று குறிப்பறிந்து பேசவேண்டும். அகத்தின் கண்ணாடி முகம். முகப்பளிங்கில் மனச்சாயம் விளங்கும்.

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

கசப்பு உவப்பு, வெறுப்பு விருப்பு, பகை நட்பு எல்லாம் முகச் சாடையில் நன்றாகத் தெரியும். அவ்வாறு முகக்குறிப்பால் மனதறிந்துகொள்ளும் அறிவாளி, நமது முகக் குறிப்பறிந்தே விருப்பத்தை நிறைவேற்றுவான். மற்றொரு சாதனம் கண். கண்ணிலே தெரியும் கருத்து. பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும். நுண்ணறிவாளர் கண்ணையே அளவுகோலாகக்கொண்டு பிறர் கருத்தை யளந்தறிவர்.

நுண்ணிய மென்பார் அளக்குங்கோல், காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற.

பிறர் மனக்குறிப்பைக் கண்பார்த் தறியாதவர்களுக்குக் கண்ணிருந்தும் பயனென்ன ? உறுப்புக்கள் எல்லாருக்கும் ஒன்றுதான். எனினும், வாயாற் சொல்லாமல் பிறர் குறிப்பறிந்துகொள்ளும் அறிவாளி, ஒரு தனிச் சிறப்புடையவனாவான். அறியும் கண் அலாதி. அவ்வாறு

கண்ணும் முகமும் பார்த்து உள்ளக் குறிப்பறியும் அறிவாளியை என்ன கொடுத்தாயினும் அரசர் தமது அமைச் சவையிற் கொள்ளவேண்டும். சொல்லாமலே மனத்திலிருப் பதைக் குறிப்பினால் அறிபவன், கடல்சூழ் உலகிற்கு ஒரு நல்லணியாவான். அவ்வாறு குறிப்பால் மனத்திலிருப்ப தைச் சிறிதும் ஐயமின்றி அறிபவனைத் தெய்வத்திற்குச் சமானமாக நினைக்கவும். அவனைத் தெய்வப் புலவன் என்க.

> ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
> தெய்வத்தோ டொப்பக் கொளல்.

## 18. பேசாக் கல்வி பேடிகை வாளாம்

சபைக் குதவாக் கல்வி மணமில்லா மலர்போலாகும். சபை நடுக்கம் கூடாது. கற்றதைக் கற்றவர்முன் திறம் படச் சொல்லுவான் கற்றாருட் கற்றோனுவான்.

> கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முன்
> கற்ற செலச்சொல்லு வார்.

சொல்வன்மையும் பேசும் முறையும் அறிந்த தூய தன்மையர் சபைக்கு அஞ்சார்; தமக்கு முடிந்ததை வாய் சோராது திறம்படப் பேசுவார். அமர்க்களத்தில் சாவை யெதிர்க்கும் வீரர் சாதாரணமானவர்; அவையகத்தில் அஞ்சாது நிற்பவரே அரிய வீரர்.

> பகையகத்துச் சாவார் எளியர்; அரியர்
> அவையகத் தஞ்சா தவர்.

கற்றவர் முன்னே, ஒருவன், தான் நன்குக் கற்றுணர்ந்த பொருளை அஞ்சாது பேசுக; தனக்கு மேலானவர்கள் பேசி னால், கருத்தூன்றி அவர்கள் சொல்லும் அரிய பொருளைக் கொள்ளுக. தெரிந்ததைத் தைரியமாகப் பேசுதல், தெரி

யாததை அறிஞர் பேசும்போது அறிந்துகொள்ளல், இவ்வி ரண்டும் அறிவை வளர்க்கும் சாதனங்களாகும்.

கற்றூர்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

ஒருவன், சபையில் தைரியமாகப் பேசும்பொருட்டு, எடுத்துக்கொண்ட பொருளை நன்குக் கற்கவும். சொல்லிலக் கணத்தை நன்குக் கற்கவேண்டும். சொற்றிறமை மிகவேண் டும். அப்போதுதான் எதிராளிக்குத் தக்கபடி ஈடு கொடுத்து வெற்றியுறப் பேச முடியும். சௌரியமில்லாத வனுக்கு வாளால் பயனென்ன? சபைநடுங்கிக்கு நூலாற் பயனென்ன? கைநடுங்குவோன் வாளும், வாய்நடுங்கு வோன் நூலும் பயனில. போர்க்களத்தில் பேடிகையிற் கொடுத்த வாள் பயனுகுமோ? அதுபோலச் சபைக்குப் பயப்படுவோன் கற்ற நூலறிவும் பயன்படாது. பளபளப் பாகத் தீட்டி மின்னும் வாளும் பேடிக்குப் பயனில்லை.

பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

நல்லசபையில் ஒரு பொருளை நன்கு சொல்லத் தெரி யாதவர், பலகற்றும் பயனில்லை. கற்றறிந்தும் நல்லறிவா ளர் சபையை அஞ்சுவோர், கல்லாதவரினும் கடையராவர். அறிஞர் அவைக்களத்தை அஞ்சித் தாம் கற்றதைத் திறம் படப் பேசத்தெரியாதார், உயிரோடிருந்தும் இறந்தவருக் குச் சமானமாவர்.

## 19. அவையை யறிந்து சுவைபடப் பேசுக

ஆனல், அச்சமில்லை என்று கண்டதைப் பேசிவிடக் கூடாது. சபையறிந்து, ஆராய்ந்து பேசவேண்டும். அதுவே பேச்சிலக்கணம் அறிந்தவர்க்கு அழகு. சபை

யோர் எதை எதிர்பார்க்கின்றனர், எந்த நோக்கத்துடன் நம்மைப் பேசச்சொன்னார்கள் என்றறிந்து, அவர்கள் எதிர் பார்க்கும் பொருளை நன்குணர்ந்து பேசுக. அதுவே சொல் நடை தெரிந்தவர்க்கு அழகு. அவையறியாது பேசத்துணிபவர் சொல்வகையறியார். அவரால் எப்பய னும் இல்லை. ஒள்ளிய அறிவாளிகள் முன்னே அறிவாளி போலப் பேசுக. சரக்கில்லாத வெள்ளைகளின் கூட்டத் தில் தானும் வானமுதத்தைப்போல வெள்ளையாக யிருந்து விடுக. நல்லார் முன்னே நாவன்மை காட்டு. மூடர் கூட் டத்தில் மௌனமாயிரு.

ஒளியார்முன் ஒள்ளிய ராதல்; வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

ஒன்றும் தெரியாத வெள்ளைகள் முன்பும் வெள்ளை போலச் சும்மாயிருக்கவேண்டும். தம்மினும் மிக்க பெரியார் சபையில், 'நான்' என்று மார்தட்டிக் கிளம்பாது, மௌன மாக அடங்கியிருப்பது மிகமிக நல்லது.

நன்றென்ற வற்றுள்ளு நன்றே, முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.

நன்றாகக் கற்றறிந்து அற்புதப் புலமைவாய்ந்தவர் சபையில், 'நான்' என்றெழுந்து இழுக்குரை கூறுவான், நன் னெறியினின்று நிலைதப்பி வீழ்ந்தவனுக்குச் சமானமா வான். சொல்லிலக்கணம் அறிந்து இரசிக்கும் அறிவாளி கள் சபையிலேதான், கற்றறிந்த புலவர் கல்வித்திறமை விளங்கும். பொருளை ஆழ்ந்து உணரத்தக்க அறிவாளிகள் முன்னே சொற்பொழிதல், வளரும் பாத்தியில் தண்ணீர் விட்டாற்போலப் பயனாகும்.

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.

நல்லறிஞர் சபையில் நல்ல பொருளை விரிப்பவர், புல்லர் சபையில் மறந்தும் பேசாதிருக்கக்கடவர்.

> புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க, நல்லவையுள்
> நன்கு செலச்சொல்லு வார்.

அறிஞர், தமது இனமில்லாது, தமது கொள்கைக்கு எதிராளிகள் முன் பேசாதிருக்கவேண்டும். அப்படிப் பேசினால், நல்ல அமுதை ஆபாசமான முற்றத்தில் கொட்டியதற்குச்சமானமாகும். அறிவாளிகள் அவையில் அறிவாளிகள் பேசுக. சிறுமையும், பொறுமையும், நாத்திகத்தடிப்பும், செருக்கும், புன்மையுங்கொண்ட மூடர் சபையில் சும்மா இருத்தல் அறிவுடைமையாகும். இவ்வாறு இனியன பேசுக; பயன்படப் பேசுக; சபைக்கூச்சமின்றி, அறிவாளிகள் முன்பு பேசுக; அறிவிலிகள்முன் பேசற்க; குறிப்பறிந்து சொல்லுக; கருத்து நிறைவேறும்.

# நூல் 4

## தீயன விலக்கல்

---

## 20. தீவினை தன்னைத் தீயினும் அஞ்சுக

சுரங்கத்தினின்று எடுத்த தங்கக் கட்டி போன்றது மனித வியல்பு. அதை நல்லொழுக்கம், நற் பழக்கம், நற் சேர்க்கை முதலிய சாதனங்களால் நாடோறும் மாசறுக்க வேண்டும். இளமைப் பழக்கம் மாற்றுவது கடினம். ஆதலால் அவ்வப்போது தீமைகளை யறிந்து, உணர்ந்து, திருத்த வேண்டும். நாட்குறிப்பு எழுதி வருவது நல்லது. அதில் செய்த தீமைகளையும் எழுதி, அதற்காக வருந்தி, மறுநாள் மீண்டும் அத்தீமையைச் செய்யாது கவனமாக நடந்து கொள்ள வேண்டும். தீமைக்கு மாறான நன்மையைப் பயிலவேண்டும். பழிபாவங்களுக்கு அஞ்சாது குற்றஞ் செய்தல், கயமை, பெரியார்களை நிந்தித்தல், பொறாமை, சினம், களவு, சூதாடல், கள்ளுண்ணல், பிறர்க்குத் தீங் கிழைத்தல், உயிர்க்கொலை, புலாலுண்ணல் முதலியன பெருந் தீமைகள்.

தீவினை செய்தால் தீமையே விளையும். அதைத் தீப்போல அஞ்சி விலகுக. தீவினையே செய்து தடிப்பேறிய கொடியர், தீவினையாகிய பிழை செய்ய அஞ்சமாட்டார்கள்; மேலோர் அஞ்சுவர். பகைவனுக்குக்கூடத் தீமை செய்யற்க. அஃது அறிவினுள் எல்லாம் சிறந்த அறிவுடைமையாகும். மறதியாகக்கூடப் பிறனுக்குக் கேடு செய்யற்க. அப்படிச் செய்தவனை, தரும தேவதையே கெடுக்கச் சூட்சி செய்யும்.

மறந்தும் பிறன்கேடு சூழற்க ; சூழின்,
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

'நான் வறியன்' என்றெண்ணித் தீவினை செய்து பிழைக்கக் கருதற்க. அவ்வாறு செய்தால், மேலும் வறுமையால் வருந்த நேரிடும். பாவஞ்செய்யும் தரித்திரன் பரம தரித்திரனாவான்.

இலனென்று தீயவை செய்யற்க ; செய்யின்,
இலனாகு மற்றும் பெயர்த்து.

'நோய் நுடக்கங்கள் வந்து வருந்தவேண்டா' என்று நினைப்பவர், பிறரை நோவுறுத்தாது, புண்ணிய பாவங்களுக்கு அஞ்சி நடக்கட்டும். எந்தப் பகைவரிடமிருந்தும் தப்பித்துக் கொள்ளலாம். நாம் செய்த தீவினையாகிய பகைவனைத் தப்பமுடியாது. பின்னாலேயே வந்து அவன் நம்மைக் கெடுப்பான். ஒருவனது நிழல் அவனைத் தொடர்வது போலவே, செய்த தீவினைப் பயனும் விடாது தொடர்ந்து ஆளைக் கெடுக்கும்.

தீயவை செய்தார் கெடுதல், நிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

தன்னைத்தான் விரும்புகின்றவன், தான் நலமுடன் இருக்கவேண்டுமென்று விரும்புகின்றவன், எவர்க்கும், எத்துணையும், எத்தகைய தீங்கையும் செய்யாதிருக்கட்டும். நேர்மை தப்பிப் பிறர்க்குக் கெடுதல் செய்யாத நல்லவன் கேடுறமாட்டான் என்றறிக.

## 21. குற்றந் திருத்திக் குணமுற் றோங்குக

செருக்கு, சினம், சிறுமை, தற்புகழ்ச்சி, பிறரைப் பழித்தல், தீவினைசெய்தல், இவை பெருங் குற்றங்களாம்.

அவரவர் தத்தம் குற்றங்களைக் கண்டு, திருத்திக் கொண்டு, மாசற்று வாழுக. பழி நாணும் இயல்புள்ள நல்லோர், தினைத் துணைக் குற்றத்தையும் பனைத்துணையாகக் கருதித் திருத்திக் கொண்டு கவனமாக நடப்பர். தன்குற்றமே தனக்குப்பகைவன். அதைக் கருத்தூன்றித் திருத்துக. குற்றமில்லாது நடத்தலே பொருளாகக் கொண்டு வாழுக. செருக்கு, சினம், சிறுமை ஆகிய குற்றமில்லார் செல்வம் மிகவும் பெருமையாக விளங்குந் தன்மை யுள்ளது.

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

கஞ்சத்தனம், மாட்சியில்லாத மானம், வணக்கமற்ற செருக்கு, பெருமையற்ற தன்மகிழ்வு, இவையெல்லாம் அரசனுக்குக் குற்றமாகும்; ஏனையோர்க்கும் குற்றமாகும். வருமுன்பே குற்றத்தைத் தடுத்துப் பாதுகாப்புடன் வாழ வேண்டும். கவனக்குறைவாக இருந்தால், தீமுன் இட்ட வைக்கோல்போல வாழ்வு கெட்டுப் பாழாகும்.

வருமுன்னர் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

பொதுஜனத் தலைவனான மன்னன், முதலில் தன் குற்றத்தைத் திருத்திப் பிறகு பிறர் குற்றத்தைக் கண்டு திருத்தவேண்டும். அத்தகைய மன்னனை ஒரு குற்றமும் அணுகாது. அவனது ஆட்சி மாசற்ற நீதியாக விளங்கும்.

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்,
என்குற்ற மாகு மிறைக்கு,

செய்யவேண்டிய நல்ல தானதருமங்களைச் செய்யாது, கஞ்சத்தனம் செய்பவன் செல்வம் சிதைந்துபோகும். கஞ்சத்தனம், அனைத்திற்கும் மிஞ்சிய குற்றமாகும். தன்

னைத்தான் வியக்கவேண்டா. நன்மையில்லாத காரியத்தை விரும்ப வேண்டா.

வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை; நயவற்க
நன்றி பயவா வினை.

படாடோபம் ஒரு குற்றம். ஒருவன், தான் காதலிக்கும் பொருளை, வெளிப்படுத்திக் காட்டிலாமல், பகிரங்கப் படுத்தாமல், அநுபவிக்கவேண்டும். அதனால் பகைவர் எண்ணம் பலியாது போகும்.

## 22. கயவர் தூற்றுவர்; கண்டதைச் செய்வர்

பகுத்தறிவுள்ள மக்களாகப் பிறந்தும், தீமையே புரிந்து, பிறரை இகழ்ந்து, நல்லாரைத் தூற்றி, மகா கருமிகளாய், பெரியார் சொல்லை அவமதித்து, வாழ்வோரைக் கண்டால் பொறாமைப்பட்டுக் கேடுசெய்து, தரங் கெட்டலையும் மக்களே கயவர். கயவர், வடிவில் மனிதரைப் போன்றிருக்கிறார்கள்; எனினும், மனிதர் இனத்தில் அவர்களை யாருக்கும் ஒப்பிட்டுச் சொல்ல முடியாது. விலங்குகள்கூட அவர்களுக்குச் சமான மாகா. கயவருக்குச் சமானம் கயவரே. பகுத்தறிவைக் கொண்டு, நன்மையறிந்து நடப்பவர், தீமை செய்தால் மனம் வருந்துவர். கயவர் ஒருகவலையு மில்லாமல், ஒரு உணர்ச்சியு மில்லாமல், தாராளமாகத் தீமை செய்வர். தேவர் தமது இச்சைப்படி எந்தவிதமான கட்டுப்பாடும் இன்றி நடப்பர். கயவரும் தாந்தோன்றித்தனமாக நடப்பதால் தேவர் போன்றவர்கள்.

தேவ ரனையர் கயவர், அவருந்தா
மேவன செய்தொழுக லான்.

தன்னைவிடப் பட்டித்தனமாக நடப்பவனைக் கண்டால், "அடே நான் உன்னைக்காட்டிலும் மேல்; எனக்குச் சமானம் உண்டா? நீ என்ன மனிசன்? என்று சம்பபடித்துச்

செருக்கினால் இறுமாப்பான் கயவன். இந்தக் கீழ்மக்கள் ஆசார வொழுக்கங்களுக்குச் சிலவேளை கட்டுப்பட்டு நடந்தால், அதன் காரணம் அச்சம், அவா. (தனக்கு மேலேயுள்ள பலவான் தண்டிப்பானே என்னும் அச்சம்; வரும்படி எதிர்பார்க்கலாம் என்ற ஆசை) சான்றோர், ஒரு சொல்லில் பயன்படுவர். கயவர் சக்கையாக வெளுக்கப்பட்டால் குணத்திற்கு வருவர்.

சொல்லப் பயன்படுவர் சான்றோர் ; கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

இங்கே கொல்லப் பயன்படும் என்றால் அவர்களைக் கொல்லவேண்டு மென்பதன்று. உடம்பு வணங்கி, அடக்கமும் பணிவும் ஏற்படும்படி, சக்கையாக வேலை வாங்கினால் போதும். கரும்பைப் பிழிவதுபோல, தசை வேர்க்க வேலை கொடுத்து அவர்களை வணக்கவேண்டும். கயவர் மகா கருமிகள். கையை யிறுக்கிக்குத்திக் கன்னத்தைப் பேர்க்கும் வன்மையாளர்க்கே இணங்குவர்; சாதுக்களுக்கு எச்சிற் கையைக் கூட உதறமாட்டார்கள்.

ஈர்ங்கை விதிரார் கயவர் , கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

இவ்வளவு தண்டனைக்குக் கயவர் என்ன தீமை செய்கிறார்கள்? அவர்களுக்கு அடக்கங் கிடையாது. அவர்களை நம்பி ஒரு இரகசியம் சொன்னால், அதை அவர்கள் ஊர் முழுதும் 'டாம் டாம்' போடுவர். அவர்கள் வெறுந் தம்பட்டம்.

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

பிறர் உண்டுடுத்து வாழ்வதைக் கண்டாற்கூடப் பொறுக்காது, அவர்மேல் பொய்க்குற்றங் கண்டுபிடிக்க வல்லவர் கயவர்.

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

வறுமை, துன்பம் வந்தால், கயவர் மானங்கெட்டுத் தம்மை விற்றுப் பிழைக்கக் கூசமாட்டார்கள். மானத்தை விடச் சோறுதான் கயவருக்குப் பெரிது. விலையடிமைப் படவே கயவர் உரியவர்.

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

## 23. பெரியாரைப் பழித்தவன் பெருங்கே டடைவான்

அறிவு, ஒழுக்கம், தவம், பொதுநலங்களிற் சிறந்த பெரியார்களை நன்கு மதிக்கவேண்டும். மாசற்ற பெரியார் களை அவமதித்து, இகழ்ந்து, எதிர்த்து வருத்துதல் பெருங்கேடாகும். பேராற்றலுள்ள பெரியாரை யிகழாது நன்மதித்து நடத்தல் சிறந்த ஒழுக்கமாகும். பெரியாரைப் பேணாது மனம்போனபடி நடந்தால், ஓயாத துன்பங்கள் வரும். கெட்டுப்போக வேண்டுமா? ஆனல் பெரியார் சொல்லைக் கேளாது, மனம் போனபடி செய்யற்க. உன்னை ஒறுக்கத் திறமை வாய்ந்த பெரியார்களுக்குப் பிழைசெய் தால் கெடுவாய். வல்லமை மிக்க பெரியார்களுக்கு, ஆற்ற லில்லாச் சிறியர் தீமைசெய்வது, தானேயும் வரவுள்ள எமனை அதற்குமுன்னே தம் கையாலேயே 'வா' என்று கூப் பிடுவதற்குச் சமானமாகும்.

கூற்றத்தைக் கையால் விளித்தற்றால், ஆற்றுவார்க்(கு)
ஆற்றாதார் இன்னா செயல்.

வலிமையுள்ள வேந்தன் சினத்திற் குள்ளானார், எங் குச் சென்றாலும் பிழைக்க மாட்டார்கள். எரி சுட்டா லும் பிழைக்கலாம். தவ ஞான வொழுக்கங்களிற் சிறந்த

பெரியாருக்குப் பிழை செய்தவன் நசிந்து போவான். அவ்வாறு தவப்பெருமை வாய்ந்த பெரியார் சீறினால், வகை வகையாகச் சீரும் சிறப்பும் பெற்ற போக வாழ்க்கை உருப்படியாகாது வீணாகும்.

மலைபோன்ற அருந்தவப் பெரியார்கள், "உன் செல்வம் குன்றிப் போகும்" என்றால், 'நிலையான சீருஞ் சிறப்பும் உள்ளோம்' என்று பெருமைகொள்ளும் மன்னரும் குடியோடு அழிவர். பெரியார் சாபத்திற்கு உள்ளாகக்கூடாது. உயர்ந்த தவ விரதங்களைக்கொண்ட பெரியார் சீறினால், இந்திரன் கூடப் பதமிழந்து, அரசுரிமை யிழப்பான்.

> ஏந்திய கொள்கையார் சீறின், இடைமுறிந்து,
> வேந்தனும் வேந்து கெடும்.

மிகப் பெரிய படைவலியுடன் நிலைத்த மன்னர்கூட, தவஞ் சிறந்த சீரியர் முனிந்தால், பிழைக்கமாட்டார். ஆதலால், பெரியவரை நன்கு மதித்து நடக்கவேண்டும்.

## 24. பொறாமைக் காரன் பூண்டோ டழிவான்

அறமும் ஆக்கமும் வேண்டுமா? எனில், இன்னொருவன் நன்றாயிருப்பதைக்கண்டு பொறாமைப்படாதே. நெஞ்சில் பொறாமை யில்லாதிருத்தலே நல்லொழுக்கத்திற்கு அடையாளம். யாரிடமும் பொறாமை கொள்ளாதிருந்தால், அதைப்போல விழுமிய செல்வம் இல்லை. பொறாமை கொண்டு பெரியோர், பிறருக்குத் தீங்குசெய்ய மாட்டார்கள். அந்த இழுக்கான புல்லிய தன்மையால் வரும் துன்பத்தை அவர்கள் நன்கு அறிவர். பொறாமைக்காரனுக்குப் பொறாமையே போதும். பகைவர் விட்டாலும் பொறாமையே அவனைக் கெடுத்துவிடும்.

அழுக்கா றுடையார்க் கதுசாலும், ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

பிறர் செய்யும் ஈகையைக் கண்டு பொறுக்கமாட்டாத வன் குலம் உண்ண உடுக்கக்கூட கதியில்லாமல் கெடும்.

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும்.

பொறாமைக்காரனைத் திருமகள் பொறுக்கமாட்டாள்; தன் தமைக்கை மூதேவிக்கு அவனைக் காட்டிக்கொடுத்து விலகிப் போவாள்.

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

பொறாமைப்படும் பாவி, பரம தரித்திரனாகி, நரகவேதனைப் படுவான். பொறாமைக்காரன் செல்வமும், அஃதில்லாதவன் வறுமையும் முன்வினைப்பயன் என்றே அறிஞர் நினைப்பர். பொறாமையாளன் செழிப்பதுமில்லை. பொறாமையில்லாத நல்லோர், இன்பப் பெருக்கத்திற் குறைவதுமில்லை.

## 25. உள்ளத் தாலுங் கள்ளந் தீது

ஏமாற்றினவன் ஏமாறுவான். திருடினவன், உள்ளதும் இழப்பான். அவமானப்படாமல் வாழவேண்டுமானால், பிறரை வஞ்சிக்காது மனத்தை யடக்கவேண்டும். பிறர் பொருளை வஞ்சனையாகக் கைக்கொள்ளலாம் என்று உள்ளத்தால் உள்ளலும் தீதாகும்.

உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

களவினால் வந்த சொத்து வளருவதுபோலத் தோன்றி யழிந்துபோகும்.

களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.

களவினா லாகிய வாக்கம் அளவிறந்(து)
ஆவது போலக் கெடும்.

கள்ளப் பொருட்களிற் பேராசை கொள்ளல் தொலையாத் துன்பத்தை விளைவிக்கும். இன்னொருவன் பொருளைக் கொள்ளையடிக்க, அவன் எப்பொழுது அயர்வானென்று பார்த்திருக்கும் வஞ்சகக் கள்வர், மிகவும் மேலான அருட் செல்வத்தை வேண்டி, அதைத்தரும் அன்பு செய்ய மாட்டார்கள்; களவில் மோகங்கொண்டவர் அளவு கடந்து நடப்பர். அறம் வகுத்த ஒழுக்க நெறிகளில் நிற்காது, அதரும வழிகளிலேயே அளவுக்கு மீறி நடப்பர். அற நெறியில் அளவறிந்து நடக்கும் ஆற்றலுடைய மேலோரிடம், களவு என்னும் இருள்மடமை யிருக்காது. நன்மை தீமைகளை அளந்தறிந்து நடப்பார் நெஞ்சத்தில் அற நினைவே குடிகொண்டிருப்பதுபோல, அளவறியாது நடப்பவர் மனத்தில் கள்ளத்தனமே குடிகொண்டிருக்கும்.

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

களவே தொழிலாகக் கொண்டொழுகும் கொடியர், அளவுக்கு மிஞ்சிய அக்கிரமஞ் செய்து வீழ்வர். கள்ளருக்கு, உயிர்நிலை தவறும். அவர்கள் ஓயாது பல தண்டனைகளுக்கு உள்ளாவர். கள்ளமற்ற நேரிய நடையுள்ள நல்லாரைத் தெய்வலோகம் மறுக்காது ஏற்றுக்கொள்ளும்.

## 26. திருட்டுச் சொத்துத் தீங்கு செய்யும்

அவரவர் நியாயமாக வைத்திருக்கும் பொருளை, நடுநிலையின்றி அபகரித்தவன் குடிகெட்டுத் தீமையுற்றழிவான். அநியாயமான காரியங்களை நாளும் நடுநிலையாளர், சுயநலங் கருதிப் பிறர்பொருளைத் திருடும் பழி செய்யமாட்டார்கள்.

நிலையான பேரின்பத்தை விரும்பும் அறிவாளிகள், சிற்றின்பத்தை இச்சித்து, அதருமமான காரியங்களைச் செய்யார்.

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

புலன்களை வென்ற பெரிய ஞானிகள், தமக்கு இல்லையென்றெண்ணிப் பிறர் பொருளை வெஃகார்.

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

பொருளவாவி, யாரிடமும் இழிசெயல் புரிபவர் எவ்வளவு படித்திருந்தாலும் என்ன? அவர்களுடைய அகன்ற நுண்ணறிவினால் ஒரு பயனுமில்லை. கடவுளருளை வேண்டிச் சரியை, கிரியை, யோக, ஞான சாதனங்களைச் செய்து நன்னெறியில் நடப்பவன், பிறர் பொருளைக் கைப்பற்றத் தீய சூழ்ச்சிகளைச் செய்தால், கெடுவான். திருட்டுச் சொத்து வேண்டா. அதனால் துன்பமே அனுபவிக்க நேரிடும். ஒருவன் தன் செல்வம் தேயாதிருக்கவேண்டுமானால், பிறன் சொத்திற்கு ஆசைப்படவேண்டா. அறம் இன்னது என்றறிந்து பிறன் பொருளுக்குப் பேராசைப்படாத அறிவாளிகளின் தகுதி யறிந்து, திருமகள் வந்து சேருவாள். நியாயமெண்ணாது பிறன் பொருளை அவாவுவான் அழிவான். 'இன்னொருவன் சொத்து நமக்கு வேண்டா' என்னும் பெருமையே ஒருவனுக்கு வீறும் வெற்றியும் தரும்.

இறலீனும், எண்ணாது வெஃகின், விறலீனும்,
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

## 27. இனத்தைக் கெடுக்கும்; சினப்பகை கொல்லும்

சினம் சேர்ந்தாரைக் கொல்லி. அது கொடிய தீ; ஒருவனுக்கு இதமான இனம் என்கிற புணையைச் சுட்டெரிக்கும். தனது வல்லமையைக் காட்டச் சினத்தையே

பொருளாகக் கொண்டவன் கெடுவான். நிலத்தில் அறைந்த கை தவறாது நோவும். அது போலவே சினத்தில் உறைந்தவனும் தீங்குற்றழிவான்.

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு,
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

சினம் முகத்தில் தவழும் நகையைக் கொல்லும்; மனக் களிப்பைக் கொல்லும். சினத்தினும் கொடிய பகை வேறில்லை. ஒருவன், தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமானால், சினத்தைத் தடுத்துக்கொள்ளுக. இன்றேல், சினம் சினந்தவனையே கொல்லும்.

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க; காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்.

பலிக்கும் இடத்தில் கோபங்கொள்ளாதவனே சினங் காப்பவன். பலிக்காத இடத்தில் காத்தென்ன காவாதென்ன? தன்னைவிட வலியவர்மேல் கோபித்தல் தீங்காகும். தன்னைவிட எளியவரைச் சினந்தால் அதைவிட வேறு தீமையில்லை. எளியாரை வெகுண்டால், தருமம் அவர் பக்கமிருந்து சினந்தவனைக் கெடுக்கும். ஆதலால், செல்லும் இடம், செல்லா இடம், எந்த இடத்தும், யாரிடமும் கோபம் கொள்ள வேண்டா. பல சுடர் காந்தும் நெருப்புத் தோய்ந்தாற்போலப் பிறர் தீங்கு செய்தாலும், கூடுமான வரையில் சினங்காத்துப் பொறுமையாயிருத்தல் நல்லது. மனத்தாற்கூடச் சினத்தை நினைக்காத அமைதியாளன் நினைத்ததை உடனே பெறுவான்.

உள்ளிய தெல்லா முடனெய்தும், உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின்.

சினந்தார் செத்தார் போல்வர், சினந் துறந்தாரே துறந்த ஞானிகளைப் போல்வர்.

## 28. சூதர் வாழ்வு தூண்டில் மீனும்

சூதாட்டம், காலக்கொலை, தற்கொலை: சீட்டு, உழக்கு, குதிரைப் பந்தயங்கள் முதலிய பலவிதமான சூதாட்டங்கள் மாந்தரைக் கெடுக்கின்றன. சூது பலவிதத்தில் சிறுமைப்படுத்திச் சீரழித்து, ஆளைப் பொட்டலாக்கும்.

சிறுமை பலசெய்து சீரழிக்கும்; சூதின்
வறுமை தருவதொன் றில்.

'பார் என் கைத்திறனை' என்று, சூதாட்ட வீட்டில் மோகங்கொண்டு, பகடையுருட்டி, அகங்கரித்து அலைந்தவர் பலர்; ஒருவராவது உருப்படியானதில்லை. பகடை பாழாக்கும். ஓயாது சூதாடுவோன் பொருளெல்லாம் ஒழிந்து இன்னொருவர் கையிற் சேரும். ஒன்று வந்தால் நூறு போகும். இந்தச் சூதாட்டக்காரர் நன்றாக வாழுவதேயில்லை. வென்றாலுங்கூட வேண்டா சூதாட்டம். ஒருதரம் வென்றால் தூண்டிலூசியிற் பட்டமீன் போலச் சூதிற் சிக்கிப் பொருளும், மானமும் போக நேரிடும். சூதென்னும் மூதேவி மூண்டவர், வறுமையாகி அல்லற்படுவர். சூதாட்டத்தில் காலம் போக்கினால், பழைய செல்வமும் போய், குணமும் கெடும். சூதாட்டம் பொருளைக் கெடுக்கும்; பொய்யளைக்கும்; அருளைக் கெடுக்கும்; அலலற் படுத்தும். ஊண், உடை, செல்வம், கல்வி, அருளொளி, ஐந்தும் சூதரை அடையா. மாயச் சூது மண்ணைப் போடும்; உண்ண உடுத்தக்கூட கதி கெட்டுப் பிச்சை வாங்கச் செய்யும்.

உடை செல்வம், ஊண், ஒளி, கல்வியென் றைந்தும்
அடையாவாம் ஆயங் கொளின்.

உடம்பு எவ்வளவு வருந்தினாலும், உயிராசை விடுவதில்லை. அதுபோல, தோற்கத்தோற்க இன்னும் பணயம்

வைத்து ஆடத்தூண்டும் சூது. இழந்தும் சூதின் காதலும், வருந்தியும் உயிரின் காதலும் ஆளை விடா. ஆதலால் சூதை அறவே ஒழித்து, ஒதுங்கிக் கண்ணாற்கூடப் பாராமல், மனத்தாற்கூட நினையாமல் வாழ்க.

## 29. குடியைக் கெடுக்கும் கொடுவிடங் கள்ளாம்

கள்ளுண்டவர் நஞ்சுண்டவர். அவர்கள் எந்நாளும் கள்வெறிபிடித்துப் போதையில் மயங்கிப் பிணம்போற் கிடப்பர். செத்தாருக்கும் அவருக்கும் வேற்றுமையில்லை.

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் ; எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

கள்வெறியரைப் பகைவரும் அஞ்சார். அவர்கள் முகத்தைப் பெற்ற தாய்கூட வெறுப்பாள்; சான்றோர் வெறுக்கக் கேட்பானேன்? குடிகாரர் ஒளியிழப்பர். கட்குடியாதே. ஊரில் பெரியாரின் நன்மதிப்பைப் பெற வேண்டா என்று நினைக்கும் கழிசடைகள் வேண்டுமானால் குடித்துக் கெடட்டும். கட்குடியாகிய பொல்லாக் குற்றம் செய்வாரை, 'நாணம்' என்னும் நல்லாள் காண வெட்கிப் புறங்காட்டிச் செல்வாள்.

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

பணத்தையுங் கொடுத்து, உடம்பறியாது பிணம் போலப் படுக்கும் போதையை விலைக்கு வாங்குவது செயலறியாத அடிமட்டமையாகும். இரகசியமாகக் குடித்துக் கண்மயங்கிச் சாய்ந்து தள்ளாடி நடப்பவரை ஊரார்கண்டு நகைப்பர். 'நானா குடிக்கிறேன்? கிட்டப்போவேனா' என்று குடிகாரன் பேசினாலும், உள்ளே ஒளித்த குற்றம் இன்னும் மிகும். நடையும் விழியும் குடியைக் காட்டும். குடிக்குற்

றத்துடன் பொய்க்குற்றமும் சேரும். குடித்துக் களித்துப் போதையேறி நிற்பவனுக்கு, "அப்பா, கள் பொல்லாது; நஞ்சு; உடலைக் கெடுக்கும்; பொருளைக் கெடுக்கும்" என்று காரணம் காட்டுதல், தண்ணீரில் ஆழ முழுகினவனைத் தீவட்டிகொண்டு தேடுவதை யொக்கும்.

> களித்தானைக் காரணங் காட்டுதல், கீழ்நீர்க்
> குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

ஒருவன், தான் கள்ளுண்ணாதபோது, வேறொரு குடிகாரன் படும் பாட்டினைக் கண்டும், தான் குடித்து அவ்வாறே சோர்ந்து கிடக்கும் நிலையை ஏனோ அறியான்! மதியைக் கெடுக்கும், மானங்கெடுக்கும், குடியைக் கெடுக்கும் குடியொழிக.

## 30. விலைப்பெண் மயக்கம் வெறுமை பயக்கும்

ஒருவனை யணையும்போதே இன்னொருவனிடம் மனம் வைக்கும் இருமனப் பெண்டிர், கள், சூது, இம்மூன்றும், திருமகள் 'ச்சீ' யென்று ஒதுக்கித்தள்ளிய மூதேவிக் கூட்டங்களின் நண்பர்.

> இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
> திருநீக்கப் பட்டார் தொடர்பு.

வேசையர் ஆசை காசினால் விளையும்; அன்பினாலன்று. அவர்கள் இன்சொல்லும், தளுக்கு வார்த்தைகளும் தீங்கு விளைவிக்கும். அவர்கள் பசைக்குத் தக்கபடி பசப்பு மொழி பேசுவர். 'இந்த ஆளிடம் இவ்வளவு பொருள் உள்ளது' என்பதறிந்து, அப்பொருளைக் கைப்பற்றுமட்டும், வேசையர் வெகு நயமாகப் பேசி வலைபோடுவர். அவர்களை அணுகற்க. அவர்களிடம் என்ன சுகம் உள்ளது? அன்பற்ற சேர்க்கை பொய் சேர்க்கை யன்றோ? இருட்டறையில் முன்பின் அறி

யாத அநாதிப் பிணத்தைத் தழுவுவதுபோலவே வேசை பணத்திற்காக அணைவாள்.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று.

அருட் செல்வம் விரும்பி முயலும் அறிவாளிகள் பொருளையே பெரிதாகக் கருதும் வேசையரின் அற்ப சுகத்தைத் தீண்டார். மதிப்பொலிவுடையோர் பொதுப்பெண்களின் புன்னலந் தோயார். அழகு, மினுக்கு, தளுக்கு, ஆடல், பாடல்களால் ஆளை மயக்கிச் செருக்கி அற்ப சுகந் தரும் வேசையர் தோளில், தமது வாழ்வின் நலத்தைக் கருதும் நல்லறிவாளர் தோயார்.

தந்நலம் பாரிப்பார் தோயார், தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

மனத்தை வேறிடம் வைத்து, உடலைத் தழுவும் வேசையரை நிறைநெஞ்சமில்லாத புல்லரே சேர்வர். மாயம்புரியும் விலைப்பெண்டிர் முயக்கில், தீமைகளை ஆராய்ந்து அறியாத காமப்பித்தர் விழுவர். பச்சை மோகினிபோல் அந்த வேசையர் முயக்கம் இனிதுபோலத் தோன்றி உயிரை உலைக்கும். வரையின்றிப் பொருள் கொடுத்தோருக்குத் தம்மை விற்கும் வேசையரின் அணிமணித்தோள் நரகக் குழியாகும். அதன் தீமையை ஆராயாத கீழ்மக்களே அந்த நரகக்குழியில் ஆழுவர்.

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

## 31. புலா லுண்பது புண்ணை யுண்பதாம்

பகை, இரத்தவெறி, இரக்கமற்ற கொடுமை, முதலிய தீய குணங்கள் புலால் உண்பதால் உண்டாகின்றன. தனது

ஊனைப்பெருக்க இன்னொரு உயிரைக் கொன்று அதன் பிணவுடலை யுண்பவனுக்கு, மனிதத்தன்மையிற் சிறந்த இரக்கம் என்னும் குணம் இருக்காது. அவன் அருளில் லாக் கல்நெஞ்ச னவான்.

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்!

சிக்கனத்துடன் போற்றி வளர்க்காதவர்க்குப் பொரு ளாட்சி யில்லை; புலாலுண்பார்க்கு அருளாட்சி யில்லை. படைக்கலங்களை மிகவும் சேர்த்த ஒரு நாட்டவர், 'போர், போர்' என்று தினவெடுத்தலைவர். அவர்கள் மனது பொதுநலப் பயனுள்ள அருட்பணியிற் செல்லாது; மக்க ளைக் கொன்று நாடு பிடிப்பதிலேயே செல்லும். அதுபோலப் பிற வுயிர்களின் உடலை யுண்ணும் பாவிகளின் மனம், இரக்க மின்றி உயிர்க்கொலையை நாடும். உயிர்க்கொலை அருளற்ற வன் செயல். ஊனுண்ணல் கொடிய மறச்செயல். கொல் லாமையே அருட்செயல். ஊன்மறுத்தவன் உயிரைக் காத் தவனாகிறான். ஊனுண்பவனை நரகம் விழுங்கும். 'இனி உண்பதில்லை' என்று உலகோர் ஊன் மறுத்துச் சைவ ரானால், கசாப்புக்கடைகள் ஒழியும்; ஊன் விற்பவர் இரார்; உயிர்க்கொலை குறையும்.

தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின், யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

ஆ! ஆடு கோழிகளின் கழுத்தை அறுக்கும்போது, அவை கதறித் துடித்து அழுவதைப் பார்த்து இரங்காத கல் நெஞ்சம் உண்டோ? பிற வுயிர் வருந்தும் புண்ணை யுண ரும் இரக்கமுள்ள மக்கள், புலாலுண்ணலை யொழிக்க வேண் டும். பிழை, பழி மாயங்களினின்று விடுபட்ட நல்லறி

வாளர், தம்முயிர்போல் பிற வுயிர்களைக் காணும் காட்சி யாளர்; உயிர் நீங்கிய பிணமான ஊனை ஒருகாலும் உண்ணார். சிறு தெய்வங்களுக்குப் பலி, யாகம், என்ற பெயரால் உயிர்க்கொலை செய்வது கொடுமை. ஆடு மாடுகளின், வபையை எடுத்து நெய்யிற் பொரித்து உண்ணும் யாகக்கொலைகள் ஒழிக. அவி சொரிந்து ஆயிரம் யாகங்கள் செய்வதினும், ஒரு உயிரைக் கொன்று உண்ணா திருப்பது நல்ல புண்ணியமாகும்.

> அவிசொரிந் தாயிரம் வேட்டலின், ஒன்றன்
> உயிர்செகுத் துண்ணாமை நன்று.

எக்காரணத்தாலும் கொலை செய்யாது, ஊனுண்ணாது, அன்புகொண்டொழுகும் மனிதனை, "புண்ணியவாளனே, நீ நீடு வாழ்க" என்று எல்லா உயிர்களும் தொழும்.

> கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
> எல்லா வுயிருந் தொழும்.

## 32. கொல்லா நலமே யெல்லா நலமாம்

அஹிம்சையே பரம தருமம். எல்லா அறவினைகளும் ஒரு சொல்லில் அடங்கும்; அஃதே கொல்லாமை. எல்லா மறவினைகளும் கொலையினால் வரும். கொல்லாமையே அறவினை; கோறலே அழிவினை.

> அறவினை யாதெனிற் கொல்லாமை ; கோறல்
> பிறவினை யெல்லாந் தரும்.

ஒருவன், தனது பொருளைப் பசித்தவர்களுக்கும் பகுத்துக்கொடுத்து உண்ணலும், பல உயிர்களையும் தன்னுயிர்போலப் பேணுதலும் அறநூலார் தொகுத்த ஒழுக்கங்களிற் சிறந்தன. நல்லற மெல்லாம் கொல்லாமை என்னும் ஒரு

ஒழுக்கத்தில் அடங்கும்; அதற்கடுத்தபடி பொய்யாமை. உயிரிரக்கம், உண்மை, இரண்டும் சிறந்த அற நலங்கள். எவ்வுயிரையும் கொல்லா வொழுக்கமே நல்வழி யாகும். உலகின் துன்பநிலையை அஞ்சித் துறப்பவர்களில், எவ்வுயிரையும் கொல்லாது, அஹிம்ஸா தருமத்தைக் காக்கும் துறவியே மிகச்சிறந்தவன். கொல்லா விரதங் காப்பவன் வாழ்நாள் மேல் உயிருண்ணுங் கூற்றுஞ் செல்லாது: அவன் நீடு வாழ்வன். உயிர் அனைவர்க்கும் இனிது. தன்னுயிர் போவதாயினும், தன்னுயிரைக் காக்கவாயினும், பிற வுயிர்களைக் கொல்லற்க.

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க, தான்பிறிது
தின்னுயிர் நீக்கும் வினை.

செல்வம் இனிது, பெரிது. எனினும் கொலையால் வரும் செல்வத்தைச் சான்றோர் இழிவாகக் கருதுவர். இரத்தச் செல்வம் உரத்த பாவம். கொலைத்தொழிலாளரே புலைத்தொழிலாளர். புண், குட்டம் முதலிய நோய்களால் உடல் வருந்தி, தீய வறுமையினும் வாடும் மக்கள், முற்பிறப்பில் உயிர்க்கொலை புரிந்தவர் என்று வினைப்பயன் அறிந்த பெரியார் சொல்லுவர்.

## 33. என்றும், எதற்கும் இன்னா செய்யேல்

பிற வுயிர்களுக்கு நோவிழைப்பாரிடம் எல்லா நோய்களும் பற்றும். நோயற்று வாழ விரும்புவோர் பிற வுயிர்களை நோவுறுத்தாது அன்புடன் நடக்கவேண்டும். மிகச் சிறந்த செல்வம் பெறுவதாயினும், மாசற்ற நன்னெறியாளர் பிறர்க்குத் தீங்குசெய்யார். அருள்வழி நடக்குந் தூயர், பிறர் வருந்தத் தாம் செல்வச் சிறப்புடன் வாழ நினையார். மாசற்ற அறவோர், கொடுந்துயர் செய்யும் வைரிகளுக்கும்

எதிர்த்துன்பஞ் செய்யார். வருத்தும் பகையையும் வருத்தார் தூயர். இது மேலோர் கொள்கை.

கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

ஒருவன் ஒரு துன்பமும் செய்யவில்லை. எனினும், ஒருவன் பகைகொண்டு தனக்குப் பெருந்துன்பம் செய்கிறான். அவனுக்கும் திருப்பித் துன்பஞ் செய்யற்க. செய்தால் மேன்மேலும் மாறாப் பகையுந் துன்பமும் பெருகும். ஆனால் துன்புறுத்தியவனை எப்படித் தண்டிப்பது? நன்மையைச் செய்து நாண வைத்திடுக; பொல்லாது செய்தார்க்கும் நல்லது செய்க. நன்மையைக்கொண்டு வன்மையை மாற்றலாம். 'ஆகா! இவ்வளவு நல்லவனுக்கா தீங்கு செய்தோம்!' என்றுணர்ந்து பகைவர் தாமே திருந்துவர்.

இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

ஒருவன், பிறர் படும் இன்னல், தனக்குவந்த இன்னல் என்றுணர்ந்து, அனைத்துயிர்களுக்கும் அன்பு செய்க. இன்றேல், அறிவுள்ள மனிதனாகப் பிறந்தும் பயனென்ன? ஆருயிர்க்கன்பே யறிவின் பயனாம்.

அறிவினா னாகுவ துண்டோ ? பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

ஒருவன், தனக்குத் தீமை என்றுணர்வதைப் பிறர்க்குச் செய்யற்க. தன்மேல் கத்தி பட்டால் 'ஆ! ஐயோ!' என்று துடிக்கும் மனிதன், இரக்கமின்றிப் பிற வுயிர்களை வருத்துவதேனோ ? உணர்ச்சி யுள்ளவன் உயிர்களை வருத்தான்.

தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்!

முற்பகல் செய்தால் பிற்பகல் விளையும். ஒருவன் செய் தீமை தன்னையே பற்றும்.

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

இன்னா வொழிக. மன்னுயிர் வாழ்க!

## நூல் 5

### நட்பும், அன்பும்

### 34. தீயவர் நட்பு நோயினுங் கொடிது

சேர்க்கை வாசனையால் நன்மையும் தீமையும் நடத்தையில் பிடிபடும். ஆதலால் மாசற்ற நல்லோரை நாட வேண்டும். தகுதியற்றவர் நட்பை ஏதாயினும் தந்தாயினும் விடவேண்டும்.

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக வொப்பிலார் நட்பு.

ஆராய்ந்து கொள்ளாத கேண்மை, முடிவில் உயிருக்கே ஆபத்தாய் முடியும். ஒருதரம் பழகிவிட்டால், அப்பழக்கம் விடுவது கடினமாகும். ஆதலால் பழகு முன்பே பலதரம் சோதித்து நண்பரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். நல்ல குணம், ஒழுக்கத்திற் சிறந்த குடிப் பிறப்பு, குற்றங்குறைகள், சேர்க்கை, இனம், எல்லாம் நன்கு ஆராய்ந்தே ஒருவனுடன் பழகுக. நல்ல குடிப் பிறந்து, பழிபாவங்களுக்கு நாணி நடக்கும் உத்தமர் நட்பை, ஏதாயினும் கொடுத்தாவது கொள்ளுக.

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

நீ தகாத வழியில் நடந்தால், 'இப்படிச் செய்யக் கூடாது' என்று நன்றாக இடித்துப் புத்தி சொல்லி, 'ஏன் இப்படி நடந்தோம்' என்று பிழை வருந்தி அழச்செய்து

நல்ல வழிக்குத் திருப்பும் ஆற்றல் கொண்ட அறிவாளர் நட்பை ஆராய்ந்து பற்றுக. சில உறவினர், பசையுள்ள மட்டும், முகமன் சொல்லிக் கையிளைத்ததும் இகழ்ந்தோடு வர். நமக்கு ஒரு கேடு வந்த காலத்தில் உதவி செய்வானே நண்பன். கேடு, நட்பை நீட்டி யளக்கும் அளவுகோல். அதனால், உண்மையான நண்பரை அறியக் கேடும் ஒரு நன்மையாகிறது.

கேட்டினும் உண்டோர் உறுதி; கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

'ஏன் இப்படிச் செய்தோம்' என்று பின்னால் வருந்தி, உள்ளஞ் சிறுகும் காரியத்தைச் செய்யற்க. அல்லலிற் கைவிட்டோடும் நண்பரைக் கொள்ளற்க. கெடுங்காலைக் கைவிடுவார் நட்பை நினைத்தாற்கூட நெஞ்சு சுடும். அப் படிப்பட்ட மூடர் நட்பை ஒரேயடியாக ஒழிப்பதே ஒருவ னுக்குப் பெரிய லாபமாம்.

ஊதிய மென்ப தொருவர்க்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

சில தீயர் வெகு உருக்கமாகப் பேசிக் கட்டித் தழுவி, ஆளை அள்ளிக் குடித்துவிடுவதுபோலப் பாசங்காட்டி நேசஞ் செய்வர்; பின்னால் மோசஞ் செய்வர். அவர் நட்பு, பெருகுவதினும் அருகுவதே நல்லது.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

அத்தகைய போலிகள் சுயநலக்காரர்கள்; பயனிருந் தால் நயப்பர்; கையிளைத்தால் விட்டு நீப்பர். அவர்கள் சிநேகம் இருந்தென்ன? இழந்தென்ன? இந்த ஆளிடம் இவ் வளவு கைப்பற்றலாம் என்று அளந்து பார்த்துத்தான்

அந்தப் போலிகள் உறவாடுவர். கைப்பொருள் பற்றும் வேசைக்கும், வஞ்சனையாகத் திருடும் கள்வர்க்குமே அவர்களை ஒப்பிடலாம். போர்க்களத்தில் வீரனைத் தாங்காது கீழே தள்ளி ஓடுகின்ற மடக்குதிரையால் என்ன பயன்? அப்படிப்பட்ட துரோகிகள் நட்பைவிடத் தனிமை நல்லது.

> அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
> தமரிற் றனிமை தலை.

புல்லியர் கேண்மை எய்தலின் எய்தாமை நன்று. பேதையரின் நெருங்கிய நட்பைவிட அறிவாளர் பகைமை கோடிபங்கு மேல்.

> பேதை பெருங்கெழீஇ நட்பின், அறிவுடையார்
> ஏதின்மை கோடி யுறும்.

நகைத்துக் குடிகெடுக்கும் போலிகள் கேண்மையை விடப் பகைவரால் பத்துக்கோடிப்பங்கு நலமாகும். உன்னால் முடிந்த ஒரு நல்ல காரியத்தைச் செய்யும்போது, எதிர்க்கட்டைபோட்டுக் காரியத்தை முறியடிக்கும் தீய நண்பருடன் பேச்சை நிறுத்தி, மெல்ல அவர் உறவை விலக்குக. முன்னே ஒன்று சொல்லி, செயலில் நேர் விரோதமாக நடப்பவர் உறவு, கனவிற்கூடக் கெடுதல் விளைக்கும். சொல் வேறு, செயல் வேறுபட்டார் நேசம் கனவிலும் வேண்டா.

> கனவினும் இன்னாது மன்னோ, வினைவேறு
> சொல்வேறு பட்டார் தொடர்பு.

மனையிலே நட்பாடி, மன்றிலே பழிப்பவர் நட்பை எள்ளளவுங் கொள்ளற்க.

> எனைத்துங் குறுகுதல் ஓம்பல், மனைக்கெழீஇ
> மன்றிற் பழிப்பார் தொடர்பு.

அவ்வாறு புறத்தே நேசித்து, இனம்போலப் பழகி, அகத்தே அன்பற்றவர் நட்பு, விலைமகளிர் மனம்போல வேறுபடும். பகைவர் எவ்வளவு கற்றவராயினும் உள் ளுறவு கொள்ளார். அவர், இனம்போன்று இனமல்லார்.

இனம்போன் றினமல்லார் கேண்மை, மகளிர்
மனம்போல வேறு படும்.

முகத்தில் இனிய நகையும், அகத்தில் கொடிய பகையும் கொண்ட வஞ்சகரை அஞ்சி விலகுக. மனவுறவில்லாதவர் எவ்வளவு முகத்துதி பேசினும் நம்பக்கூடாது. நண்பர் போல இனிது பேசினாலும், பகைவர் வஞ்சம் புலப்படும். வணக்கமாக, இணக்கமாகப் பேசினாலும் பகைவரை நம் பாதே. வில் வணங்குவது எதற்காக? அம்பு தெறிக்கவே. பகைவர் சொல்வணக்கம் வில்வணக்கம்போலத் தீங்காகும்.

சொல்வணக்கம் ஒன்னார்கட் கொள்ளற்க, வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

கும்பிடும் கைக்குளும் அம்பை ஒளிப்பர்; பகைவரின் மாமாலக் கண்ணீரை நம்பாதே.

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ; ஒன்னார்
அழுதகண் ணீரு மனைத்து.

சிலர் முன்னால், 'ஆகா! உங்களுக்குச் சமானமா' என்று மிகவும் முகமன் செய்வர்; உள்ளுக்குள் இரகசியமாக, 'இவன் மகா மனிதனோ' என்று ஏளனம் செய்வர். அவர் களைப் புறத்தே நகையுடன் பேசி, உள்ளத்தில் அறவே ஒழி. பகைவருடன் நட்பாடச் சந்தர்ப்பம் வரும்போது, முக நட் புக்கொண்டு, அக நட்பை அறவே ஒழி.

பகைநட்பாங் காலம் வருங்கால், முகநட்டு
அகநட் பொரீஇ விடல்.

## 35. இன்னான் என்பதை இனத்தால் அறிக

உறவுக்கேற்ற வுள்ளமும், ஆளுக்கேற்ற தோழனும், நிலம்போல் நீரும், இனம்போ லறிவும் அமையும்.

> நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு ; மாந்தர்க்
> கினத்தியல்ப தாகு மறிவு.

அறிவு மனத்தில் உண்டாவதுபோலத் தோன்றும். ஆனால் அது சேர்க்கை வாசனையால் மாறும். பெரியார் சிற்றினம் அஞ்சுவர். சிறுமதியாளர், சிற்றினமே சுற்றமாகச் சூழ்வர். 'உன் சிநேகிதர் யார்? சொல்லு; நீ இப்படிப் பட்டவனென்று சொல்லுகிறேன்' என்றொரு பழமொழி உண்டு. மனத்திற் கேற்ற உணர்ச்சியும் இனத்திற் கேற்ற தன்மையும் பொருந்தும்.

> மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி ; யினத்தானாம்
> இன்னான் எனப்படுஞ் சொல்.

மனந்தூயவர்க்கு நல்ல மக்கட்பேறுண்டாகும். இனந் தூயவர்க்கு ஆகாத நல்வினை யில்லை. மனத்தூய்மை மாந் தர்க்குப் பெருஞ் செல்வமாகும். இனத்தூய்மை எல்லாப் புகழுந் தரும். நல்ல மனமுடைய பெருங்குணப் பெரியா ருக்கும் சத்சங்கம், நல்லார் உறவு, இனநலம் ஆகிய இவை பெரிய பலமாகும். தூய நன்மனம் விண்ணின்ப மளிக் கும். அத்துடன் நல்லார் இணக்கமும் இருந்தால் இன்பம் உறுதியாகும்; மிகப் பெருகும். மனநலமும் குணநலமும் இன நலத்தால் மிகப் பெருகும். ஒழுக்கம் உறுதியாக நிலைப்பதற்கு நல்லார் கூட்டம் பெரிதும் பயனாம். மனமும் செயலும் நல்லினத்தால் மாசற்றொளிரும்.

> மனந்தூய்மை, செய்வினை தூய்மை, இரண்டும்
> இனந்தூய்மை தூவா வரும்.

நல்வினைப் போன்ற துணையில்லை. தீயார் உறவைப் போன்ற அல்லல் இல்லை.

> நல்லினத்தி னூங்குந் துணையில்லை; தீயினத்தின்
> அல்லற் படுப்பதூஉ மில்.

## 36. அறிவிற் சிறந்த பெரியார் துணைக்கோள்

அறநெறி யொழுக்கத்தில் முதிர்ந்த அறிவுடைய பெரியார் கேண்மையே திறம். அத்தகைய பெரியார், உற்ற நோய் தீர்ப்பர்; நோயுறாது காப்பர்.

> அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
> திறனறிந்து தேர்ந்து கொளல்.

பெரியாரைப் பேணல் அரிதினும் அரிய நற்செயலாம். தம்மினும் கல்வி கேள்வி யொழுக்கங்களிற் சிறந்த பெரியாரைத் தலைக்கொண் டொழுகுதல் ஒருவனுக்குச் சிறந்த வலிமை தரும். தக்கவர் இனத்திற் சேர்ந்து அவரைப் பின்பற்றி நன்னெறியில் நடப்பவனைப் பகைவர் எதுவும் செய்ய முடியாது.

> தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
> செற்றார் செயக்கிடந்த தில்.

குற்றஞ் செய்தால் நன்றாக இடித்துத் திருத்தும் பெரியார் நட்பைக் கொண்டொழுகும் ஒருவனைப் பகைவர் எவரே கெடுக்க முடியும்? அமைச்சர் மன்னனுக்குக் கண் போன்றவர். அறமும், அறிவும், அனுபவமும் நிறைந்து, இதஞ்சொல்லி, குற்றஞ் செய்தபோது கண்டித்துத் திருத்தும் மந்திரியை அரசன் நன்குமதித்துக் கொள்ளுக. நன்றாக இடித்துப் புத்திசொல்லாது, மன்னன் சொன்னவெல்லாம் 'சரி சரி' யென்னும் தலையாட்டிப் பொம்மைகளால்

பயனில்லை. அத்தகைய கோழைகளையுடைய மன்னன் கெடுக்கும் பகைவரின்றியே கெட்டொழிவான்.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

முதலில்லார்க்கு ஊதியம் இல்லை. தூண்போன்று உறுதியாகத் தம்மைத் தாங்கும் நல்லறிவுப் பெரியாரின் துணையில்லாமல் மன்னருக்குப் புகழ் நிலைக்காது. பல பேரைப் பகைத்துக் கொள்ளுவதை விட நல்லறிவாளர் துணையைக் கைவிடுதல் பதின்மடங்கு தீங்காகும்.

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

## 37. நல்லவர் நட்பு நன்னூற் பயன்போல்

உண்மையான நட்பு உலகில் மிகவும் அரிது. நாம் அடையக்கூடிய பொருள்களில் நட்பைப்போல அரிய தொன்றில்லை. நாம் மேற்கொண்ட செயல்களுக்கு நண்பர் பெருந் துணையாவர்; நமது பகைவர் சூழ்ச்சியினின்று நம்மைக் காப்பர். ஆனால், பண்புள்ள நண்பரையே பற்ற வேண்டும். நிறைகுண நண்பர்நட்பு வளர்பிறை போலும்; புல்லர் நட்பு தேய்பிறை போலும்.

நிறைநீர நீரவர் கேண்மை; பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

அருட்பெரியார்கள் இயற்றிய தெய்வீக நூல்கள் கற்கக் கற்கப் புதுப்புது நயமும் பயனும் அளிப்பதுபோலப் பண்புடைய நண்பர் உறவும் பழகப் பழக இனிதாகும்.

நவிறொறு நூனயம் போலும், பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு

இத்தகைய பண்பர் உடனுறைந்து, அடிக்கடி கூடிக் கூடிப் பழகுதல் வேண்டா. அவர் உள்ளம் ஒன்றுபட்டு, எங்கிருப்பினும் அன்புணர்ச்சி மிகுந்துகொண்டிருக்கும். புணர்ச்சியினும் உணர்ச்சியே நட்பை உறுதிப்படுத்தும். கேவலம் முகத்தில் நகையுடன் புகழ்மொழிகளால் ஒருவரை யொருவர் துதி செய்வது நட்பன்று. வெறும் வாய்ப்பந்தலாற் பயனில்லை. நெஞ்சில் அன்பிருக்கவேண்டும். உள்ளொன்றி, மனமகிழப் பழகவேண்டும். அதுவே நட்பு.

> முகநக நட்பது நட்பன்று ; நெஞ்சத்
> தகநக நட்பது நட்பு.

"உனக்குச் சமானமா? நீ இந்திரன்; சந்திரன்" என்று முகத்துதி பேசி, கூட்டங்கூடி வேடிக்கையாகச் சிரித்துத் திரிவது நட்பன்று. அறவழி தப்பி மிகைசெய்தால், நன்றாக இடித்துப் புத்திசொல்லி, நல்ல வழியில் திருப்புதலே நட்பின் கடமை. கெடுதலைத் திருத்தி, நல்லதை வளர்ப்பதே நட்பின் பெருமை. இன்றேல், திருடர், குடியர், சூதர் சோம்பேறிகளிடமுந்தான் ஒரு நட்புள்ளது. அத்தகைய இழிநட்பு வாழ்வை நரகமாக்கும். அழிசெயல்களினின்று நீக்கி, நல்வழியில் நடக்கச் செய்து, உனக்கொரு கேடு வந்தபோது, தனக்குவந்த துன்பமென்று தானும் உடன் வருந்தி, ஒரு சபையிலே வேட்டி யவிழ்ந்தால், எப்படி உடனே அதை யெடுத்து உடுத்திக்கொள்ளக் கை பாயுமோ அதுபோலத் தனது தோழனுக்கு வந்த இடுக்கண் தீர்ப்பதே உண்மையான நட்பின் இலக்கணம்.

> உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
> இடுக்கண் களைவதா நட்பு.

நட்பின் அரியணை எங்குள்ளது? எவ்விதமான வேறுபாடுமின்றி, கூடக்கூட அன்பும் அறமும் நிலையாக ஊன்றித்

திண்மைபெறும் உள்ளத்திலேயே நட்பென்னும் அரசி வீற்றிருப்பாள். அந்த அன்புச் சேர்க்கையில் முகமன், அறிமுகம் என்பதே யிராது. அன்பென்னும் கங்கையிற் கூடிய இரு நதிகள்போல அந்த நட்பு இன்ப வெள்ளந் ததும்பும். 'தெரியாதா? இவர் நமது நண்பர், நாங்களிருவரும் நெடு நாளாக ஒன்று. இவர் மகா தாராளமான சித்தமுள்ளவர்' என்றெல்லாம் புனைந்துரைப்பதுகூட நட்பிற்குச் சிறுமை யாகும்.

இனையர் இவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.

நெடுநாள் உரிமையுடன் நெருங்கிப் பழகிய நண்பர், ஒருவருக்கொருவர் பிழைகளைப் பொறுத்து, எவ்விதமான மனத்தாங்கலுமின்றி நேசிப்பர்; கேளாது நடந்தாலும், நோகத்தக்க காரியங்கள் செய்தாலும், அழிவு வந்தாலும், நஷ்டப்படுத்தினும், 'அறியாமையால் செய்தான்; வேண்டுமென்று நமது நண்பன் இப்படிச் செய்யான்; அல்லது நம்மிடம் அதிக உரிமை கொண்டு செய்தான்' என்றெண்ணி மன்னித்து மறப்பர்.

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

'உன் நண்பன் இப்படி' என்று பிறர் கோட்சொல்லி மனதைக் கலைக்கப்பார்த்தாலும், பழகிய நண்பர் அச்சொல்லைக் கேளாது, அன்பு செய்வர்; நண்பர் பிழை செய்தாலும் குத்திக்காட்டாது பொறுப்பர். மாறுத அன்புடன் பழகும் நண்பரை உலகம் முழுதும் விரும்பும். பண்பறாது பழகும் உள்ளன்பரைப் பகைவரும் விரும்புவர்.

## 38. அன்பே யின்பம்; அன்பே யுயிர் நிலை

தீமை தீர்ந்து, மேற்சொன்ன நன்மைகள் பெருகி, மனித சமுதாயம் உள்ளொன்றிய நண்பர் கூட்டமாக வாழ்தற்கு, அன்பு, அருள், பொறுமை இம்மூன்றும் இன்றியமையாதன. அன்பினால் ஆர்வமும், அதனால் நண்பென்னும் தேடரிய செல்வமுங் கிடைக்கும். உடலுக்கும் உயிருக்கும் அன்புத்தொடர்பே உள்ளது. கட்டற்ற ஆன்மா, இந்த எலும்புக்கூட்டில் இணைந்திருப்பதேன்? அன்பை விரும்பியே. உலகில் மாந்தர் நுகரும் இன்பம் அன்பின் பயனே. அன்பிற் கேற்ற இன்பம் விளையும். அன்பே உயிரின் நிலைக்களன். உயிர் உடலில் நிலைகொண்டு வாழ்வது, அன்பின் வழியே. அன்பில்லாத மனிதன் எலும்புந் தோலும் போர்த்த உடம்புள்ளவன், உணர்ச்சியுள்ள உயிரற்ற அசேதனன் போலும்.

அன்பின் வழிய துயிர்நிலை; அஃதிலார்க் (கு)
என்புதோல் போர்த்த உடம்பு.

உடம்பு புறத்துறுப்பு. அன்பே உள்ளுறுப்பு, அந்தக் கரணம், உயிர். அன்பில்லா வெற்றுடல் பயனில்லை. வரண்ட வனாந்தரத்தில் உலர்ந்த மரம் துளிர்த்துத் தழைத்தோங்குமோ? அதுபோல, உள்ளே அன்பில்லாத உயிர் வாழ்க்கையும் செழித்தோங்காது. மனிதனுக்கு எல்லா இன்பங்களையும் நல்கும் அறத்திற்கு மட்டுமல்ல, அதர்மத்தை மாற்றுவதற்கும் அன்பே துணையாகும். எலும்பில்லாத புழுவை வெயிலின் கொடுமை வாட்டுவதுபோல, அன்பில்லாதவனை அறக்கனல் வாட்டும். அன்பற்றவனை அறம் சுடும்.

என்பி லதனை வெயிற்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

அன்பை அடைத்துவைக்க முடியாது. அன்பிற்குத் தாழ்ப்பாள் கிடையாது. ஆர்வங்கொண்ட காதலர் கண்களில் ததும்பும் நீர்த்துளிகளே அன்பைக் காட்டும். உள்ளத்தில் ஊறும் அன்பு, கண்வழியாகப் பொசிந்து காட்டும். கடவுளன்பு, காதலர் அன்பு, தாயன்பு, உயிர்க்கருணை, எல்லாம் இத்தகையன. இத்தகைய பேரன்பர் எல்லா உயிர்களிடமும் அருள்பெருகிப் பிறர்க்கென வாழுவர். தமது எலும்பைக் கேட்டாலும் ததீசி முனிவர் போலக் கொடுத்துப் பொதுநலம் புரிவர். அன்பில்லாதவர் சுயநலர்.

அன்பிலா ரெல்லாந் தமக்குரியர், அன்புடையார்,
என்பு முரியர் பிறர்க்கு.

## 39. யாதினும் பெரிதாம் அருட்பெருஞ் செல்வம்

ஆன்மா நிலையானது; அனைத்திலும் ஒருமயமானது. இதை உணர்வான் தன்னுயிரில் மன்னுயிரைக் காண்பான். அனைத்துயிர்களும் அவன் உள்ளத்தில் துடிக்கும். அவற்றிற்கு வந்த துன்பத்தை, அவன் தனதெனத் தீர்ப்பான்; அவற்றிற்குச் செய்யும் நன்மை தனக்கே இன்பம் என்றுணர்வான். அவனே அருளாளன். உயிர் அஞ்சும் இருவினைக் கட்டுகள் அவனுக்கில்லை. அவன் என்றும் அருளுணர்விலேயே வாழ்கிறான்.

மன்னுயி ரோம்பி யருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

மடமை யிருளும், பந்த தொந்தத் துன்பங்களும் நிறைந்த கீழியலுலகிற் புகுந்து அருளாளர் வருந்தார். சுவர்க்கமும் நரகமும், பந்தமும் மோட்சமும் அவரவர் மனத்திலே யுள. அருளாளர் நெஞ்சம் எப்போதும் இறைவனிடமும், இறைவன் திருமேனியாகும் ஆன்மாக்களிட

மும், அன்புமிருந்து நிலைத்திருக்கும்; ஆதலால் உலகாயதத் தீமையும், நரகத் துயரும், அறியாமையால் வரும் கேடுகளும் அருளுடையார்க்கு இல்லை. அருளை மனத்திற்கொண்டு, அதனால் உலகுயிர்களுக்கு நலஞ்செய்து வாழ்வோரை, எவ் விதமான அல்லலும் கெடுப்பதில்லை. காற்றுச் சூழ்ந்த, விசாலமான, வளமிகுந்த உலகமே அதற்குச் சாட்சி. பயிர்விளை வித்து உயிர்களையெல்லாந் தாங்கும் உலகம் உயிர்க்கணங் களுடன் நிலைபெற்று நீடு நிலவுகிறது. நல்லொழுக்கம் பயின்று, மன மொழி மெய்த் தூய்மையுற்று, அருளைப் பெறுக. பல மதங்களிற் புகுந்து தேடினாலும், அருளே அவற்றின் முடிபாகும். அருளே அருந்துணையாகும். மதங்கள் உயர்வாகச் சொல்லும் மோட்ச இன்பம், அருளில் லார்க்கு இல்லை. பொருளில்லாத வறியருக்கு, இவ்வுலகின் சுகபோகங்கள் இல்லை. அருளில்லார்க்கு அவ்வுலகின் பேரின்பம் எட்டாது.

> அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க் (கு)
> இவ்வுலக மில்லாகி யாங்கு.

தேடவேண்டிய பொருள் அருளே. அதை மறந்த வர், அல்லது செய்து, அல்லற்படுவர். பொருளில்லாத ஏழை முயற்சியால் ஒருகாலத்தில் செல்வச் செழிப்புறலாம். அருளற்றவன் தழைத்து வாழமாட்டான். சித்தந் தெளி யாதவன், உண்மையான கடவுட்பொருளை உள்ளத்திற் காணமுடியாது. அதுபோல, அருளில்லாதவன் அறப் பயன் காணான். அருளில்லாதவன் கன்மனத்தன், அகங் காரி, அன்பும் இரக்கமும் இல்லாதவன். அவன் மனமிளகி அறஞ்செய்தல் அரிது; செய்தாலும், நல்லமனதுடன் செய்யமாட்டான். அவனுடைய அகங்காரமே அதை அழித்துவிடும். அறம், பொருள், இன்பம் அனைத்திற்கும்

6

அருள்வேண்டும். அருட்செல்வமே செல்வம். புல்லரிடமும் பொன்னும் பொருளும் உள.

> அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்; பொருட்செல்வம்
> பூரியார் கண்ணு முள.

மனிதன் தன்னைப்போலப் பிறரை நினைத்து உதவ வேண்டும். ஒரு வலியன் நம்மை அடித்தால் வருந்துகிறோம். நம்மினும் மெலியரை நாம் வருத்தும்போது அவ்வுணர்ச்சி வரவேண்டும். வலியர் மெலியரை வருத்துதல் கொடுமை; அருளால் அதர்மக் கொடுமைகள் அழியும்.

## 40. பொறுமை பூண்டார் புகழ்முடி பூண்பர்

தீயதை வென்று, நல்லதை நிலைநிறுத்தி, அன்பும் அருளும் பொலியும் இன்பவாழ்வு பெற, எவ்வளவோ பொறுமை கொண்டு ஒருவன் சாதனம் செய்யவேண்டும். அறியாப் பகைவர் எள்ளுவர், தீங்கிழைப்பர், வன்சொல் வழங்குவர், அவற்றையெல்லாம் பொறுத்து, மன்னித்து, நிறை குன்றாது மேலோங்க வேண்டும். நிறைகுண நல்லோர் பொறை மிக வுடையார். பொறுமையே ஒரு தவமாம். பெரியோர் உண்ணாது நோற்பர்; உபவாச விரதங்களைக் கைக்கொண்டு தவம்புரிவோர் பெரியவர்களே. பிறர், பகைமை, பொறாமையாற் பேசும் கொடுஞ்சொற்களைப் பொறுக்கும் சாந்தர், அவரினும் பெருமையுடையார். அவர்கள் துறந்த முனிவரைவிடத் தூயர். ஏனெனில், பொறுமையாளரிடம், பகை, வஞ்சம், பதற்றம் இல்லை. அன்பு, அமைதி, மனவலி மிக்குள. துறவிகள், உலகினின்று விலகியிருந்து இக்குணங்களைக் கொண்டொழுகுவது இயல்பேயாம். பொறுமை, ஏழமை – கோழமை யன்று. வெட்கத்தக்க

தரித்திரத்தனம் யாதெனில், வந்த விருந்தை உபசரிக்கா திருத்தல். ஆற்றலினும் பேராற்றல் யாதெனில், மடையர்கள் இழைக்கும் தீமைகளைப் பொறுத்தல். சிலுவையில் அறைந்த பகைவர்களையும் பொறுத்து, 'பரம பிதாவே, அவர்களை மன்னி; தாம் செய்வது இன்னது என்பதைத் தாமே அறியாது செய்கிறார்கள்' என்றார் ஏசு நாதர். மக்கள் நாடோறும் நிலத்தை வெட்டித் தோண்டி, உழுது, பயிரிடுகின்றனர். அந்நிலம் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு மன்னுயிரைத் தாங்குகிற தல்லவா? அதுபோல, இகழும் பகைவரைப் பொறுத்தல் அறிவாளரது இன்றியமையாத தன்மையாம்.

அகழ்வாரைந் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை.

பிறர் செய்த குற்றத்தை அடுத்த விநாடியே மன்னித்து மறக்கவும்; அதனால் பகை முதிராது; எதிராளி நல்லுணர்ச்சி பெறுவான். தீச்சினங்கொண்டு ஒறுத்தாரை, அறிவாளிகள் ஒரு பொருட்டாக மதியார்; பொறுத்தாரையே மாசற்ற பொன்போல மதிப்பர். பொன்னுக்குத் துரு வேறுது. பொறுமைக்குச் சினமேறுது. பிறர் செய்யத் தகாத கொடுமை செய்தாலும், அக்கொடுமையால் மனத்தில் நொந்து வருந்தி, ஆத்திரங்கொண்டு, பதிலுக்குப் பதில் அதர்மமான தீமையை நாமும் செய்யாமல் இருத்தல் நல்லது. ஆனால் அப்படி மிகை செய்யும் பகைவரை வெல்வதெப்படி? செருக்குக்கொண்டு ஆத்திரப் படபடப்பில், பகைவர் தீங்கு செய்கின்றனர். நீ அமைதியுடன் எதிர் செய்யாமல் பொறுத்து, உனது தகுதியைக் காட்டு. 'அடா! இவ்வளவு பொறுமையும், நற்குணமும் கொண்டவனையா நாம் ஒறுத்தோம்' என்று பகைவர் வெட்கித் திருந்துவர்.

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

ஒறுத்தவர்க்கு, ஆத்திரம் தீருமட்டும் ஒருநாளை இன்பமேயுண்டாகும். எதிர்செய்யத் திறமையிருந்தும் பொறுத்தவர்க்கு உலகம் அழியு மட்டும் புகழ் நிலைக்கும்.

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

இதற்கு அத்தாட்சி, நம்முன் உண்மைக்கும் பொறுமைக்கும் மலையிலக்காக விளங்கி, அரிய பெரிய காரியங்களைச் சாதிக்கும் **மஹாத்மா காந்தியே**யாவர். பொறுமை பொன்முடி கொள்ளும்.

# நூல் 6

## கல்வி, கேள்வி

## 41. புல்லறி வாளர் நல்லது கொள்ளார்

இதுகாறும் இயல்பான நல்வாழ்விற்கு இன்றி யமையாத அறநெறியும், விலக்க வேண்டிய மறநெறியும் விளக்கப்பெற்றன. அறநெறி யறிந்தொழுக, கல்வி கண் போலுதவும். கல்லாதான் சொல் செல்லாது. மடமை கொடிது; ஒருவனுக்குக் கொடிய வறுமை அறிவின்மையே.

> அறிவின்மை யின்மையு ளின்மை; பிறிதின்மை
> யின்மையா வையா துலகு.

செல்வம் படைத்திருந்தும், ஈந்துவக்கப் புல்லறிவாளர்க்கு மனம் வராது. அப்படி ஒருகால் ஈந்தாலும், அதுவும் பெற்றவன் செய்த நல்வினையால் எய்தியதென்றே கொள்ள வேண்டும். மூடர், தங்கள் மடமையாலேயே தமக்குப் பகைவரைவிடப் பெரிய இன்னலைத் தேடிக்கொள்வர். அறிவிலிகளின் வெள்ளைத்தனம், 'நாம் ஒள்ளிய மதிப்பொலி வுடையேம்' என்று சம்பமடிக்கும். அந்தத் தற்செருக்கே அவர்களின் வெறுமையைக் காட்டும்.

> வெண்மை யெனப்படுவ தியாதெனின், 'ஒண்மை
> யுடையம்யா' மென்னுஞ் செருக்கு.

கல்லாத நூல்களையெல்லாம் தான் கற்றதாகச் சம்பம் பேசுவான் புல்லறிவாளன். அதனின்று அவன் ஏதோ சிறிது கற்றதுகூடச் சந்தேகமாகப்படும். புல்லறிவாளன்,

வெகு தடபுடலாக உடலை அலங்காரஞ் செய்துகொள்வான்; தனது குற்றத்தை அறிந்து, திருத்தி, மறையச் செய்ய மாட்டான். அவனுக்குச் சொன்ன அரிய வேதோபதேசங்களைச் சோரவிடுவான்; நல்ல வழி காட்டினாலும் நடக்காது, தனக்குத்தானே துன்பத்தைத் தேடிக் கொள்வான்; அறிவாளிகள், 'இப்படி நட' என்று ஏவினால் நடக்க மாட்டான்; தானாகவும் கடைத்தேற மாட்டான்; உண்மையுணர மாட்டான். அத்தகைய புல்லறிவாளன், இறக்குமளவும் துயரில் ஆழ்வான். அவனது யாக்கையை விருப்பின்றிச் சுமக்கும் நிலத்திற்கு, அவன் உயிர் நோய்போல் துன்பஞ் செய்கின்றது.

> ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
> போஒ மளவுமோர் நோய்.

தன்னை எல்லாமறிந்தவனாக மதிக்கும் புல்லறிவாளன் நல்லறிவைக் கொள்ளான். அவனுக்குப் புத்தி சொல்லுகிறவனும், அறிவில்லாத மடையனுக்குப் புத்தி சொல்லுகிறவனும் சரி. தனது புல்லறிவு காண்பதே சரியென்பான் மூடன்; உலகத்துடன் ஒத்து வாழ மாட்டான்: உலகிலுள்ள அறிவாளிகள், 'உண்டு' என்று ஒப்பிய உண்மையை, 'இல்லை' யென்று எதிர்ப்பான்; அத்தகைய மூடப் பிடிவாதக்காரனை ஒரு பேயென்றே அறிஞர்மதிப்பர்.

> உலகத்தார் உண்டென்ப தில்லென்பான், வையத்
> தலகையா வைக்கப் படும்.

இத்தகைய பேதையர், ஏதங்கொண்டு ஊதிய மிழப்பர்; கெடுதலைப் பற்றுவர்; நல்லதை விடுவர்; ஆகாத காரியத்தில் ஆசை வைப்பர். பேதையானவன் இப்பிறப்பிலேயே எழு பிறப்பிற்கும் நரகத்தைத் தேடிக் கொள்வான். அவனை ஒரு

காரியத்திற்கும் நம்ப முடியாது. அவன் தாறுமாறான பிழைகளைச் செய்வது மட்டுமன்றித் தனக்கே விலங்கு தேடிக் கொள்வான்; ஏதாவது ஒரு பொருள் ஆதாயமானால், குடி வெறியேறிய பித்தன் மாதிரி நடப்பான். பேதையின் சிநேகம் மிகவும் சௌகரியம்; ஏனென்றால் பிரியும்போது எவ்விதமான வருத்தமும் இராது. பேதை நட்புத் தானே தேயும். சான்றோர் கூட்டத்தில் பேதை புகுதல், சுத்தமான படுக்கையில் ஆபாசத்தை மிதித்துக் கழுவாத காலை வைப்பது போலாகும்.

> கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
> குழாஅத்துப் பேதை புகல்.

பேதைக்கு வெட்கம், நாணம் இல்லை; நல்லதை நாட மாட்டான்; அன்பு மரியாதையின்றித் தடித்தனமாக நடப்பான்; கடமை பேணான். இஃதே அவன் தொழில்.

> நாணாமை, நாடாமை, நாரின்மை, யாதொன்றும்
> பேணாமை பேதை தொழில்.

மடையனுக்குச் செல்வம் வந்தால், அவன் தன்னைச் சேர்ந்தவரைப் பட்டினிபோட்டு, அன்னியர் வேண்டுமட்டும் அநுபவிக்கும்படி அதைத் தகாதவழியில் வழங்குவான்; குடி, கூத்தி, கோர்ட்டு, சூது, இடம்பக் கூத்துகளுக்குச் சொத்தை விரயமாக்கித் தான் காப்பாற்ற வேண்டிய உறவினர் உண்ணக்கூட இல்லாது வருந்தச் செய்வான்.

> ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர், பேதை
> பெருஞ்செல்வ முற்றக் கடை.

## 42. கல்லான் சொல்ல வல்லான் அல்லன்

இப்பேதைமையும், புல்லறிவாண்மையும் நீங்க நல்ல கல்விப் பயிற்சி வேண்டும். கல்லாதவன் சொல் செல்லாது.

முன்னே சொல்லறத்தை அறிந்தோம். சொல்வன்மை கல்வியால் வரும். நிரம்பிய நூலறிவின்றி அறிவாளர் சபையில் பேசத் துணிதல், வகுப்பறை யில்லாது சதுரங்கம் விளையாடுவது போலாகும். ஒரு பெண் ஒரு அழகனைக் காமுறுகிருள். அவன் தன்னைப் பார்த்து, 'இப்பெண் எவ்வளவு அழகாயிருக்கிருள்' என மெச்சவேண்டும் என்று ஆசைப்படுகிருள் அவள். ஆனல், அவளுக்கு இரண்டு முலைகளும் இல்லை; பெண்மைக்கும், காதலின்பத்திற்கும் சிறப்பான முலை யில்லாத போது, அவளிச்சை நிறைவேறுமா? அப்படி யவள் வலுவில் நெருங்கிளுலும், ஒரு அழகன் மனத்தை வசப்படுத்த முடியுமா? முடியாது. அவளது முயற்சி பலிக்காது; சிறக்காது. அதுபோல, ஒருவனுக்குக் கல்வி யில்லை; பயிற்சியில்லை. (பெண்ணுக்கு முலை யெப்படியோ அப்படியே ஒருவனுக்குக் கல்வி அவசியமானது.) கல்வியில்லாதவன் அறிவாளர் சபையில் சொற்பொழிய அவாவுகிருன். அவன் பேச்சை யார் விரும்புவர்? அப்படி அவன் அசட்டுத் துணிவுடன் மேடையேறிப் பேசிளுலும், அவன் சொல் அவலப்படும். அவன் அவமானப்படுவான்.

கல்லாதான் சொற்கா முறுதல், முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.

கல்வி கேள்விகளில் மிகுந்த அறிவாளிகள் முன்னே வாயைத் திறக்காதிருந்தால், கல்லாதவரும் மிகவும் நல்லவரேயாவர்.

கல்லா தவரு நனிநல்லர் கற்ருர்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

ஒருவேளை அறிவுரை கூறிளுலும், கல்லான் பேச்சை அறிவாளிகள் பொருட்படுத்த மாட்டார்கள். தெரிந்தவன் போலப் படியாதவன் பேசும் பேச்சு, கல்வியறிவாளர்

பேசும்போது சோபிக்காதுபோகும். கற்றவர் முன்னே கல்லாதவன் பேச்சு ஏறாது. கற்றோர், 'ஏதோ ஜீவ ஜந்து இருக்கிறது' என்பர் கல்லாதவனைப் பார்த்து. கல்லாதவன் களர் நிலம்போலப் பயனற்றவன். பலதுறைகளிலும் நன்கு நுழைந்து ஆராய்ந்த நுண்ணிய மாண்புள்ள, புலமை வேண்டும். அப்படி யில்லாதவன் பகட்டும், அலங்காரமும், மண்பாவையின் அழகுபோலாம்.

நுண்மாண் நுழைபுல மில்லான் எழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

கற்றவர்க்கு, வறுமை துயராம். அதனினும் துயராம் கல்லாதவன் செல்வம். உயர்குலத்திற் பிறந்தும், கல்லாதவன் இழிஞனவன். இழிகுலத்திற் பிறந்தும், கற்றவனே மேலோனவன். விலங்கிற்கும் மக்களுக்கும் எவ்வளவு வேற்றுமையோ, அவ்வளவு கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் உள்ளது. கல்வியால் மனிதனிடமுள்ள விலங்குத்தன்மை ஒழியும்.

விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

## 43. கசடறக் கற்றுக் கற்றவா றொழுகு

எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும். கற்றவரே கண்ணுடையார்; கல்வியில்லாதவர் முகத்தில் இரண்டு புண்ணுடையார். ஏனெனில் கல்லார், கண்ணிருந்தும் நல்வழி பார்த்து நடக்க மாட்டார்கள்; அல்வழி நடந்து புண்படுவர்.

கண்ணுடைய ரென்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

வறியர் செல்வர்முன் தாழ்வதுபோலத் தாழ்ந்து பணிந்தேனும், நல்லாசானிடம் கல்வி பயின்றவர் மேலானவர். அப்படி ஆசானுக்கு வணங்கிக் கல்லாதவர் கடையரே. ஒரு பிறவியிற் கற்ற கல்வி, ஏழு பிறப்பிற்கும் இன்பமளிக்கும், மேன்மை தரும். ஏனெனில், கல்வி என்றுங் கெடாத விழுமிய செல்வம்; பகைவன், பங்காளி, கள்ளன் இவர்கொள்ள முடியாத நிலையானசெல்வம். மற்றைப் புவிச் செல்வங்கள், நிலைக்கும் செல்வங்க ளல்ல.

> கேடில் விழுச்செல்வங் கல்வி ; யொருவற்கு
> மாடல்ல மற்றை யவை.

மேலும், பொன்மணிச் செல்வம் எடுக்க எடுக்கக் குறைந்து முடிவில் வற்றிப்போகும். தோண்டத் தோண்ட ஊறிப் பொங்கும் மணற் கேணிபோல, கற்கக் கற்கக் கல்வி அறிவு பொங்கிப் பெருகும்.

> தொட்டனைத் தூறு மணற்கேணி ; மாந்தர்க்குக்
> கற்றனைத் தூறு மறிவு.

கற்றவனுக்கு யாதும் தனது சுதேசம்போலாகும். எந்த ஊரும் தன் சொந்த ஊர்போல இனிதாகும். அவனை எந்த நாடும் வரவேற்கும், எந்த ஊரிலும் அவனுக்குச் செல்வாக்குண்டு. இவ்வளவு பெருமைதரும் கல்வியைச் சாகுமட்டும் ஏன் ஒருவன் கற்காமல் காலங்கழிக்கிறான்? நல்ல நூல்களை மேன்மேலுங் கற்க வேண்டும். அறிவாளிக்கு யாங்குஞ் சிறப்புண்டு.

> யாதானு நாடாமால் ஊராமால் ; என்னொருவன்
> சாந்துணையுங் கல்லாத வாறு ?

தான் சுவைத்து இன்புற்ற கல்வியறிவை உலகமும் சுவைத்து இன்புறுவதைக் கண்டு, கற்ற புலவர் மேன்

மேலும் உலகிற்குக் கல்வி புகட்டப் பெரிதும் விரும்புவர். கற்றதைக் கற்பித்தல் களிப்பு.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

கற்றோர் பேருவப்புடன் கூடுவர். மீண்டும் எப்போது கூடுவோமோ என்ற வருத்தத்துடன் பிரிவர்.

உவப்பத் தலைக்கூடி, யுள்ளப் பிரிதல்,
அனைத்தே புலவர் தொழில்.

இவ்வாறு, என்றைக்கும் பெருமையும், அனைவர்க்கும் இன்பமும் தரத்தக்க கல்வியை மாசறக் கற்கவேண்டும். அறிவு, ஆற்றல், ஒழுக்கம், கலை, பிழைப்பதற்கேற்ற நற்றொழில்களைப் பயிற்றி ஆளாக்கும் கல்வியே கற்கத் தகும். அப்படிக் கற்பவை கற்றபின், கற்றவழி நின்றொழுகி மேன்மை பெறுக.

கற்க கசடறக் கற்பவை ; கற்றபின்,
நிற்க வதற்குத் தக.

கற்றும், பிறர்க்கு உபதேசித்தும், தான் அடங்காது நடக்கும் படித்த முட்டாள், பெரிய பேதை யாவான்.

ஓதி யுணர்ந்தும், பிறர்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

கற்றதன் பயன் என்ன? முற்றறிவனை இறைவனைப் பணிதலே.

## 44. கேள்விச் செல்வம் கேடிலாச் செல்வம்

பெரியார்களிடம் பாடங் கேட்க வேண்டும். படிப்பதை விடக் கேட்டல் மனத்திற் பதியும். சிறந்த செல்வம் செவிச்-

செல்வம். கற்காத போதும் பெரியார் உபதேசங்களைக் கேட்கவும். அக்கேள்வியறிவு, இடர்களிற் பற்றுக்கோடாக உதவும். சேற்று நிலத்தில் ஊன்றுகோல்போல, கற்றறிந்து நல்லொழுக்கம் வாய்ந்த பெரியார் சொல் உறுதி தரும். அறிவாளிகளின் அமுதமொழிகளைச் செவி யுண்ணும் போது பசிகூடத் தெரியாது. செவிக்கு அத்தகைய நல்லு ணவில்லாத போதுதான் வயிற்றின் நினைப்பு வந்து அருந் துவர், கேள்வி விரும்பும் நல்லோர்.

செவிக்குண வில்லாத போழ்து, சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

இனிய செவியுணவு கொண்ட அறிவாளர், அமுதை உண்ணும் தேவர் போல்வர். வாய்ச்சுவையே யுணர்ந்து, பெரியார் அமுதமொழிகளைச் செவியாற் சுவைக்கத் தெரி யாதார் இருந்தென்ன, போயென்ன ? அவர்கள் மாக்கள் போன்று, தீனியே பெரிதாக உண்டு காலங்கடத்து கின்றனர். கேள்வியால் மீண்டும் மீண்டும் துளைக்கப் படாத காது இருப்பினும், அதனையுடையார் செவிடர் போல்வர்.

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

மனத்திற் பதிய, நன்கு, அழுந்த ஆராய்ந்துணர்ந்து, அறிவு நிரம்பிய கேள்விச் செல்வமுடையவர், வாய் தவறி யும் மடத்தனமாகப் பேசார். பொருளுணர் புலவர் புன் மொழி பேசார். அப்படி நுட்பமான கேள்வி யில்லாத வர்களிடம் வாயடக்கம் இராது.

நுணங்கிய கேள்விய ரல்லார், வணங்கிய
வாயின ராத லரிது.

நாடோறும் பெரியார்களிடம் சென்று எத்துணை யேனும் நன்மொழி கேட்கவும்; கேட்டமட்டிற் பெரும் பயனுகும்.

> எனைத்தானு நல்லவை கேட்க ; அனைத்தானும்
> ஆன்ற பெருமை தரும்.

## 45. அறிவுடை யாரே திருவுடை யாராம்

கண்டதைக் கேட்டு நடப்பதிற் பயனில்லை. எப்பொருளை யார்வாயிலாகக் கேட்டாலும், அதில் உண்மை இன்னது என்று நன்கு ஆராய்ந்து உணர்வதே அறிவு.

> எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு.

தனக்குத் தெரிந்ததைத் தெளிவாக, எளிதாகப் புரியும்படி சொல்லி, பிறர் மூலம் தான் அறியவேண்டிய நுண்பொருளைக் கண்டறிதல் அறிவு வளர்ச்சிக்குத் துணையாகும். மனத்தைப் போனபோக்கில் விடாமல், அடக்கி, தீமையை விடுத்து, நல்வழியிற் செலுத்தலே அறிவாகும். அறிவு ஒருவனை அழிவின்றி காக்கும் கருவி ; பகைவரும் புகுந்து அழிக்கமுடியாத உறுதிக் கோட்டை. அறிவே தன்னைக் காக்கும் படை. உலகத்தைத் தழுவி நடப்பது அறிவுடைமை யாகும். அப்படி நடக்கும்போது, உலகின் இன்ப துன்பங்களால் முன்னே மலர்ந்தும் பின்னே கூம்பியும் போகாமல், எப்போதும் சமநிலையில் விளங்குவதே அறிவு. பெரியார்களைக் கொண்ட உலகம் எப்படி நடக்கிறதோ, அப்படித் தானும் ஒத்து நடத்தல் அறிவு. லௌகிகத்தையும் அனுசரித்து நடந்தல் அறிவுடைமையாகும்.

> எவ்வ துறைவ துலகம், உலகத்தோ
> டவ்வ துறைவ தறிவு.

'இன்னதால் இன்னதாகும்' என்றதை, அறிஞர் ஆராய்ந்து நடப்பர். அறிவிலிகள் கண்டபடி நடப்பர். 'பார் என் தைரியத்தை' என்று அசட்டுத்தனமாக நடப்பது படமை. அஞ்சவேண்டியதற்கு அஞ்சி நடக்கவேண்டும். அறிவுடையார், உலகம் வெறுக்கத்தக்கதை அஞ்சி நடப்பர்.

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை ; யஞ்சுவ (து)
அஞ்ச லறிவார் தொழில்.

முன்யோசனையுடன், இன்னது செய்தால் இன்னது விளையும் என்று உணர்ந்து, தற்காப்புடன் கவனமாக நடப்பவன், எந்தத் துன்பம் வந்தாலும் நடுங்கமாட்டான் ; தைரியமாகச் சமாளிப்பான். ஆதலால், எதையும் நன்கு ஆராய்ந்து, சமயோசிதமாக உலகை அனுசரித்து நடக்கும் அறிவுடையார்க்கு ஒரு குறையும் இல்லை. அவர்கள் எல்லாம் உடையவராவர். மனம்போனபடி நடக்கும் அறிவிலிகள், எவ்வளவு சொத்தும் சுகமும் கொண்டவரேனும், ஒன்றுமில்லாத ஏழையராவர்.

அறிவுடையா ரெல்லா முடையார் ; அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.

# நூல் 7

## காதல் விளக்கம்

### 46. கண்கருத் தொத்த காதலர் வாழ்க!

கல்வி, கேள்வி, ஒழுக்கம், அறிவாற்றல்களிற் சிறந்த வாலிபன் வாழ்வென்னும் மாளிகையில் நுழைகின்றான். ஒரு புதிய உணர்ச்சி யுண்டாகிறது; தனது சரிபாதி வேறொரு ஆன்மாவிடம் இருப்பதாக உணருகிறான். அப் பாதியிலேயே தனக்கு இன்பம் இருப்பதாகக் காண்கிறான். அஃதின்றி, வாழ்வு நிறைவேறாது. மானிடத்தின் ஒரு பாதியான ஆண், மற்றொரு சமபாதியான பெண்ணை நாடுகிறது. வாழ்வென்னும் மின் மீட்டியில் (Battery), ஆண்மை என்னும் ஆகுமின்னல், பெண்மை என்னும் ஏகு மின்னலைப் புல்ல வேட்கிறது. இரண்டு மின்னல்களும் கூடியே வாழ்வின் மின்பொறி, இருவினைக்களனான உலகில் பல இன்ப துன்பங்களை நுகரும். ஒன்றின்றி மற்றொன்றிற்கு வாழ்வில்லை. இந்த இன்றியமையாத இயலின்ப வேட்கையே **காதல்**. ஆணில் உள்ள சிவம், பெண்ணில் உள்ள சக்தியை விரும்புவதே காதல். இதன் விளக்கம் **யோகசித்தி** இல்லறவியலிற் காண்க: "மனிதா, நீ தனித்து வாழப் பிறந்தவனல்லை. அதோ நிற்கிறாள் பார் உன் வாழ்க்கைத் துணைவி" என்று இயற்கை காட்டுகிறது; உள்ளிருந்து தூண்டுகிறது. இது தடுக்க முடியாத இயலுணர்ச்சி. உலக வளர்ச்சிக்காக மாயாசக்தி ஏவிய பலமான காதற் காந்தத்தை யாரே வெல்லமுடியும்? சுத்தான்ம

சித்தியால் மாயவலையிற் படாது தப்பிய மிகச் சில தீரர் களே இந்தச் சக்தியை வெல்லமுடியும். ஆண் பெண் வாழ் விற்கு இன்றியமையாத இக்காதலை நமது தமிழர் ஒரு அருங்கலையாக வளர்த்து இலக்கண இலக்கியங்களை ஏராள மாகச் செய்திருக்கின்றனர். இக்காதல் உள்ளிருந்து அரும்பி ஐம்புலனும் ஒரேகாலத்தில் நுகர முடிகிறது. இதை **அகப் பொருள்** என்றனர். பிரமானந்தம் அடைய **வியாசர் பிரம சூத்திரம்** வகுத்ததுபோல, ஆண் பெண் கூடி வாழ்வின்பம் பெறுதற்கு நமது முன்னோர் **அகப்பொருள்** வகுத்தனர். **தொல் காப்பியம்,** பொருளதிகாரம், அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல்களில் காதலிலக்கணம் நன்கு விளக்கப்பட்டுள்ளது. அந்த இலக்கணத்திற்குப் பல இலக்கியங்கள் உள்ளன. அவற்றுட் சிறந்தது **திருக்குறள் காமத்துப்பால்.** பொருளதிகாரம் உரை யாசிரியர் **நச்சி னார்க்கினியர்,** சூத்திர விளக்கத்திற்கு, அகநானூறு, கலித் தொகை, குறுந்தொகை, நற்றிணை முதலிய நூல்களுடன், திருக்குறளையும் மிகுதியாக எடுத்தாளுகிறார். காமத்துப் பால், காதற் கலையின் பைஞ்சோலை. கண் கவர்ந்து, கருத் தைப் பிணைத்து, இருவரை ஒருவராக்கி, வாழ்விற் கூட்டி, இயல்பினால் வாழ்வாங்கு இல்லறம் போற்றி, வாழ்வு பல அனுபவங்களால் பழுத்து, உலகியலறிந்து, உயர் பொருளை நாடும் வழியில், காதல் ஒரு இன்றியமையாத துணையும் ஆற் றலுமாகும். தமிழர் சுதந்திரக் காதலர்; எவ்விதமான வற்புறுத்தலும் இன்றி, இயல்பான உணர்வால் மனமொன் றிய காதலர். ஒருவரை யொருவர் நன்கு தேர்ந்தறிந்து, 'இவர்தாம் எமது வாழ்வுத்துணைவர்' என்று தீர்மானிக்கு மட்டும், களவொழுக்கம் பூண்பர். 'களவு' என்றால் திருட் டன்று; விபசாரம் அன்று. உள்ளொன்றிய காதல், இர கசியமாக முதிர்ச்சி பெறுவதற்கு ஒரு வாய்ப்பே களவு.

தோழியும் இந்த இரகசியக் காதலருக்குத் துணைசெய்கிறாள். நாளடைவில், வீடு அறிய திருமணம் நடைபெற, காதலர் இருவரும் இல்லறம் பூண்டு, ஊடிக் கூடி, பிரிவால் வருந்திச் சேர்க்கையால் மகிழ்வர். இங்ஙனம் கற்பியல் நிகழ்கின்றது.

ஒரு அழகிய வாலிபன் நண்பருடன் வேட்டையாடச் செல்லுகிறான். நண்பர் நாலாப்பக்கமும் பிரிந்து போயினர்; இவன் தனியே ஒரு சோலையிற் புகுகின்றான்; அங்கே ஒரு இளங் கன்னிகையைக் காண்கின்றான். அக்கன்னிகை தோழிகளுடன் பூந்தோட்டத்தில் விளையாட வந்தவள்; தோழிமாரைப் பிரிந்து, வழிதப்பித் தனியே நிற்கிறாள் அவளும் முன்னிற்கும் அழகனைக் காண்கிறாள். அவள் கண்ணம்பு அவன் உள்ளத்திற் பாய்ந்து, உயிரை வருத்துகிறது. மன்மத பாணம் தைத்து விட்டது. காதலன் வியக்கிறான்:—“ ஆ, இஃதென்ன ! என்முன் நிற்கும் இந்த அணிமணிப் பாவை, அணங்கோ ? அபூர்வமான மயிலோ? பெண்ணோ? இன்னதென்று சொல்லக் கூடாது என்மனம் திகைக்கிறதே ! ஆ ! அந்தக் கட்டழகி, எனது நோக்கிற்கு எதிர் நோக்கு நோக்கினள்; அழகுத்தெய்வமே ஒரு சேனை கொண்டு என்னை வென்றது போன்றதே! கூற்று என்பதை முன்னே அறிந்திலேன்; இப்போது அறிந்தேன்: அக்கூற்றிற்குப் போர்செய்யும் இரண்டு கண்கள் உள்ளன! பெண்ணணங்கு பேதை; இவள் போர்விழிகள், கண்டவரின் உயிரை உண்கின்றவே! ஆ, என்னைக் காண்பது கூற்றோ! கண்ணோ! அல்லது மானோ! இம்மூன்றும் அந்த மடவரல் நோக்கில் உள்ளவே !

கூற்றமோ ! கண்ணோ ! பிணையோ ! மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து.

புருவ வில் வளைத்துக் கண்ணம்பெய்கிறுள். புருவக் கோடாது பார்வையை மறைத்தால், இவள் விழிகள் நான் நடுங்குந் துன்பத்தைச் செய்யா. மதயானையின் முகபடாம் போலிருக்கிறதே மாதர் இளங்கொங்கைமேற் போர்த்த துகில்! போர்க்களத்தில், பகைவர் நடுநடுங்கும் புயவலியும் மனவலியும் கொண்ட எனது ஆண்மை, இந்த ஒண்ணுதற் பாவைமுன் சிதைந்ததே! பெண்மான் போன்ற மடநோக்கும், நாணமுமே இவளுக்கு இயற்கையான நல்லணிகள். வேறு பொன்னணிகளால் இவளுக்கு ஆவதென்ன?

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட் (கு)
அணியெவனோ ஏதில தந்து?

கள்ளினும், காமமே களியிற் சிறந்தது. காய்ச்சிய கள் உண்டாரை மகிழ்விக்கும். காமக்கள் கண்டாரை மகிழ்விக்கிறதே!"

இருவரும் பேசாமற் பேசுகின்றனர்; இருவர் உள்ளமும் கண் குறிப்பாற் பேசுகிறது: "நான் பார்க்கும்போது, அவள் நாணத்தால் நிலத்தை நோக்குகிறுள்; நான் பார்க்கா திருக்கும்போது, என்னைப் பார்த்து மெல்லப் புன்னகை புரிகிறுள். இக்கள்ளப் பார்வை காமத்திற் பெரிது.

யானோக்குங் காலை நிலனோக்கும்; நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்.

கொஞ்சம் நாணந் தெளிகிறது. காதலி இரண்டு விதமாகக் கண்பார்க்கிறுள். ஒரு பார்வை, ஆசைநோயை வளர்க்கிறது. மற்றொரு பார்வை, அந்த நோய்க்கு மருந்தாகிறது. ஒரு நோக்கு 'ஆசைகொள்' என்கிறது. மறு நோக்கு 'ஆசை கொண்டேன்' என்கிறது. ஒரு நோக்குக் காதலைப் பெருக்குகிறது. மறுநோக்கு அதைத் தீர்க்கிறது.

இவளது மைவிழிகள் காட்டும் இந்த இருநோக்கின் பெருமை யென்னே!

> இருநோக் கிவளுண்க ணுள்ளது ; ஒருநோக்கு
> நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

இதோ கள்ளப்பார்வை பார்க்கிறாள் காதலி ; உடனே குனிகிறாள். அப்பார்வை எங்களிருவர் உள்ளத்தும் வளரும் காதற் செடிக்கு நீர் வார்க்கிறதே! இப்போது அவள் குறிப்பாகப் பார்க்கவில்லை. எனினும் ஒருகண் சிறக்கணித்தாற்போல மெல்லச் சிரிக்கிறாள்; தனக்குள் என்னைப் பார்த்துக் களிக்கிறாள். வெளிக்கு அயலார்போலப் பேசினாலும், உள்ளத்தில் அன்புடையார் சொல்லை எளிதில் உணரலாம். உள்ளே பகைக்காது, வெளியே 'உஹூ, நான் மாட்டேன் போ' என்னும் சிறு கடுஞ்சொல்லும், வெளிக்குப் பகைத்தவர் போலப் பார்வையும், அயலார் போன்று நேசிக்கும் காதலர் குறிப்பாகும். என் விழிகள் அவளைக் கெஞ்சுகின்றன. அதையறிந்து, அக்காரிகை மனமிரங்கிப் பையச் சிரிக்கிறாள். நாணம் வந்துவிடுகிறது. முன்பின் அறியாத அன்னியர்போல நாங்கள் பொதுநோக்கு நோக்குகிறோம். உள்ளே நாங்கள் காதலிக்கிறோம். இப்பொது நோக்குக் காதலர்க்கு இயல்பே."

> ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்,
> காதலார் கண்ணே யுள.

இவ்வளவுதூரம் கண்ணாற்பேசி, இருவர் உள்ளமும் ஒன்றுபட்ட பின், வாயால் காதலைச் சொல்லவேண்டுமா? தேவையில்லை ; கண்ணொத்தால் கருத்தொக்கும்.

> கண்ணோடு கண்ணிணைநோக்கொக்கின், வாய்ச்சொற்கள்
> என்ன பயனு மில.

## 47. அழகே! அமுதே! அணங்கே! இன்பமே!

"பிணிக்கு மருந்து, வேறொரு மூலிகை. இந்தப் பாவை என்னுள் உண்டாக்கிய ஆசை நோய்க்கு அவளே மருந்து. நோய் தந்ததும் அவள்; தீர்ப்பதும் அவள்."

பிணிக்கு மருந்து பிறமன்; அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

அந்த மருந்துண்ட இன்பத்தைக் கொண்டாடுகிறான், கூடிக் களித்த காதலன்: "கண்ணால் இவளழகைக் கண்டேன். காதால் இவளது குயில்மொழியைப் பருகினேன். மலர்மணக்கும் இவளை முகர்ந்தேன். இவளது உதட்டமுதை உண்டேன். இவளது மெல்லுடலில் தோய்ந்தேன். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களாலும் நுகரும் இன்பத்தை, இந்த மெல்லிடையிடம் ஒருங்கே நுகர்ந்தேன்! ஐம்புலனின்பமும் இவளிடமே அனுபவித்தேன்!" என்று மகிழ்கிறான். தோழன் அக்காதலனை நோக்கி, "தோழா, என்ன இப்படி ஒரு பெண்ணிடம் மயங்கி மனமிழந்தாய்! ஐம்புலன்களைக் கடந்த ஆத்ம சுகம் உள்ளதே. அஃது இதயமாகிற வைகுண்டத்தில் உள்ளது; தாமரைக்கண்ணன் உலகாகிய உள்ளத்தில் உள்ளது" என்று இடித்துரைக்கிறான். காதலன் அவனைத் தடுத்துக் கூறுகிறான்: "நண்பனே, அறியாமற் பேசுகிறாய். எனது ஐம்புலன்களும் கூடிப் புல்லி அனுபவித்த இந்தக் காதலியின் மெல்லிய தோட் சுகத்தினும், நீ சொல்லும் தாமரைக்கண்ணனை திருமாலின் வைகுண்ட சுகம் இனிதாகுமோ? இவளிடம் ஒரு தீ யுள்ளது; அதன் அதிசயம் என்னவென்றால், நீங்கினால் சுடும்; நெருங்கினால் தண்ணெனக் குளிரும்! இந்த அதிசயக் கனலை இவள் எங்கிருந்து பெற்றாள்?

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்ரு ளிவள்?

மலர்க்கூந்தல் கொண்ட எனது காதலியின் தோள், நான் எந்த எந்த இன்பப் பொருளை இச்சித்தாலும், அத தன் இன்பத்தைத் தருகிறது. என் மனம் விரும்பும் இன்பமெல்லாம் இவளிடம் நுகர்கிறேன். தீண்டுந்தோறும் வாட்டந் தணிந்து, என்னுயிர் தளிர்க்கிறது; ஆதலால் இவளது தோள் வானோர் உண்ணும் அமுதத்தால் ஆக்கப்பட்டதே! இவ்வாறு வானின்பத்தை இவளிடம் நுகர்கின்றேன். இனி இல்லற இன்பம் வேண்டுமா? அதுவும் இவளிடமேயுள்ளது. தமது வீட்டில் இருந்து, முறையாக இல்லறம் நடத்தி, முயற்சியால் ஈட்டிய பொருளைப் பலருக்கும் பயன் படும்படி, பகுத்துண்ணும் இன்பம் போலுள்ளது இவளது முயக்கம்.

தம்மி லிருந்து, தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு!

காற்றுக்கூட இடைப்புகாதபடி கூடிப் புணரும் இன்பம் இருவருக்கும் இனிது. ஊடல், உணர்தல், புணர்தல், இம்மூன்றும், காமம் கைகூடினவர் பெறும் பயனாகும். அறிவு வளருந்தோறும், முன்னர் இருந்த அறியாமை புலப்படுகிறது. அதுபோல, இச்சேயிழையைப் புணரப் புணர, 'ஆகா! முன்னே இத்தகைய இன்பத்தை அறியாது போனோமே!' என்று புலப்படுகிறது. 'பெண்ணின்பத்தை என்னென் றுரைப்பேன்!' ஆ! அழகிய மேன்மையுள்ள அனிச்சப் பூவே, நீ வாழ்க! மாதர் மென்மைக்கு நீ உதாரணமாயிருக்கிறாய். எனினும், நான் புல்லும் இவள், உன்னினும் மென்மையள்! நெஞ்சே, மலரைக் கண்டு மயங்குவதேன்? இவள் கண், பூப்போல் இருக்கிறதென்றா? அப்

பூக்கள் பலர் காண நிற்கின்றன. இவள், யானே காண நிற்கும் கற்புடைக் காதலி. இவள் கண்ணிற்குப் பூவும் இணையோ? மூங்கிலை யொத்த தோளுடைய இவளுக்கு தளிர் மேனி, முத்தம் முறுவல், நன்மணமே வாடை, வேலே கூர்விழி; 'இந்த மாணிழையாள் கண்ணிற்கு, யான் இணை யாகேன்' என்று, குவளையும் வெட்கிக் கவிழ்ந்து நிலத்தை நோக்கும்.

காணிற் குவளை கவிழ்ந்து நிலநோக்கும்
மாணிழை கண்ணொவ்வே மென்று.

ஆ! காம்பைக் கிள்ளாது, அனிச்சப்பூவைச் சூடியிருக் கிறாளே! அதன் பாரத்தால் இவளது நுண்ணிடை முறி யுமே! அந்த வான்மீன்கள், மதி இன்னது, இம்மடந்தையின் முகம் இன்னது என்றறியாது நிலை கலங்கி யலைகின்ற னவே!

மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

ஏன்? முன்னே தேய்ந்திருந்து, இன்று நிறைந்து விளங்கும் முழுமதிக்குக் களங்கம் உள்ளது. இந்த மாத ராள் முகத்தில் அக்களங்கம் இல்லை. இது களங்கமில்லாத முழுமதி! இந்த அழகியின் முகம்போல மறுவற்றொளிர வல்லையேல், ஏ மதியே, நீயும் என் காதலைப் பெற்று நீடு வாழ்வாய்! இம்மலர்விழிப் பாவையின் முகம்போன்று யெனில், ஏ முழுமதியே, பலர்காணத் தோன்றுதே! ஏனெ னில், என் காதலியின் முகமதியை யானே கண்டு மகிழ் கின்றேன். கற்புள்ள அவள் முகம் பலர்காணக் கிடைக் காதது. இந்த அழகியின் மெல்லடிகளுக்கு, அனிச்சமும், அன்னத் தூவியுங் கூட நெருஞ்சிமுட் போலும்! அவ்வளவு

மெல்லியவை !' என்று தன் காதலியின் நலம்புனைந்துரைக்கிறான் தலைவன்.

## 48. காதலர் கலப்பு கண்ணொடு மணியாம்

இக்காத லின்பம் சாமானியமன்று! இஃது உள்ளார்ந்த உயிர்க்காதல் (Psychic love). "உடம்பிற்கும் உயிருக்கும் எப்படியோ, அப்படியே எனக்கும் இந்த மடந்தைக்கும் நட்பு உள்ளது" என்கின்றான் அக்காதற்றலைவன் :

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

"இந்த இன்சொற் பாவையின் வெண்பல்லில் ஊறிய எச்சில் (இவளது அதரபானம்), பாலொடு தேன் கலந்தாற் போலிருக்கிறதே! என் கண்ணின் கருமணியே, நீ போ. உன்னிடத்தில் என் காதலியை வைக்கவேண்டும். நீ யிருந்தால் அவளுக்கு இடமிராது. காதலீ, நான் கண், நீ என் கண்மணி. உன்னையே என் கண் பார்க்கிறது. உன்னால் என் கண் பார்க்கிறது. ஒள்ளிய போர்விழிகளையுடைய எனது கண்ணுளின் நற்குணங்களை, மறந்தால் நினைப்பேன். ஆனால், அவளை நான் மறப்பதே யில்லையே! அருகே யிருந்தால், அவள் என் உயிருக்கு உடம்பொடு கூடி வாழ்தல் போல்வாள்; என்னைப் பிரிந்தால், உயிருக்கு உடம்பினின்றும் நீங்கிப்போதல் போல்வாள். அவளைக் கூடி யிருக்கும்போதே எனக்கு உயிர்வாழ்வு. அவளைப் பிரிந்தால் சாவுதான்!"

வாழ்த லுயிர்க்கன்னள், ஆயிழை; சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து.

இவ்வாறு, உடலும் உயிரும், கண்ணும் மணியும், வாழ்வும் உயிர்ப்பும் போலச் சேர்ந்து, உள்ளொன்றிய காதல் ஆன்மக் காதலாம். தலைவன் உணர்ச்சி யறிந்தோம்.

காதற்றலைவியின் உணர்ச்சியைக் காண்போம். இருவர் காதற் செய்தியும் மெல்ல ஊரிற் பரவுகிறது. சிலர், "அவன் உன்னைக் கைவிட்டோடிப்போனான்" என்று பயமுறுத்துகின்றனர். ஊரார் பேச்சைத் தோழி வந்து சொல்லுகிறாள். தோழிக்குத் தலைவி, தனது காதலன் அருமையை எடுத்துரைக்கிறாள் ;—"என் காதலர் என் கண்ணை விட்டுப் போகார் ; என் கண்ணிமைத்தாலும் வருந்தார் ; அவ்வளவு நுண்ணியர். அவர் எனது சூக்குமசரீரத்துட் புகுந்து ஆவியிற் கலந்துள்ளார் ; என் கண்ணினுள் எப்போதும் உள்ளார். கண்ணுக்கு மையிடுவதுகூட இல்லை. ஏனெனில், மையிடும் நேரத்திற்குள் அவர் என் கண்ணினின்று மறைந்தால் என்செய்வது? அதனாலேதான் கண்ணெழுதாம லிருக்கிறேன்.

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து.

இமைத்தாற்கூட அவர் மறைந்துவிடுவாரோ என்றஞ்சி இமையாதிருக்கிறேன். இமையாது, உறங்காது அவரைக் காண்கிறேன். இவ்வாறிருக்க, இவ்வூரார், அவர் பிரிவால் நான் உறக்கமற்று வருந்துகிறேன் என்று நினைக்கின்றனர். காதலர் என் நெஞ்சத்தார். நான் நெஞ்சு. அவர் அதில் துடிக்கும் உயிர். நெஞ்சிலிருக்கும் அவருக்குச் சுடுமென்றே நான் சூடானவற்றை உண்ண அஞ்சுகிறேன்.

நெஞ்சத்தார் காத லவராக, வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.

என் உள்ளத்தில் அவர் உகந்து உறைகிறார். 'அவர் உன்னைப் பிரிந்தார்; உன்பால் அன்பில்லார்' என்று ஊரார் சொல்வது என்னே!"

## 49. பற்றிய காமம் பெற்றிடக் கதறும்

இவ்வாறு உள்ளொன்றிய காதலருக்கு உறவினர் சம்மதம் கிடைக்கவில்லை. ஏமாற்றம்! எனில், காதல் அடங்குமா? அது நிறைவேற, முற்காலம் ஒரு முரட்டு வழியிருந்தது. காதலன் **மடலேறுவான்.** அஃதாவது, பனங் கருக்குகளைக் குதிரைபோலக் கட்டி, அதில் அவன் உட்காருவான். கருக்குகள் உடலைக் கீறும், இரத்தம் வரும். காதலன் பொறுத்துக்கொண்டு, தன் காதலை முறையிடுவான். நண்பர், மடலுடன் அவனைத் தூக்கிக்கொண்டு, காமப் பாட்டுக்களைப் பாடிக்கொண்டே ஊர் சுற்றி வருவர். நாம் இங்கே சொன்ன காதலர் இவ்வாறே தமது காதலை ஊரறியச் செய்கின்றனர்:—"காமமுழந்து வருந்தினோர்க்கு மடலே கதி. உயிரும் உடலும் காதலியைப் பிரிந்து வருந்தி, மடலேறத் துணிந்தன. நாணம் நல்லாண்மை என்னும் படகைக் காமவெள்ளம் அடித்துக் கொண்டு போயிற்று. மாலையில் யான் படும் காம வேதனை, மடல்,—இரண்டையும் மாலை புனைந்த அந்த மெல்லிய பைந்தொடி எனக்கீந்தாள். விழிகளோ உறங்கா; ஆதலால், நிசியிலும் மடலேறுகிறேன். கடல்போலக் காம முழந்தும், மடலேறாது பொறுத்திருக்கும் பெண்ணினும் பெரியதொன்றில்லை!"

"காதலியின் ஆசை நிறைகடந்து, கரைகடந்து விம்முகிறது; மறைக்க முடியாது மன்றிற்கு வருகிறது. எனது காமத்தை ஊரார் அறிகிலர். அது தானே தெருவில் வந்து

வெளிப்படுகிறது. என்னைப் பார்த்துச் சிரிக்கின்றனர், அறிவிலார்! நான் படும்பாடு அவர்கள் பட்டாலன்றோ தெரியும்!

> யாங்கண்ணிற் காண நகுப, அறிவில்லார்,
> யாம்பட்ட தாம்படா வாறு.

ஊரெல்லாம் புகார்! ஊரார் பழிச்சொல்லால் எனக்கு நல்ல காரியமாயிற்று. இன்றேல், காமம் தனது இயல்பான தன்மையிழந்து சுருங்கிப்போகும். இப்போது நாங்கள் காதலர் என்று ஊரெங்கும் தெரிந்தது.

> கவ்வையாற் கவ்விது காமம்; அதுவின்றேல்,
> தவ்வென்னுந் தன்மை யிழந்து.

களிக்கக் களிக்கக் கள்வேட்கை மிகும். வெளிப்படக் காமம் இனிக்கும். எனது மலர் விழியாளின் அருமைக்கு நான் மடலில் இறத்தலும் தகும். அதற்குள் ஊர்ச்சத்தம் பரவியது. அதனால், அவளை எளிதிற் பெறுவேன். பெற்றது போலவே மகிழ்ந்தேன்............"

காதலி என்ன சொல்லுகிறாள்? "கணவனைக் கண்டது ஒரே நாள். திங்களைப் பாம்பு கௌவினால் எப்படி உலகெல்லாம் தெரிய இருள் படருமோ, அதுபோல எமது காமக்கொடி நீண்டு படர்கின்றது. இவற்றால் எமது காதல் ஊரெல்லாம் தெரிந்து அலர் பிறந்தது. ஊர்ப்பழி எரு; எனது தாய்மொழி நீர்!

> ஊரவர் கௌவை யெருவாக, அன்னைசொல்
> நீராக நீளுமிந் நோய்.

இந்த ஊர்ப்பழியால் எமது காமத்தை அணைக்க முயலுவது, நெய்யால் நெருப்பணைப்பது போலும். காதலர் தாமே இசைந்து வந்து என்னிச்சையை அளிப்பார்; உடனழைத்

துச் செல்வார். ஊர்ப்பழி நல்லதே. அதை விரும்புகிறேன். எங்கள் காதல் வெளிப்படையாயிற்று!"

இது பழந் தமிழர்தமது காதற் பெருக்கத்தைக் காட்ட வழங்கிய பழக்கம்; சுருங்கக் கூறினோம்.

## 50. பிரிவைப் போலே எரியுஞ் சுடாது

ஊரார் இளகி, உற்றார் இரங்கி, ஒருவிதமாக இருவருக்கும் மணவினை முடிந்தது. இல்லறத்தில் இருவரும் வாழுகின்றனர். சிறிது காலஞ்சென்று, தலைவன் தனது அலுவல் நிமித்தம் வெளியூருக்குச் செல்லவேண்டும். வீரர் போர்முனைக்காகவும், வணிகர் வியாபாரத்திற்காகவுஞ் செல்வர். அப்போது மனைவியிடம் விடைபெற்றுக் கொள்ளுகிறான் மணாளன்: "காதலி, நான் எனது தொழில்முறைக்காகச் சிறிதுகாலம் உன்னைப் பிரிந்து வெளியூரில் தங்க வேண்டும்; அலுவலை முடித்து விரைந்து வருகிறேன். விடை தா" என்கிறான். பிரிவு என்றதைக் கேட்டதும், எரிமெழுகாகத் தவிக்கிறாள் பாவை. 'என்னைப் பிரிந்து செல்லாத செய்தியானால் என்னிடம் சொல்லுங்கள்; சென்று சீக்கிரம் வருகிறேன் என்பதை உம்மைப் பிரிந்து வாழ்வோருக்குச் சொல்லுங்கள்.

> செல்லாமை யுண்டேல் எனக்குரை, மற்றுநின்
> வல்வரவு வாழ்வார்க் குரை.

முன்னே அவர் பார்வையே இன்பமாயிருந்தது. இப்போது என்னைப் பிரியும் அவரது புணர்வுகூடத் துன்பந் தருகிறது. நான் பிரிவாற்றேன் என்றுணர்வார்; அத்தகைய கணவரும் ஒருகால் பிரிய நேருதல் உண்மை. என்னைக் கண்ட ஞான்றே, எனக்கு நம்பிக்கை யளித்து, 'உன்

னைப் பிரியேன், அஞ்சாதே' என்றார்; நம்பினேன். இப்போது அவரே பிரிவாராயின், அவர் வாக்கை நம்பிய என் மேலா குற்றம்? தோழீ! என்னுயிரைக் காப்பாற்றவேண்டுமானால், அவர் பிரிந்து செல்வதை நிறுத்து. அவர் சென்றால், மீண்டும் புணர்தல் அரிது. என்னுயிர் தரிப்பதரிது. தோழீ! பிரிவுரைக்கும் வன்கண்ணரானால், எனது தலைவர், என் னுயிர்தர மீண்டும் வருவார் என்று நான் நம்புதல் அரிது. என் முன்கைவளைகள் நழுவி எனது தலைவன் பிரிவைத் தெரிவிக்கின்றனவே! இனம் இல்லாத ஊரில் வாழ்தல் பெண்டிருக்கு இன்னலைத்தரும். அதைவிட இனிய மணாளர் பிரிவு பெருந் துன்பந்தரும்."

இன்னா தினனில்லூர் வாழ்தல்; அதினினும்
இன்னா தினியார்ப் பிரிவு.

தோழி, "ஊரில் எத்தனையோபேர் கணவன்மார் அலுவலாக வெளியூர்களுக்குச் செல்லும்போது, நல்விடைகொடுத்துப் பிரிவைப் பொறுத்துக்கொண்டுதான் இருக்கின்றனர். நீயும் அப்படி யிரு" என்று தேறுதல் சொல்லுகிறாள். தலைவி: "ஆமாம் தோழீ! பிரிவிற்கு எளிதில் உடன்பட்டு, துன்பநோயின்றிப் பிரிவாற்றிப் பின்பு உயிரோடிருந்து வாழுவார் உலகிற் பலர். நான் அத்தகையள் அல்லேன்; பிரிவைத் தாங்கேன். அது நெருப்பினுங் கொடிது. நெருப்பு தொட்டாற் சுடும். காமநோய் விட்டாற் சுடும்."

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ!

## 51. நலிந்தேன், பிரிவால் மெலிந்தேன், குலைந்தேன்!

தலைவன் விடைபெற்றுச் செல்லுகிறான். பிரிவுத் துயரால் தலைவி நலிந்து வருந்துகிறாள். இவ்வாறு பிரிவுத்

துயரால் வருந்தலுக்குப் '**படர் மெலிந் திரங்கல்**' என்பர். தனிமை பொறுக்காது காதலி தவிக்கிருள்:-"இதோ எனது துன்பநோயை மறைக்கிறேன்; ஆனுல் எப்படி? இறைக்க இறைக்க ஊறும் ஊற்றுநீர் போல, நோய் மிகுந்து வளர்கின்றதே!

> மறைப்பேன்மன், யானிஃதோ நோயை; யிறைப்பவர்க்(கு)
> ஊற்றுநீர் போல மிகும்.

இதைக் கரக்கவும் ஆற்றேன். இந்த நோய் தந்த அவருக்குக்கூட உரைக்க நாணுவேன். என்னுயிர் ஒரு காவடித்தண்டு போன்றது. காமம், நாண் இரண்டும் அதன் இரு முனைகளிலும் தொங்குகின்றன. இடர்ப்படும் இந்த உடலில் இக்காவடி தூங்குகிறது. இதன் சுமை தாங்குகிலேன். ஆ, காமக்கடலுண்டே, அதைக் கடக்கத் தகுந்த தோணியைக் காணிலேன்! ஆ, நட்புக்கொண்ட, அன்புமிக்க எனது கணவரே பிரிவால் இவ்வளவு துயர் தரும்போது, பகைமைகொண்டால் என்ன செய்வாரோ? அவரைப் பகைக்கவும் முடிந்திலேன். காமத்தின் இன்பம் கடலளவிற்று. அது, பிரிவினுல் வருத்தும் துன்பம் கடலினும் பெரிது.

> இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்கால்,
> துன்ப மதனிற் பெரிது.

இந்தக் காமக் கடும்புனலை நீந்திக் கரைகாணேன். இந்த நள்ளிரவிலும் தனி நின்று தவிக்கிறேன். அன்புள்ள இரா, மற்றெல்லா உயிர்களையும் அமைதியாக உறங்கச்செய்தது. யான் ஒருத்தியே அதற்குத் துணையாக விழித்திருக்கிறேன். ஆ, அவருடன் கூடி இன்புற்ற நாட்களில் இந்த இராக் குறுகியிருந்தது; இந்நாள் மிகவும் நெடியதானது.

ஆ! இந்த நீளிரா, பிரிந்து கொடுமை செய்த அக்கொடிய வரினும் கொடியதாயிருக்கிறதே! என்மனம் காதலர் இப்போது இருக்கும் இடத்திற்கே செல்லுகிறது; இக்கண்ணும் அவ்வாறே அவரிடம் செல்லக் கற்ருல் கண்ணீர்வெள்ளத்தில் நீந்தாது. அவரைக் காணமுடியாது கண் கண்ணீர் வெள்ளத்தில் நீந்துகிறது!"

## 52. காதலுங் கண்ணுல், நோதலும் கண்ணுல்!

"தலைவி, செவ்வரி படர்ந்த நின் விழிகள் இவ்வாறு அழுது அழுது அலங்கோலமாயினவே! அழாதே! சற்றுப் பொறுத்திரு" என்கிருள் தோழி. நாதனைக் காணத் துடிக்கும் கண்களின் வருத்தத்தைத் தலைவி ஆற்ருது முறையிட்டுப் புலம்புகிருள். இதனைக் '**கண் விதுப் பழிதல்**' என்பர். விதுப்பாவது ஆசைநோய்; அதன் மிகுதியால் கண்கள் வருந்துதல். "தோழீ, இந்தக் கண்காட்டத்தான் நான் அவரைக் கண்டு காதல் கொண்டேன். இந்தத் தீராத காதல்நோய் வந்தது இக் கண்களால். ஏனிந்தக் கண்கள் இன்று அழுகின்றன? தெரிந்துணராது, முன்பின் யோசிக்காமல், அவரைப் பார்த்துக் கண்கள் காதல் கொண்டன. அன்று காதலரை விரைந்து விரைந்து பார்த்த கண்கள் இன்று அழுது தவிக்கின்றனவே; என்ன வெட்கக் கேடு! சிரிக்கத்தான் வேண்டும், இக்கண்செய்த மாயத்திற்கு!

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.

இக்கண் ஒழிவில்லாத துன்பத்தை என்னுள் நாட்டியது. அழுதழுது இக்கண்ணும் நீருலர்ந்து போயிற்று. நானினிப் பிழையேன். கடலும் சிறிதென்னும்படியாகக்

காமநோய் தந்து, தாமும் உறங்க மாட்டாது துன்புறு கின்றன கண்கள். ஓ! வேண்டும் இந்தக் கண்களுக்கு! இவ் விழிகள் எனக்கேன் இக் காம நோயைத் தந்தன! அதனால் தாமே துயரப்படுகின்றன.

ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்,
தாஅ மிதற்பட் டது.

மனம் பேணாது, என்னைக் காதலித்த அவர் இருக்கி றாரே, அவரைக் காணாது இந்தக் கண்கள் அமைதி யிழந்து, பொறுமையின்றித் தவிக்கின்றன. தோழீ! நான் எப்படித் தூங்குவேனடி? காதலர் வராதபோது, அவரைக் காண ஏக்கம் பிடித்து இக்கண்கள் உறங்கில. அவர் வந் தாலும், அவரழகிலேயே சொக்கிப்போய், 'இவ்வளவு இன்ப மணாளர் பிரிந்து போவாரோ' என்று அஞ்சித் தூஞ் சாது, அவரையே பார்த்துக் கொண்டிருக்கின்றன. இரு விதத்திலும் ஆறுத் துன்புறுகின்றன கண்கள். நீ, ஊரார் அறியாது என் இடரை மறைக்கச் சொல்லுகிறாய்! எப்படி முடியும்? என் கண்களே எனது நோயைப் பறை யறைந்து கூறுகின்றனவே!"

மறைபெறல் ஊரார்க் கரிதன்றால், எம்போல்
அறைபறை கண்ணா ரகத்து.

## 53. பருவர லுற்றுப் பசந்தது மேனி

"தோழீ! என்னை நயந்த மணாளருக்கு நானே பிரி விடை தந்தேன். பிரிவுத் துன்பத்தால் மேனி நிறம் பெயர்ந்தது. எனில், நானே செய்த குற்றத்திற்கு யாரிடம் குறை கூறுவது? இப் பசப்பை யான் பொறுக்கிறேன். அஃது அவர் தந்த குழந்தை. அந்தப் பெருமை பாராட்டி, அது என் மேனிமேல் ஏறி ஊர்ந்து தவழ்கிறது. எனது

அழகையும், நாணத்தையும் அவர் கொண்டு சென்ருர்; அதற்குப் பதிலாக, இந்தக் காமநோயையும் பசலையையுந் தந்தார்.

> சாயலு நாணு மவர்கொண்டார்; கைம்மாரு
> நோயும் பசலையுந் தந்து.

அவரையே நினைக்கிறேன். அவர் வல்லமையே பேசுகிறேன். எனினும், இப்பசப்புப் படர்ந்தது என்ன வஞ்சனை? 'உனது கணவர், பக்கத்து ஊருக்குத்தானே போயிருக்கிருர்; சீக்கிரம் வருவார்; பொறுத்துக்கொள்' என்கிருய். எப்படிப் பொறுப்பேனடீ? ஒரு நாள் எனது காதலர் சற்று அந்தப் பக்கம் பிரிந்து சென்ருர்; உடனே இங்கு என்னைப் பசப்பு கவர்ந்தது. ஒருநாள் அவரைப் புல்லியிருக்கும்போது சற்றுப் புடை பெயர்ந்தேன். உடனே பசப்பு என்னை அள்ளிக்கொள்வதுபோல வந்துவிட்டது.

> புல்லிக் கிடந்தேன்; புடைபெயர்ந்தேன்; அவ்வளவில்,
> அள்ளிக்கொள் வற்றே பசப்பு.

இந்தப் பசப்பின் றுடுக்கை என்னென் றுரைப்பேன்! விளக்கை அப்புறம் கொண்டுபோனல், இப்புறம் உடனே இருள் வந்து கௌவுகிறதல்லவா? அதுபோல, எனது கணவன் அப்புறம் அகன்ருல், உடனே இந்தப் பசப்பு என்னைப் பற்றிக் கொள்ளுகிறது.

> விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
> முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

நயமாகப் பேசி, என்னிடம் பிரிவிடை வாங்கிச் சென்றவர் 'நல்ல நிலையில் இருக்கிருர், என்னை மறவாமல் இருக்கிருர்' என்கிருய்! என்ருல், தோழீ, என்மேனி பசந்தால் பரவாயில்லை. என்னை நயமாக இணங்கச்செய்த எனது

காதலரை, ஊரார் தூற்றுதிருந்தால், அதுவே எனக்கு நல்லது. 'கணவன் பிரிந்தது தாங்காமல், இவள் மேனி பசந்தது' என்று ஊரார் சொன்னால், அது எனக்கொரு நல்ல பேராகும். நான் என் காதலரிடம் கொண்ட அன்பும், பிரிவாற்று நேயமும் இதனால் வெளியாகு மல்லவா?"

## 54. தலைவனைக் கூடாத் தனித்துயர் கொடிது

காதலி தனது தனிமையைப் பொறுக்க முடியாது வருந்துகிறாள். இவ்வாறு மிகுதியாகத் தனிமை வருந்துதல் '**தனிப் படர் மிகுதி**' எனப்படும். "தோழீ, கொட்டையில்லாத கட்டிமாம்பழம் போன்ற காதலின்பம் யாருக்கென்று நினைக்கிறாய்? தாம் விரும்பும் காதலர், தம்மை விரும்பப் பெற்ற மகளிர்க்கன்றோ?

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

காதலித்தவர்க்குக் காதலர் நல்கும் அன்பு, உலகில் வாழும் உயிர்களுக்கு வான்மழை போன்று, இன்பச் செழிப்பைத் தரும். விரும்பிய காதலர் விருப்பையடைந்த பெண்டிரே, 'நாம் வாழுகிறோம்' என்னும் பெருமைக்கு உடையவர். காதலன் விரும்பாவிடின், காதலிக்கு இன்பமில்லை. நாம் காதலித்த கணவர் நம்மை விரும்பாவிடின், வேறென்ன நன்மையைச் செய்யப் போகிறார்?

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ,
தாங்காதல் கொள்ளாக் கடை?

இரண்டு பக்கமும் பாரம் வைத்தால்தான் காவடி தூக்க எளிது. அதுபோல, இருவருக்கும் காதல் இருந்தால்தான் காமம் இனிக்கும். ஒருதலைப் பாரமும், ஒரு

தலைக் காமமும் துன்பச் சுமையாகும். எனது நோவுந் துன்பமும் சற்றும் அறியாது, இக்காமன் என்னையே வருத்துகிறான். தோழீ, அவரிடமிருந்து ஒரு இனிய சொல்லேனும் வாராதா? காதலர் இன்சொற் பெறாது வாழும் பெண்டிர் வன்கண்ணரில் வன்கணார். அவருக்கு அருளில்லையாயினும், ஒரு செய்தியாவது அனுப்பினால் என் காது குளிரும். நெஞ்சே, உன்னோடு மனமுறாதவர்க்கு, நீயுற்ற நோயைச் சொல்லிப் பயனென்ன? அதைவிடக் கடலைத் தூர்க்க முயற்சி செய்! நீ வாழ்வாய்!'

## 55. நினைத்து நினைத்து நீரா யுருகுவார்

இங்கே காதலி புலம்புகிறாள். அங்கே காதலன், மனைவி தனக்குத் தந்த இன்பத்தை நினைக்கிறான்:—"கள் உண்டார்க்கே களிப்பைத் தருகிறது. காமம் நினைத்த பேர்க்கும் பெரு மகிழ் வளிக்கிறது. கள்ளினும் காமம் இனிது.

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

நினைத்ததும், காதலியின் திருவடிவு முன்வந்து நிற்கிறது. எனது துன்பம் இல்லாமற் போகிறது. காமம் எவ்விதத்தும் இனிதே."

காதலன் அங்கு அவ்வாறு நினைப்பதைக் காதலி உணருகிறாள்; தும்மல் வந்து மறைகிறது. "ஆ! என்னைக் காதலர் நினைக்க எண்ணி, நினையாது வேறு வேலையில் தன்னை மறந்தார் போலும். அதனால்தான் தும்மல் வந்து மறைந்தது. அவர் நெஞ்சத்தில் நானும் இருக்கிறேனோ? ஆனால், இதோ எனது நெஞ்சத்தில் அவர் குடிகொண்டுள்ளார்.

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெங்நெஞ்சத் (து),
ஓஓ வுளரே யவர்.

தமது நெஞ்சத்தில் நான் வராது காவல் கொண்ட தலைவர் ஓயாது எனது நெஞ்சிலேயே வந்து நிற்கிறாரே, நாணமில்லையா? தோழீ, அப்படிப்பட்டவரை மறக்கச் சொல்லுகிறாயா? எப்படி மறப்பேன்? என்னோடு அவர் சேர்ந்திருந்த நாளை எண்ணித்தான் உயிர் வைத்துள்ளேன். அவர் நினைப்பைத் தவிர என்னிடம் வேறென்ன உள்ளது? மறக்கவா? மறவாது அவரை நினைக்கும்போதே உள்ளம் ஆசைக்கனல் கொதிக்கிறது; அந்தோ, மறந்தால் என்னாவேன்?

மறப்பி னெவனுவன் மற்கொன்? மறப்பறியேன்!
உள்ளினு முள்ளஞ் சுடும்.

எவ்வளவு தடவை நினைத்தாலும், எனது காதலர் சலித்துச் சினவாது என்முன் நிற்கிறார்; அதுவே அவர் எனக்குச் செய்யும் சிறப்பான இன்பம். 'நான் வேறு, நீ வேறென்றில்லை. இருவரும் ஒருவரே' என்று சொல்வார் எனது மணாளர். இப்போது அன்பில்லாது அவர் ஆங்கிருப்பது நினைத்து என்னுயிர் தவிக்கிறது. இருவருஞ் சேர்ந்தன்றோ ஒருயிர். மதியே! எனது நெஞ்சினின்று பிரியாது, விடைபெற்றுச் சென்றவரைக் கண்ணுற் காணுமட்டும், நீ மறையாது வாழ்க! உன்னால் அவர் நினைப்பு அதிகமாகிறது."

## 56. நனவில் நினைத்தவர் கனவில் வந்தார்

"ஆ! கனவே, உனக்கு யாது கைம்மாறு செய்வேன்? எனது காதலன் தூதைக் கொணர்ந்தாய்! கயல் விழியே, உறங்கு; உன்னைக் கெஞ்சுகிறேன். நீ உறங்கினால் அப்போது எனது மணாளரைக் காண்பேன்.

தோழி, அவரின்றி எப்படி யான் உயிர் வைத்துக் கொண்டிருக்கிறேன் என்ற உண்மையைச் சொல்லுவேன் : நனவில் என்முன் வந்து என் விருப்பத்தை நல்காத காதலரைக் கனவிலாயினும் கண்டுதான் என் உயிர் வைத்திருக்கிறேன். நனவில் எனக்கு அருள் புரியாத கணவரைக் கனவு கொண்டு தருகிறது. கனவினால் காமவின்பம் உண்டாகிறது. நனவில் கணவரைக் கண்டு அனுபவித்த இன்பம் போலக் காதலனைக் கனவிற் கண்டதும் இன்புற்றேன். நனவென்று ஒன்று இல்லாவிட்டால், கனவில் எப்போதும் காதலனுடனே யிருப்பேன்; அவர் என்னை நீங்கார். விழிப்பில் எனக்கு அருள்புரியாத கொடியர் கனவில் வந்து, ஏன் என்னை வருத்துகிறார்? நான் துஞ்சும்போது தோள்மேலும், விழிக்கும்போது உடனே நெஞ்சிலும் இருக்கிறார். அதாவது, நனவில் நினைக்கிறேன். கனவில் அவர் என்னை அணைகிறார்.

> துஞ்சுங்காற் றோண்மேல ராகி, விழிக்குங்கால்,
> நெஞ்சத்த ராவர் விரைந்து.

அவர், நான் விழித்திருக்கையில் வரவில்லை என்று நோவதேன்? கனவில் காணமுடியாதவரன்றோ அவ்வாறு நோவர். நான்தான் அவரைக் கனவில் காண்கிறேனே. கனவில் காணமாட்டாது, இவ்வூரார் காதலன் என்னை நீத்துச் சென்றதாகக் குறை கூறுகின்றனர். கனவில் அவர் என்னுடனேயே இருக்கிறார்."

## 57. மாலைப் போதில் மலரும் காதல்

இரவில் முன் சொன்னவாறு வருந்துகிறாள் காதலி. காலை புலர்கிறது. காதல் அரும்புகிறது. பகலெல்லாம் நாயகன் நினைப்பில் இதழ் அவிழ்கிறது. மாலையில் மலர்ச்சி பெறுகிறது.

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி,
மாலை மலருமிந் நோய்.

மாலைப்பொழுதைக் கண்டு தனித்த காதலி, இரங்குகிறாள் :—"மாலையே, வந்தாயா? வாழ்க! நீ சாந்தமான மாலையா? இல்லை. மணந்த காதலர் உயிரை உண்ணும் கூற்றல்லவா நீ? ஏன் ஒளியிழந்து மருளுகின்றாய்? எனது கேள்வர்போல உனது துணைவரும் வன்கண்ணரோ? தனியே விட்டுப் பிரிந்தாரோ, சொல்லு?

இந்தப் பனியரும்பும் குளிர் மாலை, நான் அவருடன் கூடியிருந்த நாளில் நடுங்கிப் பசந்து வரும். இப்போது வெறுப்பும் துன்பமும் வளர நெருங்கி வருகிறது. என்ன தைரியம்? கொலைக்களத்திற்குக் கொலையாளி போல, இந்த மாலை, என் காதலன் பிரிந்திருக்கும்போது என்னருகே வருகிறது.

காதல ரில்வழி மாலை, கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

காலை, எனது நோயைத் தணிக்கிறது. அதற்கு யான் செய்த நன்றி யென்னே? மாலை, எனது நோயைப் பெருக்குகிறது. அதற்கு யான் செய்த பகை யென்னே? ஆ, எனது மணாளர் என்னையகலாத காலத்தில், இந்த மாலை, இவ்வளவு நோய் செய்யுமென்று அறிந்திலேன்! மாலையின் கொடுமை இப்போதே தெரிகிறது. ஆடுமாடுகளை மேய் புலன்களிலிருந்து வீட்டிற்கு ஓட்டிவரும் ஆயர் குழலூது கின்றனர். முன்னெல்லாம் அக்குழல் இனிதாயிருக்கும். இப்போது, குழலிசை நெருப்பாயிருக்கிறது; மாலைக்குத் தூதாகிறது. இது ஆயர் குழலா? இல்லையே. இது என்னைக் கொல்லும் படைக்கலமல்லவோ?

அழல்போலு மாலைக்குத் தூதாகி, யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

மாலை வந்தது; மதி மருண்டது. இது இன்னும் படர்ந்தால் உயிர் தரியேன். பிறகு, இவ்வூரே எனக்காக வருந்தி மயங்கித் துன்புறும். இன்னும் போகாத என்னு யிரும் இதோ போய்விடும். ஏனெனில் இந்த மருள் மாலை, பொருளில் மயங்கி என்னைப் பிரிந்தவரையே நினைக்கச் செய்கிறது. அவரைப் பிரிந்து ஊசலாடும் என்னுயிர் இம் மாலை தரும் துன்பத்தால் இறக்கும்.'

## 58. கண்ணொளி யிழந்தது! கைவளை சோர்ந்தது!

"தோழீ, வருந்தி வருந்தி என் உறுப்புக்கள் நலனழிந் தன! நமது சிறுமை யொழிந்து, செல்வம் பெருகவே தாம் செல்வதாகச் சொல்லி யகன்றார். அவரை எண்ணி யெண் ணிக் கண்ணீர் விடும் கண்கள் பூத்துப்போயின. நறு மலர்களைக் காணவும் அவை நாணுகின்றன. முன்னே நறுமலர் போலிருந்த கண்கள் நலமழிந்தன! விரும்பிய மணாளர் அருள் செய்யாமையால் பசந்து, பனிவாருங் கண் களே காதலரின் அன்பின்மையைச் சொல்லும். அவரை மணந்தநாள் பூரித்த தோள்களே, இன்று அவர் தணந்ததை (பிரிந்ததை) உலகிற்கு அறிவிப்பனபோல மெலிந்தன. என் கைகள் முன்னே யிருந்த இயலழகை இழந்துவிட்டன; எனது காதலரை நீங்காதணைந்த பெருமை இழந்தன; பருமை யிழந்தன. வளைகள் சோர்ந்தன; எனது துணை வரை நீங்கி நான் வருந்துவதை இவையே சொல்லும். இவ்வாறு பழைய கவின் இழந்து, கைவளை சோர்ந்த தோள் களே, என்னைப் பிரிந்த கொடியார் கொடுமையை உலகிற்கு உரைக்கும். இந்தக் கைகள் நெகிழ்ந்து, வளைகள் கழலு

வதைக் கண்டால், கொடியவர் விட்டுப் பிரிந்தார் என்று உலகம் கொடுமையாக எனது காதலரைப் பேசுமே என்று நோகிறேன்." "வாடிய எனது தோள்களால் விளையும் பூசலை, அவரிடம் போய்ச் சொல்லு, நெஞ்சே, நீ பெருமை பெறுவாய்."

கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

தலைவி இங்கே இவ்வாறு மெலிந்து நலிகின்றாள். இனி நாயகன் அங்கே மனைவியை நினைத்துப் புலம்புகிறான் :— "அவளைத் தழுவி முயங்கினேன்; கைகள் சிறிது தளர்ந்தன; உடனே, பேதை பைந்தொடியின் நுதல் பசந்தது. சிறு காற்றுக் கூட இடைப்புகாது முயங்கினேன். காற்றுப் புகுந்தாலும் தாங்காது அவளது கண்கள் பசந்து பெரு மழை பெய்யும். ஒரு நாள் முயக்கினின்று சிறிது விலகியதும் கண்பசந்தது மட்டுமா? ஒள்ளிய நுதல் நிறம் பெயர்ந்தது. அதுகண்டு துன்புற்றேன். ஆ, பேதை, மெல்லிடை, என்னைப் பிரிந்து மனந்துடித் தழுவாள்!"

## 59. கண்ணொடுஞ் செல்லென் கணவர்பால் நெஞ்சே!

காதலி, தனது நெஞ்சுடன் பேசுகிறாள்—(**நெஞ்சொடு கிளத்தல்**) :—"நெஞ்சே, நன்றாகச் சிந்தித்து, இந்தத் தீராநோய் தீர, ஏதாயினும் ஒரு மருந்து சொல்லாயோ? காதலருக்கு என்மேல் அன்பில்லை. நீ நோவது என்ன பேதமை? நமக்கு இத்துன்பஞ் செய்தவர், நம்மைப் பரிந்து, நினைக்கவில்லை. நாம் இங்குத் தனியேயிருந்து வருந்திப் பயனென்ன? நீ அவரிடம் செல்லும் போது, இக்கண்களையும் உடன்கொண்டு செல். இவை அவரைக் காணவேண்டுமென்று என்னைத் தின்கின்றன!

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே, யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.

நாம் விரும்ப, நம்மை நாடிவராத காதலர், நம்மை வெறுத்தார். இனி அவரோடென்ன உறவு என்று கைவிட முடியுமா? கைவிட்டால் வேறு வழியுண்டோ, நெஞ்சே?

செற்றார் எனக்கை விடலுண்டோ, நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர்?

மனமே, என்னென்னவோ நினைத்துப் புலம்புகிறாய்! அவர் கொடியரென்று பொய்க் கோபங் கொள்ளுகிறாய். உன்னைக் கலந்து இன்பமுணர்த்தும், காதலரைக் கண்டவுடன் பிணங்க நினையாய்; உடனே அவரை ஆவலாக அணைந்து கொள்வாய். ஒன்று காமத்தை விட்டுவிடு; இன்றேல் நாணத்தை ஒழி. எனக்கு இரண்டையும் ஒருங்கே தாங்க முடியவில்லை.

காமம் விடுவொன்றோ ; நாண்விடு ; நன்னெஞ்சே;
யானோ பொறேனிவ் விரண்டு.

என்னைப் பிரிந்தவர் என்மேற் பரிந்து அருள் செய்யவில்லை; அவர் பின்னேயே ஏங்கிச் செல்கின்றாய். அறியாமையையுடைய நெஞ்சே, உனக்குச் சுயமரியாதை தெரியவில்லை. பேதை மனமே, காதலர் உள்ளத்தார்; உன்னிடையே இருக்கிறார். எனில், யாரை நினைத்துப் புறம் போந்து தேடுகிறாய்?

உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு?

நம் இன்னலறியாது, விடுத்துச் சென்ற காதலரை இன்னும் நெஞ்சத்தில் வைத்து நினைத்திருகிறனல், உடலழகுடன் இன்னும் மனத்தழகும் இழப்போம்."

## 60. வரையறு காமம் நிறைக்கத வுடைக்கும்

"பெண்ணுவாருக்கு, நாணும் நிறையும் அருங்கலமாகும். ஆதலால், நீ உனது நோயை வெளிக்காட்டாது பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்கிருள் தோழி. தலைவி, தனது நிலையை விளக்குகிருள் :—"சகீ ! நாணம் என்னும் தாழிட்ட எனது நிறைக் கதவைக் காமம் என்னும் கோடாரி உடைத்தெறிகிறதே! எப்படிப் பொறுப்பேன்?

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

இந்தக் காமம் என்று ஒன்று இருக்கிறதே, ஐயோ அதற்குக் கண்ணில்லை; இரக்கமில்லையடீ! எல்லாரும் அமைதியாக உறங்கும் நள்ளிரவில் கூட எனது நெஞ்சைப்பிடித்தாண்டு, தனது தொழிலைச் செலுத்துகிறது. இதையோ என்ருல் மறைக்க முடியும்? அது என்னை யறியாமல் தும்மல் போலத் தோன்றி விடுகிறதே! அடக்கம், நாணம், நிறை யெல்லாம் உடையேன் என்றுதான் நினைத்திருப்பேன். ஆனால் இந்தக் காமம் மறைப்பைத் தாண்டிக் கொண்டு எல்லாருங் காணும்படி வெளியாகிறதே! நம்மைத்தான் பிரிந்துபோனாரே, அவர் பின்னேயே ஏன் மனம் செல்ல வேண்டும்? நாமும் அவரை மறந்திருப்போம் என்ருல் முடிகிறதா? நன்ருயிருக்கிறது! என்னைப் பிரிந்து சென்றவர் பின்னலேயே 'போ' என்கிறது இந்தத் துயர்! காதலர் வந்து தமது விருப்பத்தைக் காட்டும்போது, அந்தப் பலமாயக் கள்வர் நயமான பேச்சே, நமது பெண்மைக் குணத்தை உடைக்கும் படையாயிருக்கிறதே.

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்ருேநம்
பெண்மை யுடைக்கும் படை.

ஒருநாள் பிணங்கிக் கொள்வோமென்று அப்புறம் சென்றேன். எனது நெஞ்சம் மட்டும் அவருடன் கலந்தது.

> புலப்ப லெனச்சென்றேன், புல்லினேன், நெஞ்சங்
> கலத்த லுறுவது கண்டு.

உடனே நானும் அவரைப் புல்லினேன்! தீயிலிட்ட நிணம் (நெய்) போலே உருகும் நெஞ்சினுர்க்கு, முன்னே பிணங் கிப் பின்னே கூடுவோம் என்னும் உறுதியுண்டோ? அவ ரைக் கண்டாலே மனமிளகி, அன்பு பெருகுமே."

## 6. வரவு கண்டதும் வாரி யணைவேன்!

"இலங்கும் அணிகளைப் பூண்ட தோழீ! அவர்சென்ற நாளிலிருந்து சுவரில் கோடு போட்டு வருகிறேன். அக் கோட்டை எண்ணி எண்ணி விரலுந் தேய்ந்தது. அவர் வரு வார் வருவார் என்று ஆவலாகப் பார்த்த விழிகளும் ஒளி மழுங்கி மங்கின. எனது அழகு குலைந்தது. தோள்வளையுங் கழன்றது! அவரை நான் இன்று மறந்தால்தான் என்ன? தமது உள்ளக்கிளர்ச்சியால், பகைவரை வெல்ல அவர் சென் ருர். 'அவர் வருவார்' என்ற ஆசைவைத்தே நான் இன்னும் உயிரோடிருக்கிறேன். என்னை ஆசையுடன் கூடிப் பிரிந்து சென்ற மணுளர் வரவை உன்னி யுன்னி, என் நெஞ்சம் மேன்மேலும் விம்மிப் பெருத்தெழுகின்றது. எனது மணுளரைக் கண்ணுரக் கண்ட வுடனே மெல்லிய தோளின் பசப்பு நீங்கும். காதலர் வரட்டும்; ஒரே நாளில் இந்தத் துன்பநோய் கெடும்படி இன்பம் பருகுவேன். கண் போன்ற காதலர் வந்தால், 'இத்தனை நாள் ஏன் தாமதம்?' என்று பிணங்குவேனே? அல்லது, 'வந்தீரா' என்று ஆவ லாகப் புல்லிக்கொள்வேனே? அல்லது, கொஞ்சம் புலந்து

பிறகு கலப்பேனே? இவ்வாறு அவரிடம் ஆசை கொண் டேன்” (**அவர் வயின் விதும்பல்**)

> புலப்பேன்கொல் ? புல்லுவேன் கொல்லோ? கலப்பேன்கொல்
> கண்ணன்ன கேளிர் வரின் ?

இனி அங்கே காதலன் காதலியை நினைந்து வருந்து கிறான்:—“எனது அரசன் போர்வினை புரிந்து வெல்க! அன்று மாலையே வீட்டிற்குத் திரும்பி வந்து காதல் விருந் துண்பேன். தொலைவிற் பிரிந்து சென்ற எனது வருநாளை நினைத்து ஏங்குவாள் காதலி. அவளுக்கு ஒருநாள் ஏழு நாளைப்போலக் கழியும். எனது காதலியின் மனம் அந்த ஏக்கத்தால் உடைந்து போகும். பிறகு நான் அங்கு சென்றுதான் என்ன ? அவளைக் காணப் பெற்றால்தான் என்ன ? தழுவிக் கலந்தால்தான் என்ன பயன் ? அவள், பிரிந்த துன்பத்தால் உள்ளுடைந்து இறந்தபின் யாது செய்தும் பயனென்ன ?”

> பெறினென்னும்? பெற்றக்கா லென்னும்? உறினென்னும்,
> உள்ள முடைந்துக்கக் கால் !

## 62. மொக்குள் மணம்போல், முகத்தோர் குறிப்பு

காதலன் வந்தான் ; இருவரும் கூடினர். மீண்டும் பிரிந்து போவாரோ என்று காதலி அஞ்சுகிறாள். அக் குறிப்பை மணாளன் அறிந்துரைக்கிறான்:—“காதலீ, நீ கரந் தாலும், மூடிய கண்களையும் கடந்து, உனது கூர்விழிகள் ஒரு குறிப்புரைக்கின்றன. என்ன சொல் ?”

காதலி பேசவில்லை. காதலன் தோழியிடம் சொல்லு கிறான்:—“நாணத்தால் எனது காதலி பேசவில்லை. கண் நிறைந்த அழகையும், மூங்கில் போன்ற தோளையுமுடைய

எனது பேதைக்குப் பெண்ணியல்பான நாணம் நிறைந்துள்ளது. மணிமாலையில் நூல் தெரிவதுபோல, எனது மடந்தையின் அழகில் ஒரு குறிப்புக் காண்கிறது.

மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

அரும்பில் மணம் கரந்தாற்போல, எனது காதலியின் நகையரும்பில் ஒரு குறிப்புக் கரந்துள்ளது.

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு.

காதலி குறுநகை செய்து சென்றாள்; தனது கருத்தைக் கள்ளமாக மறைத்தாள். அந்தக் கள்ளக் கருத்தில் ஒளிந்த துயருக்கு ஒரு மருந்துண்டு. அதுதான் உடனழைத்துச் செல்லல்."

தலைவன் குறிப்பறிந்தாள் தலைவி; தோழியிடம் தனித்துக் கூறுகிறாள்:—"தோழீ! முன்பிரிவுத் துயரைப் பெரிதும் ஆற்றினார்; அன்புடன் கூடிக் கலந்தார். இவ்வளவு அருமை பாராட்டுவதில், மீண்டும் அன்பின்றிப் பிரிந்து செல்லும் சூட்சியும் உள்ளது. குளிர்ந்த நெய்தல் நிலமுடைய எனது மணாளர், பிரிந்து செல்ல மனத்திற் கருதினார். அதைத் தோளினின்று நழுவிய இவ்வளையலே முன்னே சொல்லியது. எனது காதலர் நேற்றுத்தான் சென்றார். ஆனால், மேனி பசந்து ஏழுநாட்கள் ஆனாற்போலிருக்கிறது. அவர் பிரிவால் அவ்வளவு துன்பப்படுகிறேன்."

நெறுநற்றுச் சென்றாரெங் காதலர்; யாமும்
எழுநாளே மேனி பசந்து.

காதலன் திரும்பி வந்தான். இருவரும் கூடினர். மறுநாள், தோழியும் தலைவனும் பேசிக் கொள்ளுகின்றனர்:

"தலைவ! நின் காதலி பிரிவைத் தாங்காள். மீண்டும் தாங்கள் பிரிந்து செல்லப்போகும் குறிப்பறிந்து, சோரும் வளையலை நோக்குவாள்; மெல்லிய தோளை நோக்குவாள்; அடிகளை நோக்குவாள்; 'நீ சென்று அவர் பிரிவைத் தடு' என்று குறிப் புணர்த்துவாள்". அதற்குத் தலைவன் சொல்லு "ஆமாம், தனது காமநோயை வாயாற் சொல்லாது, கண்ணி ணாற் சொன்னாள்; 'கூட வருகிறேன்' என்று இரந்தாள்; அதையும் கண்ணினால் உணர்த்தினாள். ஆ! அவளிடம் பெண்மைக்குமேல் ஒரு பெண்மை யுள்ளது!"

## 63. ஊடிலேன்; கண்டதுங் கூடினேன் புல்லி

தலைவனும், தலைவியும் குறிப்பறிந்து கூடுகின்றனர்.

"சகி! முன்பு கணவனுடன் ஊடுவேன் என்றாயே! இப்போது வலிந்து அணைந்த தென்னே?" என்கிறாள் தோழி. தலைவி காமத்தின் இயல்பைக் கூறுகிறாள்:-"தோழீ! காதலரை நினைத்ததும் மனக் களிப்படைகிறேன்: கண்டதும் மகிழ்கின்றேன். இக்குணம் கள்ளிற் கில்லை; காமத் திற் குண்டு.

> உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
> கள்ளுக்கில், காமத்திற் குண்டு.

மேலும், எனது காமம் பனைத்துணையிற் பெரிது. அப்போது தினைத்துணையும் ஊடக்கூடாதன்றோ?

> தினைத்துணையும் ஊடாமை வேண்டும், பனைத்துணையுங்
> காம நிறைய வரின்.

என்னைக் கருதாது தன் விருப்பப்படியே எனது கொண் கன் செய்தாலும், அவரைக் கண்கள் காணாதிருக்க முடியவில்லை. தோழீ! முதலில் ஊடத்தான் சென்றேன்;

அதை மறந்து, எனது நெஞ்சு அவரைக் கூடிப் புணரவே தாவிச் சென்றது. மையெழுதும்போது, எழுதுங்கோலை கண் காணுமோ? அதுபோல, எனது மணாளனைக் கண்டால் அவர் செய்த பிழையெல்லாம் மறந்து போகிறேன்; அவரைக் கண்டால் தவறு காணேன். அவரைக் காணாவிட்டால் குற்றந்தவிர வேறு காணேன். வேகமாக இழுத்துக் கொண்டு போகும் என்றறிந்தும், வெள்ளத்தில் யாராவது குதிப்பார்களோ? அவர் அருகிருக்கையில் எனது ஊடல் செல்லுமோ?என் ஊடல் பொய்க்கும். அவரது காதல் வெள்ளம் என்னை ஈர்க்கும். தோழீ, ஊடச்சென்று நெஞ்சம் அவரைக் கூடியது.

ஊடற்கட் சென்றேன்மற் றேழி, யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

"மானங் கெடும்படியான துன்பஞ் செய்தாலும் குடிகாரர் மேன்மேலும் கள்ளை விரும்புவதுபோல, ஏ கள்வ, காதல, நின் மார்பை விரும்புகிறேன்."

மறுபடியும் பிணக்கு நடக்கிறது. காதலன் சொல்லுகிறான்:—"காமம் மலரினும் மெல்லிது. இருந்தும், அதன் செவ்வி யறிந்து வேட்கையும் இடமும் ஒத்தவிடம் அதைப் பிணங்காது அனுபவிப்போர் சிலரே. முன்னொருகால், எனது காதலி கண்ணால் ஊடினாள்; ஆனால், என்னினும் மகிழ்ந்து என்னைப் புல்லினாள்."

## 64, விரும்பா ரிடமே விரைவாய் நெஞ்சே!

தலைவி இங்கு நெஞ்சொடு புலக்கிறாள்:—"நெஞ்சே, அவர் தம்மனத்தை வசப்படுத்தி உறுதியோடிருக்கக் கண்டும், நீ எனக்கு வசமாகாது அவரிடமே செல்கின்றாய்!

அவர் நம்மிடம் அன்புறுதலைக் கண்டும், அவர் நம்மை வெறுக்காத நண்பரென்றெண்ணி அவரிடமே சேர்கிறாய்! நீ என்னிடம் நிலைக்காமல், விரும்பியபடி அவரிடம் செல்லுகிறாய்! என்னை அவரும் கைவிட்டகன்றார்; நீயும் அவரிடமே செல்லுகிறாய்! 'கெட்டார்க்கு நட்டாரில்லை' என்று எனக்கு நீதி சொல்லுகிறாய் போலும். உன்னோடு இனி எதுவுங் கலந்து யோசிக்க மாட்டேன்! கொஞ்சம் அவரோடு பிணங்கென்றால், என் பேச்சை மீறி அவருடனே செல்கின்றாய்! பிணங்கக் கூடச் சம்மதியாய்! அவர் பிரிந்தால், 'அவரைச் சேரப்பெறவில்லையே, ஏன் அவர் இன்னும் வரவில்லை, என்ன நேர்ந்ததோ' என்று அஞ்சிக் கலங்குகிறாய்! அவர் வரப்பெற்றதும், 'இனியும் பிரிவாரோ? என்று அஞ்சுகிறாய்! இவ்வாறு நீ யெனக்கு மாறாத இடும்பை தருகிறாய்!

பெறாஅமை யஞ்சும்; பெறிற்பிரி வஞ்சும்;
அறாஅ இடும்பைத்தென் னெஞ்சு.

தனியேயிருந்து அவரை நினைக்கும் போது, இந்த நெஞ்சு, என்னை ஆசை நோயால் தின்கிறது; அதுதான் இந்த நெஞ்சின் பயன். அவரை மறக்கமாட்டாத இந்த மடநெஞ்சின் வசப்பட்டு நாண மிழந்தேன். இந்த நெஞ்சிற்கு உயிரின்மேல் காதல்; பிரிந்து சென்ற அவரை எள்ளினால் தனக்கே அவமானம் என்றெண்ணி, அவர் பெருமையே அது நினைக்கிறது."

தலைவன் அங்கு நெஞ்சொடு புலக்கிறான்;—" அவள் பிணங்குகிறாள். அன்பில்லாதவள் என்று ஒழிந்திருக்க முடியவில்லை. நெஞ்சம் அவளிடமே செல்லுகிறது. இந்தத் துன்பத்திற்கு மனவுறுதி துணை செய்யாவிட்டால், வேறு யாரே துணையாவார்? தமக்குரிய நெஞ்சமே, தம்பக்க

மிருந்து துணைசெய்யாதபோது, அயலார் தம்மைச் சேர்ந்த நண்பர்போல உதவாமலிருப்பது வியப்பன்றே! 'நெஞ்சே, அவளைப் போல நீயும் பிகுபண்ணிக்கொள்' என்றால் அது கேட்கவில்லை. எனில், அவள் அன்னியர்போலப் பிணங்கிக்கொள்வது எளிதன்றோ?"

தஞ்சந் தமரல்லர் ஏதிலார், தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

## 65. ஊடிய பிறகு கூடுவ தினிது

தோழி சொல்லுகிறாள் :—"சகீ, இன்று அவரைப் புல்லாதே; பிணங்கு. அவர்படும் துன்பநோயைச் சிறிது காண்போம். ஊடுதல் காதலுக்கு உப்புப் போன்றது. சரியான உப்பிருந்தால் சுவைபெறும். ஆனால் உப்பு அதிகமானால் சுவை கெடும். அதுபோல, ஊடலை அளவுக்கு மிஞ்சவிடக்கூடாது." தலைவன் பரத்தையிடம் சென்று வருவதாகக் கருதி, ஊடுகிறாள் தலைவி:—"அங்கே உமது பரத்தையை விட்டு ஏன் வந்தீர்? அவள் புலந்தாளோ? புலந்தவரைப் புலவி தீர்த்துக் கூடவேண்டும். இல்லாவிட்டால், புண்பட்டவரைப் புண்ணுறுத்துவது போலாகும். ஆதலால் ஊடிநிற்கும் உமது பரத்தையைப் பிணக்குத் தீர்த்துக் கூடி மகிழும். இன்றேல், முன்பே வாடிய கொடியை வேரறுத்தது போலாகும். பாவை சோர்ந்து விழுவாள்; செல்லுங்கள்."

தலைவன்:—"நற்குணப் பெருமைவாய்ந்த ஆடவர்க்கும், பூப்போன்ற விழிகளையுடைய தமது மனைவியர் புலவி இனிதாகும். பெரும் பிணக்கும், சிறு பிணக்கும் இடையிடையே வேண்டும். இன்றேல் காமம் தனது இனிய கனி

மையுடைய இளங் காயையும் இழக்கும். பிணக்கில்லாக் காமம் சுவைக்காது.

> துனியும் புலவியு மில்லாயிற் காமங்
> கனியுங் கருக்காயு மற்று.

ஊடலிலும் ஒரு துன்பம் உண்டு—சீக்கிரம் பிணக்கு நீங்கிப் புணர்வோமோ மாட்டோமோ என்பது. நான் நோதலாற் பயனென்ன? எனது நோவை யுணர்ந்து தீர்க்குங் காதலி இங்கில்லை. நிழற் சோலையிலுள்ள நன்னீர் இனிது. நம்மை விரும்பி யணைவோர் இருக்குமிடமே புலவி இனிதாகும். அவள் என்னை விட்டு ஊடி நிற்கிறாள். 'அவள்தான் விரும்பவில்லையே, நீ செல்லாதே' என்றால் நெஞ்சம் கேட்பதில்லை. அவரின்றால் அவளையே கூடச் செல்லுகிறது."

படுக்கையில் ஊடல் நடக்கிறது. கற்பனையாகக் குற்றஞ் சுமத்தி ஊடுகிறாள் தலைவி:—"பெண்களெல்லாம் கண்ணால் உமதழகைப் பருகுகின்றனர். நீர் பொதுவாக எல்லாரும் அனுபவிக்க நிற்கிறீர். உமது எச்சில் மார்பை நான் தழுவமாட்டேன்."

கொஞ்சம் ஊடலும், பிறகு கூடலும் நடக்கிறது. மறுநாள் தலைவி தோழிக்குச் சொல்லுகிறாள்:—"தோழீ! நான் எப்படி ஊடினேன் தெரியுமா? அவர் தும்மினார். அப்போது வழக்கம்போல 'நீடுவாழ்க' என்று சொல்வேனென நினைத்தார். நானும் பேசிவிட்டேன். காதலர் தந்திரக்காரர்!"

தலைவன், காதலியின் பிணக்கைப் பற்றித் தோழியிடம் கூறுகிறான்:-"தோழீ! நான் பூமாலை சூடினால், 'யாரோ ஒருத்திக்கு இப்பூமாலை பூண்டு உமது அலங்காரத்தைக் காட்டவே சூடினீர்' என்று கற்பனை செய்து பிணங்குவாள்.

'யாரினும் உன்னிடம் காதல் மிகுதியுள்ளேன்' என்றேன். 'வேறு யாரைவிட? யாரைவிட? சொல்லும் உமது கள்ளக் காதலி பெயரை' என்று ஊடினாள்.

யாரினுங் காதல மென்றேனா ; ஊடினாள்
'யாரினும் யாரினும்' என்று.

'இப்பிறப்பில் உன்னைப் பிரியேன்' என்றேன். உடனே கண்ணீர் விட்டழுதாள். ஏன்? 'மறுபிறப்பில் என்னைப் பிரிவீராக்கும்' என்று. 'காதலீ, வேறிடத்தில் இருக்கும்போது, உன்னை நான் நினைத்தேன்' என்றேன். 'ஆமாம், நீண்ட மறதிக்குப்பின்னே சற்று நினைத்தீராக்கும். என்னைப் போல இடைவிடாது நீர் நினைப்பதில்லை. உமக்கு நிலையான அன்பில்லை' என்று என்னைப் புல்லாமல் சட்டென்று விலகினாள். நான் தும்மினேன். முதலில், 'நீடு வாழ்க' என்றாள். பிறகு, 'யாரையோ நினைத்துத் தும்மினீர். யார் அந்தக் கள்ளக் காதலி, சொல்லும்?' என்று பிணங்கினாள். வந்த தும்மலை அடக்கிக் கொண்டேன். 'யாரோ ஒரு காதலி உம்மை நினைக்கிறாள். அதை எனக்கு மறைக்கத் தும்மல் அடக்குகிறீர். ஊ, எனக்குத் தெரியாதோ?' என்று பிணங்கினாள். 'பிணங்காதே, உன்மேல் உயிராயிருக்கிறேன்' என்று எனது அன்பை யெல்லாம் உணர்த்தினேன், பணிந்தேன். அப்போதும் என்னை முனிந்தாள். 'வேறு கள்ளக் காதலிகள் பிணக்கைத் தீர்க்கவும் இப்படித்தானே புகழ்ந்து பணிவீர். அந்த வழக்கத்தை என்னிடம் காட்டுகிறீர்' என்று மீறும் ஊடினாள். அவளழகை நினைத்து, அமர்ந்து நோக்குவேன். 'எந்தக் கள்ளக் காதலியின் அழகுடன் என் அங்கங்களை ஒப்பிட்டுப் பார்க்கிறீர்?' என்று காய்வாள்."

நினைத்திருந்து நோக்கினுங் காயும் ; அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

இவ்வாறு ஊடலைத் தலைவனும் தலைவியும் மகிழ்கின்றனர். தலைவி ஊடலின்பத்தைச் சொல்லுகிறாள்:— "தோழீ! 'அவரிடம் தவறில்லை. எனினும் ஊடுவதேன்?' என்றாய். நான் ஊடும்போது, என் பிணக்கைத் தீர்க்க இனிமை சொல்லி எனக்கு ஆறுதல் அளிக்கிறார். அதற்காகத்தான், ஊடலில் தோன்றும் சிறு துன்பத்தால், தலைவர் நல்லன்பு சிறிது வாட்டங் கொண்டாலும், பிறகு மிகப் பெருமை பெறும்.

ஊடலில் தோன்றும் சிறுதுனி, நல்லளி
வாடினும் பாடு பெறும்.

அப்போதுதான் உண்மையான அன்பு வெளிப்படும். ஆனால், நிலமும் நீரும்போல் காதலர் நம்முடன் ஒன்றுபட்டிருக்கவேண்டும். அப்போது ஊடலைவிட ஒரு வானுலகின்பம் உண்டோ? நான் அவரை விடாது புல்லுவதற்கு ஏது புலவி. அப்புலவியின்போது, அவர் இதஞ்சொல்லிப் பணிந்து கெஞ்சுவார், கொஞ்சுவார். இவை எனது உள்ள வுறுதியை உடைக்கும் ஆயுதமாகும். எனது ஊடலும் நீங்கும்."

தலைவன் ஊடலின்பத்தைச் சொல்லுகிறான்:-"தோழீ, என்னிடத்தில் தவறில்லையென்றாலும், குற்றங் கற்பித்துப் பிணங்கி மெல்லிய கைகளை எனது மார்பினின்று நீக்குகிறாள். அதிலும் ஒரு இன்பம் உள்ளது.

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலி னாங்கொன் றுடைத்து.

ஊடல் தீர்ந்தபின் இன்னும் அழுந்தப் புல்லும் இன்பம் அதில் மறைந்துள்ளது. உண்பதைவிட, உண்டது சீரணித்தல் நல்லது. காதல் விருந்தில், புணர்வதைவிட ஊடல் இனிது.

> உணலினும் உண்டதறல் இனிது; காமம்
> புணர்தலின் ஊடல் இனிது.

ஊடலில் தோற்றவரே வென்றவர். அதன் இன்பப்பயன் மீண்டும் கூடலிற் காணப்படும். அப்படிக் கூடலில் உள்ள இன்பம் என்சொல்வேன்! மீண்டும் ஊடி அந்த இன்பம் பெறுகுவேனோ? ஊடலின் பிறகு நெற்றி வியர்க்கக் கூடலில் தோன்றிய இன்பம் மிகவினிது. ஒள்ளிய அணிகளால் விளங்கும் எனது அழகி, ஊடுக, ஊடுக! நானும் ஊடல் தீர்க்க அவளைப் பலவாறு கெஞ்சுகிறேன். இந்த இரவு மட்டும் மிகவும் நீளட்டும். இந்த இரவு காலம் நீண்டால் ஊடலின்பத்தை மிகுதியாக நுகர்வேன். காமத்திற்கு இன்பம் ஊடுதல். அந்த ஊடுதலுக் கின்பம் கூடுதல். அளவறிந்து ஊடலை நீக்கிக் கூடிமுயங்கப் பெற்றால், ஊடலின் பயனாகக் காமானுபவத்திற் பேரின்பம் விளையும்."

> ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம்
> கூடி முயங்கப் பெறின்.

இவ்வாறு காதல் வாழ்வு நிகழ்கின்றது. காணல், வியத்தல், காதலித்தல், குறிப்புணர்தல், புணர்தல், தொழில் நிமித்தம் பிரிதல், பிரிவு தாங்காது வருந்தல், ஊடல் தீர்த்துச் சேர்ந்து இன்புறல் — இவையே காதல் வாழ்வென்னும் பாட்டின் பல ஸ்வரங்கள். இக்காதலை இவ்வளவு அற்புதச் சித்திரமாக இலக்கும் **காமத்துப்பால்**, ஆழ்ந்து பார்த்தால் வேதாந்த சித்தாந்த ரகசியங்களைக் காட்டுகிறது. **திருக்கோவையாரின்** பொருளுணர்ந்த பேருக்கு, இதன்கண் பொதிந்துள்ள பேரின்பம் புலனாகும். **நம்மாழ்வார், மாணிக்கவாசகர், வள்ளலார்** முதலிய மகான்கள் இச் சிற்றின்பத் துறைகளை வைத்துப் பேரின்பப் பொருளை விளக்கினர். ஒவ்வொருவர் உள்ளத்தும் உள்ள

**பரம்பொருளே** காதலன். மனமாயத்தில் மயங்கி நிற்கும் **ஜீவாத்மாவே** காதலி. பரமாத்மாவைக் காதலித்துப் பல வாறு அன்புசெய்து, பிரிவாற்ருது வருந்தி, மீண்டும் பிரியாதிருக்கும்வகை ஊடல்செய்து, முடிவில் தான் வேறு அவன் வேறின்றி, இடையே காற்றுக்கூடப் புகாமல் இரண்டறக் கலத்தலே, இங்குக் காதலின் பயன். இந்த இறை—உயிர்ப்புணர்ச்சியே இன்பம். “**ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ராருயிர் ஈருருக் கொண்டே**” என்ற **திருக்கோவை** வாக்கே இக்காமத்துப்பாலின் விரிவும் சுருக்கமுமாம்.

இவ்வாறு உள்ளும் புறமும், உயிரும் மனமும், உடலும் செயலும் ஒன்றுபட்ட காதலர் கூடி, உலகம் பெருகி நலமடையவும், வாழ்க்கை மேன்மேலும் அழுக்ககன்று தூய்மையும் வாய்மையும் பெற்ருெளிரவும், இல்லறமாகிய நல்லறங் காக்கின்றனர். அதன் பெற்றியைக் காண்பாம்.

# நூல் 8

## இல்லற வொழுக்கம்

### 66. அன்பும் அறமும் அமைந்த தில்லறம்

இல்லறம் எல்லையற்ற அனுபவச் சாலை; பார்த்துப் பார்த்துப் பட்டுப் பட்டுப் பழுதகன்று, பக்குவம் பழுக்கும் பயிற்சிக் கூடம். இயல்பினால் இல்வாழ்வு வாழ்வாங்கு வாழ்ந்து, இவ்வுலக வாழ்விலேயே, தெய்வத்தன்மை பெறுவதே வள்ளுவர் உள்ளம்.

> வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன், வானுறையுந்
> தெய்வத்துள் வைகக்கப் படும்.

வாழ்வாங்கு வாழுவ தெப்படி? அன்பும் அறமுங் கொண்டு, இயல்பினால் இல்லறம் பேணி, நன்றிக்கு வித்தான நல்லொழுக்கம் போற்றி, தீமை யகற்றி, பகை, பாவம், பழி, அச்சம் விலக்கி, மெல்ல மெல்ல அனுபவத் தீயில் அகத்தை யுருக்கி, அறிவெனும் மாற்றேற்றி, உள்ளத் தாற் பொய்யாதொழுகி, ஈட்டிய பொருளைப் பகுத்துண்டு, ஒப்புரவொழுகி, தன்னலந் தவிர்த்து, அன்பை மேன்மேலும் வளர்த்து, யானென தென்னுஞ் செருக்கறுத்து, இறுதியில், உள்ளத்திலும் உலகெங்கிலும் உள்ள இறைவனே முடிவான உண்மை யெனப் பற்றி, அப்பற்றை விடாதிருப்பதே வாழ்வின் வழியும் பயனுமாகும். இயல்பான இல்லறம், இத்தகைய சீவன் முக்திக்கு (உடலோடு பேரின்பம் பெறும் நிலைக்கு) ஒரு சாதனமாகும் என்று விளக்கியதே குறளின் தனிப் பெருமையாம்.

*அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்*

*போஒய்ப் பெறுவ தெவன் ?*

அறவழியில் மனைவாழ்வு வாழும் நல்லோர், இயல்பாகவே மாசகன்று, இன்பத்தூய்மை பெறுவர். அவர்கள் வேறு முக்தி சாதனங்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டியதேயில்லை. இயல்பினால் இல்வாழ்க்கை வாழுவோனே, பொறிபுலனடங்கிய முனிவரினும் பெருந்தவஞ் செய்தவனாகிறான். ஏனெனில், உலகை வெறுத்தோடிய துறவிக்குப் பொறிபுலனடங்கி, அறிவொளி பிறப்பது வியப்பன்று. மனைவி மக்களுடன், உலக வாழ்வில் இருந்தே, நல்லறங் காத்து, தன்னவர்க்கும், மற்றவர்க்கும், இறைவன் மலரடிக்கும் அன்பு பூண்டொழுகும் பண்பே அரிய இயல்புத் தவமாகும். துறவி, தனது மோட்ச இன்பத்திற்கே முயலுகிறான். இல்லறத்தான், தனக்கும் பிறர்க்கும் இனிது செய்கிறான். முற்றத் துறந்த முனிக்கும் பசிப்பிணி யுண்டு; அதைத் தீர்ப்பவன் யார் ? இல்லறத்தானன்றோ ? கல்வி பயிலும் பிரமசாரிக்கு ஆடை உணவு படிப்புச் செலவுக்குத் தருவோன் யார் ? இல்லறத்தானன்றோ ? மனையை விடுத்துத் தருமபத்தினியுடன் தனித்துத் தவவாழ்வு வாழும் வானப்பிரத்தனைப் பாதுகாப்பவனும் இல்லறத்தானே. ஆதலால் பிரமசரியம், வானப்பிரத்தம், சந்நியாசம் ஆகிய மூன்று ஆசிரமிகளுக்கும் நல்ல துணைவன் கிரகஸ்தனே. ஆசையாணவாதிகளை யடக்கி, அருட் கலப்பில் வாழும் முனிவருக்கு அரும்பணி புரிகிறான் இல்லறத்தான். அம்மட்டோ ? ஏழையெளியவருக்குப் பசிதாகம் தீர்ப்பவனும் அவனே. அது தவிர, காலஞ்சென்ற முன்னோர்கள் நினைப்பிற்காகச் செய்யும் கடமைகளும் அவனாலே நிறைவேறுகின்றன. இறந்தவர்களுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களும் அவ

ளூலே நடக்கின்றன. இல்லறத்தானுக்கு ஐந்து கடமைகள் உள்ளன:—(1) தனது முன்னோர்களான பிதிர்க்களுக்குச் செய்யவேண்டிய கடமை; (2) வணக்கம் வழிபாடுகளால் தெய்வத்திற்குச் செலுத்தவேண்டிய கடமை; (3) தன்னை யண்டிய விருந்தாளிகளை முகமலர்ந்து உபசரிக்கும் கடமை; (4) தனது சுற்றத்தாருக்கும், தன்னையொத்த மற்ற உயிர் களுக்கும் செய்யவேண்டிய கடமை; (5) தனது வாழ்வு மாசற்று, ஆத்மசுகம் பெறச் செய்யவேண்டிய அத்யாத்மக் கடமை.

> தென்புலத்தார், தெய்வம், விருந்தொக்க லுனென்றாங்
> கைம்புலத்தா றோம்ப றலை.

இந்த ஐம்புலத்து ஆறு, ஐவகை அறச்செயல்கள், இல்ல றத்தானுக்கு இன்றியமையாதன. இந்த ஐங்கடமைகளுக் கும் தனது வருமானத்தைப் பகுத்துவைத்தே அவன் உண் ணவேண்டும். இதுவே **பாத்தூண்** என்பது. **ருஷியா** (Russia) இரத்த வெள்ளம் பெருக்கியும் இன்னும் அமைதி யாக நுகரமுடியாத பொதுவுடைமையினும் (Communism), இந்தப்பாத்தூண் பன்மடங்கு மேலல்லவா? எவ்விதமான போரும் பொறாமையும் போட்டியும் பிறர் கொடுமையும் இன்றி, மகா மேதாவிகளான நமது ஆன்றோர்கள் சம தருமஸாதனத்திற்கு வழிகாட்டி யுள்ளனர். கடலாவியை மேகம் முகந்து, உலகிற்கே யளிக்கிறது. அதுபோல, இல் லறத்தான் தக்க தொழின் முயற்சியால் ஈட்டியதைக் கொண்டு, தனது குடும்பத்தைத் தாங்குவதன்னியில், ஏழை களுக்குப் பிழைப்பும் உழைப்பும் உண்டுபண்ணி, அவர்களை ஊட்டுகிறான்; கதியற்ற அனாதைகளைக் காக்கிறான்; பற்றற்ற துறவிகளுக்குப் பணி செய்கிறான்; தன்னை யண்டிய சுற்றத் தாருக்குத் துணை செய்கிறான்; பிதிர்க்கடன்களைச் செய்யும்

வாயிலாகப் பலருக்குத் தான் தருமங்கள் வழங்குகிறான்; பிரமசாரிகளுக்குக் கல்வி புகட்டுகிறான்; வித்தியாதானம் செய்கிறான்; ஒரு திருநாளைக் கொண்டாடும்போது, தனது செல்வம் பலருக்கும் பயன்படும்படி செலவு செய்கிறான்; தெய்வாராதனங்களுக்கு வேண்டியதைத் தருகிறான்; தனது சமயம் நிலைநிற்கவேண்டிய பணிகளைச் செய்கிறான். இவ்வாறு, அவனது ஆற்றலும் செல்வமும் தனக்கேயன்றிச் சமுதாயத்திற்கும் நன்கு பயனுகின்றன. இதுவே இயல்பான **ஸமதர்மம்.** இதுவே இரத்தவெறியற்ற அமைதியான பொதுவுடைமை. இதையே வள்ளுவர் வற்புறுத்துகிறார். "எவன் தனக்கே சமைத்துண்கிறானே, அவன் பாவத்தை உண்கிறான்" என்கிறான் **கண்ணன். கீதை காட்டும் பாதை**யில் 'வினை வேள்வி', 'ஞான வேள்வி' என்ற அத்தியாயங்களைப் பார்க்கவும். சுவையுள்ள பொருள்களைத் தானே யுண்ணுது, பகுத்துண்ணவேண்டும் (**'ஏகஸ்வாது நபுஞ்ஜீத'**) என்பது நமது பண்டறத்தின் கொள்கை. வள்ளுவர் இல்லறத்தானுக்கு இரண்டு கட்டளைகள் இடுகிறார்:— (1) பழியஞ்சு; பாவவழியில் செல்லாதே, ஈட்டாதே; (2) பகுத்துண்; உனது உடைமையைப் பலருக்கும் பயனுகும்படி பகுத்து நுகர். இதனால் சந்ததிகளுக்குக் கேடு வராது; குலந் தழைத்தோங்கும்.

> பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின், வாழ்க்கை,
> வழியெஞ்சல் எஞ்ஞான்று மில்.

வழியாவது, சந்ததி; சந்ததி எஞ்சாது, தளராது, இளைக்காது, குறையாது தழைக்கும். இல்வாழ்விற்கு இரண்டு கண்கள்: அன்பு, அறம். சதிபதிகள், மனத்தாங்கலின்றி, உடலும் உயிரும்போல அன்பு பேணவேண்டும்; மக்களை அன்புடன் போற்றவேண்டும்; ஆருயிர்களிடம் அன்புசெலுத்திப் பழி

பாவங்களுக்குப் பயந்து நடக்கவேண்டும்; தனது செயலுக்கேற்றபடி அறஞ் செய்யவேண்டும். இத்தகைய இல்வாழ்க்கை அழகும் பெருமையும் ஆகும். அதனால் தனக்கும், தன்னை யண்டிய பேர்க்கும், தனது நாட்டிற்கும் பெரும் பயனாகும். வீடு வாழ்ந்தால் நாடு வாழும். இல்லறவொழுக்கமே நாட்டின் உயிர்.

அன்பு மறனு முடைத்தாயின் இல்வாழ்க்கை,
பண்பும் பயனு மது.

இவ்வாறு நல்வழி யியலும் மனைவாழ்வு, முனிவர் தவத்தினும் அருந்தவப் பயனாகும். அறம் என்பது சிறப்பாக இல்லறத்தையே குறிக்கும். பிறர் பழிக்க இடமில்லாது, மேற்சொன்னவாறு வாழ்வாங்கு வாழ்ந்தால், எல்லா நன்மையும் இல்லறமே தரும்.

## 67. மனைவியின் கற்பால் மனைமாண் பாகும்

**லெனின்** (Lenin) குருவான **காரல் மார்க்ஸ்** (Karl Marx) நாடுகடத்தப்பட்டு லண்டன் பனியில், கதியின்றி, வறுமையால் வாடினார். அப்போது அவர் மனைவியைப் பார்த்து, “கண்ணே, உன்னை பனியிலும், குளிரிலும், பட்டினியோடு வருந்தச் செய்யும் நான் கொடியனல்லவா?” என்றார். அந்த உத்தமி, “கணவரே தாங்கள் அருகிலிருப்பதே கணப்புத்தீப்போல என் குளிரைப் போக்குகிறது. தங்கள் திருமுகக் காட்சியே நல்விருந்துபோல என் பசியைப் போக்குகிறது” என்றனள். இத்தகைய கற்புள்ள மனைவி வாய்த்தால், இல்லறம் பேரின்ப மயமாகும். வாழ்வுக்கு இன்பம் நல்ல மனைவியே. குணவதி யிருக்கும் வீட்டில் எல்லாம் கூடி வரும்; குறை யிராது. மாண்பற்ற

குணங்கெட்ட மனையாள் இருக்கும் வீட்டில், அமைதி, இன்பம், அழகு, வளமை முதலியன தங்கா.

> இல்லதென் இல்லவள் மாண்பானால் ? உள்ளதென்
> இல்லவள் மாணாக் கடை ?

நல்லாள் வீட்டில் இல்லாத தில்லை. தீயாள் வீட்டில் உள்ள தொன் றில்லை. எவ்வளவு செல்வமும் சிறப்பும் பெற்றா லும், பெண்மைக்குரிய அடக்கம், கற்பு, பணிவு, முதலிய நற்குணங்க ளில்லாத மனைவியைக் கொண்டவனுக்கு ஒரு நாளும் இன்பமிராது. நேர் மாறான குணமுள்ளவள் வீட்டில், நாள் மாறாது போரும் புகைச்சலுந்தான் இருக்கும். தனது நல்ல பெயரைக் காப்பாற்றாது, மாறாக நடக்கும் மனைவியைக் கொண்டோன், தன்னைப் பழிக்கும் பகைவர் முன், ஏறுபோல நிமிர்ந்து நடக்க முடியாது. கணவன் உலகின்முன் தலைகுனியும்படியான பல அவமானங்களை அவள் கொணர்வாள். பொல்லாளை மணந்தவனுக்குப் புகழில்லை. ஆதலால் நடத்தையையும், குணங்களையும் நன்கு ஆராய்ந்தே மனைவி கொள்ள வேண்டும்

நன்மனைவியின் இலக்கண மென்ன ? எல்லா விதத்தும் கணவனை மகிழ்வித்தல், வீட்டைப் பொறுப்புடன் கவனித்தல், அழகு செய்தல், விருந்தினரை உபசரித்தல், பண்டங்களைக் கவனமாக ஆடுதல், குலப்பெருமையைக் காத்தல், அடக்கம், பொறுமை முதலியவை இல்லாளுக்கு வேண்டிய தன்மைகள். இல்லறத்திற்குத் தக்க இத்தகைய மாண்புடன், கணவன் வரவிற் கேற்றபடி, அளவாகச் செலவிட்டுக் குடும்பத்தை மனைவி நடத்த வேண்டும். கற்பும், ஒழுக்கமும் வழுவாமல், தற்காப்புடன் அவள் நடக்கவேண்டும் ; தன்னைக்கொண்ட கணவனை, நல்லுணவு, மற்றச் சௌகரியங்களால் கருத்துடன் பேணவேண்டும். திருமணம் புரியும்

போது, "நான் உன்னைப் பிரியேன்; உன்னை எல்லாவிதத்தும் மகிழ்விப்பேன்; உனது குலப்பெருமையைக் காப்பேன்; கற்பை உயிரெனப் போற்றுவேன்" என்று மந்திரத்தால் வாக்களித்த தகை சான்ற சொல்லைக் காக்கவேண்டும். 'இக் குடும்பம் மாசற்றது; மரியாதைக் குரியது; பெருமை பெற்றது' என்று பிறர் புகழ்ந்து பேசும் சொற்காத்து, இல்லாளுக்குரிய நற்குண நற்செயல்களில் சோர்வில்லாது நடந்து கொள்பவளே பெண்ணாவாள்.

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

பெண்ணிற்கு வேண்டிய எல்லாக் குணங்களும் **கற்பு** என்பதில் அடங்கும். கற்புறுதிமட்டும் இருந்தால் பெண்ணினும் சிறந்த பொருள் உலகில் இல்லை.

பெண்ணிற் பெருந்தக்க யாவுள, கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்?

பெண்களை வீட்டில் அடைத்துச் சிறைக்காவல் காப்பதிற் பயனில்லை. மனதார மனைவி கணவனை உயிர்போலக் காதலிக்கவேண்டும்; தனது கற்பை மனச்சாட்சி மகிழும்படி பாதுகாக்க வேண்டும். சிறை காப்பதினும் நிறை காப்பதே முதன்மை. கற்பு மனத்தில் ஊன்றி உறுதி பெற்ற இல்லாள், பொதுநலப் பணிகளில் ஈடுபட்டாலும் மாசற்றிருப்பாள். உள்ளே கற்பின்றி ஆயிரம் காவல் வைத்தாலும் பயனில்லை.

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு; மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

கற்புள்ள பெண், கணவனைக் கடவுளாகவே மதித்து வணங்குவாள். அத்தகைய கற்பரசி மழை பெய்யென்றால்

பெய்யும். அத்தகைய மாசற்ற கற்பரசிகளே சக்தி நிலயங்க ளாவர். அவர் வாக்குப் பலிக்கும். இவ்வாறு கற்பும் நிறையும் பெற்ற பெண்டிர் மக்கட்பேறு பெற்றால் பெருஞ் சிறப்படைவர். இத்தகைய நிறையுள்ள கற்பரசி கள் வாழும் உலகம், தேவர்கள் வாழுதற்குத் தக்கதாகும்; தெய்வத்தன்மை பெறும். கற்புள்ள அத்தகைய பெண் டிர் தேவலோகத்தில் வாழும் சிறந்த இன்பத்தை இவ்வுல கிலேயே பெறுவர். இவ்வாறு மாண்புபெற்ற மனைவாழ்வு, மாந்தருக்கு மங்கலமாகும். அத்தகைய மங்கல மனைமாட்சி யின் நல்லணி, நன்மக்களைப் பெறும் பேறாகும்.

மங்கல மென்ப மனைமாட்சி ; மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு.

## 68. நல்ல மக்களே இல்லறச் செல்வம்

வீடு விளங்க மக்கட்பேறு வேண்டும்; மலட்டு வீடு மலரா மரமாம். பிள்ளைப் பேறே இல்லறத்தாருக்கு அனைத்தினும் பெருஞ் செல்வம். பொன்னிருந்தாலும், மாடமாளிகைச் செல்வமிருந்தாலும், அரசிருந்தாலும், புக ழிருந்தாலும், பிள்ளையில்லாக் குறை பெருங் குறையாகும். நிறைமுறையாக வாழும் சதிபதிகளுக்கு நன்மக்கள் பிறப் பர். மக்களின்பம், பெற்றோர் அறிவர். அழகான பிஞ்சுக் கைகளால் தமது குழந்தை அளாவும் கூழ் அமுதினும் இனிதாகும். குழந்தைகளின் மெல்லிய பூமேனியைத் தீண் டினால் உடலுக்கு இன்பமாகும். குழந்தைகளை வாரித் தழுவிக் கொஞ்சுவது பெற்றோருக்குப் பேரின்ப மளிக்கும். அவர்களுடைய வஞ்சமற்ற மழலைச் சொற்கள் செவிக்கின் பமாகும்.

மக்கண்மெய் தீண்டல் உடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

தமது மக்கள் மழலைச்சொல், யாழினும், குழலினும் இன்ப மாகும். மழலை கேளார் குழலைப் புகழ்வர் !

குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.

மக்களே பெற்றோருக்கு உண்மையான செல்வம். அம்மக்கள் தமது நல்வினையால் எய்தும் பேர், புகழ், புண்ணியம், சீர், சிறப்பு ஆகிய பொருளின் பெருமை பெற்றோருக்கும் வரும். பண்புள்ள மக்களைப் பெற்றவர் பெரும் புண்ணியம் பெறுவர்; ஏழு பிறப்பிலும் அவர்களைத் தீமையும் பழியும் தீண்டா. ஏனெனில், தாய் தந்தையருக்குப் புகழ்வரும்படி அறிவுள்ள நன்மக்கள் நடந்துகொள்வர். அவ்வாறு மக்கள் இசைபெற்றோருக்கும்படி, தந்தை, மகனுக்கு நல்ல கல்வியறி வளிக்கக் கடவன். அறிஞர் சபையில் முதலிடம் பெறும்படியான தகுதியுள்ள அறிவை மகனுக்குப் புகட்டல் தந்தையின் கடமை.

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

அந்த அறிவைப் பெற்ற பிள்ளை தந்தைக்குப் பெரும் புகழ் வரும்படி உலகிற் சிறந்தோங்கக் கடவன். 'இவன் தந்தை எத்தவப் பயனால் இத்தகைய அரிய மைந்தனைப் பெற்றானோ' என்று உலகம் போற்றும்படி மைந்தன் நடந்து கொள்ள வேண்டும்.

மகன்றந்தைக் காற்று முதவி, யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

எல்லோருக்கும், தம்மைவிடத் தமது மக்கள் அறிவிற் சிறந்திருப்பது மகிழ்ச்சி விளைக்கும். மகனை ஈன்றபோதும் தாய் பெருமகிழ்ச்சி பெறுவாள்; பிறகு தன் மகன் சான்றோன்,

மேதாவி,அறிவாளி,பெரியோரால் மதிக்கத்தக்க பெரியோன் என்று கேட்டதும் இன்னும் பெருங்களிப் புறுவாள்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

## 69. பிறமனை நயத்தல் அறநல மழிக்கும்

கணவன் ஒழுக்கத்தைக் காண்போம். மாதருக்குக் கற்புப் போன்று, ஆண்களுக்கும் பிறர் மனை நயவாமை வேண்டும். அறமும் பொருளும் கண்டறிந்த நல்லோர், இன்னொருவரை மணந்து, அவரது காதலைப் பெற்று இல்லாளாக ஒழுகும் பெண்டிரைக் கனவிலும் விரும்பார். பிறர் மனை விருப்பம் பேதமை யாகும். மற்றோர் மனையை நச்சிநிற்கும் மூடனைப்போல அறங்கெட்ட பாவி இல்லை.

அறன்கடை நின்றாரு ளெல்லாம், பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

கற்பொழுக்கங் கொண்டவர்கள் என்று ஐயமறத் தெளிந்தோர் வீட்டில், தீமை புரிந்தொழுகும் உணர்ச்சிகெட்ட மூடர், செத்தவர்க்கே சமானமாவர். அவர்கள் உயிருக்கே ஆபத்து வரும். கல்வி, கேள்வி, செல்வம், புகழில் எவ்வளவு பெரியவராயிருந்தும் என்ன ? பின்னால் வரும் அவமானத்தைச் சிறிதும் தேர்ந்தறியாது, காமவிகாரத்தால் பிறர் மனையிற் புகுந்தால் அவர் சிறுமையும், வெறுமையும் வெளிப்படும். பெருமையெல்லாம் அத்துடன் சரி.

எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

எளிதிற் கிடைத்ததென்று, பரதார கமனஞ் செய்பவன் எந்நாளும் அழியாப் பழி சுமப்பான். பிறர் மனைவியை எக்காரணத்தாலும் ஒருகாலும் விரும்பக்கூடாது. அப்

படிக்காம மயக்கால் பிறர் பெண்டிரை விரும்பிச் செல்லு வோனை நான்கு தீமைகள் விடாது பற்றும். அவை யாவன: பகை, பாவம், பழி, அச்சம். பிறர்மனை நாடும் போது அச்சம், திகில்; கூடும்போது நடுக்கம்; தெரிந்தால் பழி, பகை; அகப்பட்டுக்கொண்டால் உதை, கொலை, அனைத்தும் நிகழும். மனச்சாட்சியே குற்றவாளியைக் கொல்லும். இதற்குமேல் பாவச் சுமையும் உண்டு. ஏனைய்யா இத்தனை வம்பு? அவரவர்க் குரிய மனைவியுடன் அறவழி வாழ்ந்தால் எவ்வளவு நல்லது? உலகில் எத்தனை கொலைகள், சண்டைகள், இராம—ராவண யுத்தங்கள், பிறர் மனையை விரும்புதலால் உண்டாகின்றன!

> பகைபாவ மச்சம் பழியென நான்கும்
> இகவாவா மில்லிறப்பான் கண்.

பிறனுக்குரிய மனைவியின் பெண்மையை, கற்பை, அழிக்க விரும்பாதவனே அறவியற்படி இல்வாழ்பவனாவன். பிறன் மனையைக் காமக் கண்களாற் பாராது தாயென மதிக்க வேண்டும். அதுவே பேராண்மை; அதுவே சான்றோர்க்கு மேலான தருமம்; அதுவே நிறைவான நல்லொழுக்க மாகும். பிறர்க் குரிய மனைவியர் தோளில் தோயாத தூயரே, இவ்வுலகில் எல்லா நலங்களுக்கும் உரியவர். அறத் தின் எல்லையைத் தாண்டி அல்லது செய்தாலும், பிறன் எல்லையிலிருக்கும் பெண்டிரை நயவாதிருப்பது நன்று. அதாவது, பிறர் மனை நயப்பது அதர்மத்திலும் அதர்மமாம்.

## 70. மனையே விழைவான் வினைவிறு பெருன்

சொந்த மனைவி யிடத்தும் பெருந்தன்மையுடன் நடக்க வேண்டும். எப்போதும் மோகம் பிடித்து, பெண்டாட்டிப் பித்தனாகக் கூடாது. மனைப்பாசம் பிடித்தவன் வாழ்வில்

பெரும் பயனெய்தான். உயர்ந்த வினை வெற்றி வேண்டு வோர் பெண்மோகம் பிடித்திலையார். சிறந்த நல்வினையைச் சாதிப்போர் பிரமசரிய விரதம் பூண்டு, மனைவியைச் சகோதரிபோலக் கருதுவர்.

> மனைவிழைவார் மாண்பய னெய்தார்; வினைவிழைவார்
> வேண்டாப் பொருளு மது.

நிறைமுறை பேணாது, எப்போதும் பெண்ணாசையே பிடித்த செல்வன், ஆண்மையுள்ளவன் கண்டு வெட்கத்தக்க நிலையை யடைவான். ஏனெனில், அவன் தனது செல்வத்தை அற வழியிற் செலவிடாது, பிறர் கண்டு வெட்கத்தக்கபடி இடம் பக் கூத்தாடுவான். அத்தகையோனிடம் செல்வம் இருக்கக்கூட வெட்கப்படும். பெண்ணாசையால், பெண்ணின் ஆசைகளையெல்லாம் நிரப்பப் பணத்தைக் கண்டபடி வாரி யிறைத்து, எத்தனைபேர் கடன்பட்டு வெறுமையாயினர்! தனது ஆண்மையை மோகத்திற்கு அடிமையாக்கி,மன வுறுதி யிழந்து, மனிதனுக்குரிய வீரமின்றி, அகமுடையாளுக்கே யாளாகி, அவள் காலில் விழுந்திருப்போன் நாலு நல்ல மனிதர் முகத்தைப் பார்க்க நாணுவான். மோகங்கொண்டு, ஆண்மை யிழந்து, இப்படிப் பெண்பித்துப் பிடித்தவர் ஒரு வகையர். மற்றொரு வகையர், பெண் சாதிக்குப் பயப்பட்டு, நல்ல காரியங்களைக் கைவிடுவோர். வாசலில் பிச்சைக்காரர் வருவார். அவருக்குப் பிச்சை போட மனமிருக்கும்; அவளுக்கு மனம் வராது. "நன்றா யிருக்கிறது; அகவிலை தெரியாது காரியம் செய்கிறீர்கள்" என்று ஒரு அதட்டுப் போட்டால் ஆள் அரண்டுபோய், பிச்சைக்காரனை விரட்டி விடுவான். ஒரு விருந்தாளி வந்தால், "ஊர்த் தடியன்களுக் கெல்லாம் சமைத்துப்போட நானா ஆள்? உங்களுக்கு வேறு வேலையில்லை; இங்கே சரிப்

படாது, போகச் சொல்லுங்கள் இளப்பிற்கு" என்று ஒரு அடைமழை பொழிந்தால், ஆள் மறுவார்த்தை பேசாமல் இருப்பான்; விருந்தாளி வந்தவழியே போய்விடுவான். இப்படி மனைவிக்கு அஞ்சிப் பொதுநலப் பணிகளைக் கைவிடுவோர் பலர். இப்படிப் பெண்டாட்டிக்கு பயப்படு வோன், மறுமைப் பயனடைய மாட்டான்; இம்மையிலும் அவன் கொண்ட வினையும் திண்மை பெறாது, கைகூடாது. இல்லாளை அஞ்சுவோன் நல்ல பேருக்குத் தன்னாலான நல் லுதவி செய்யவும் அஞ்சுவான்; 'பெண்டாட்டி என்ன சொல்லுவாளோ' என்று நல்ல காரியங்களையும் கைவிடு வான்; நல்லபேருக்கும் உதவான்.

> இல்லாளை யஞ்சுவான், அஞ்சுமற் றெஞ்ஞான்று
> நல்லார்க்கு நல்ல செயல்.

தேவர் போலே சீரோங்கி வாழ்ந்தாலும் சரி, தன் மனைவி யின் வேய்த்தோளை அஞ்சுவோன், ஆண்மை யில்லாதவனு வன். அவனது செல்வச்சிறப்பு பெருமையாகாது. மூன்று வது வகையினர் எப்போதும் பெண்களையே தொடர்ந்து, அவர்கள் ஏவலையே செய்யும் பெண்ணடியார். இத்தகைய அடிமை, நண்பர் குறைகளைத் தீர்த்து உதவமாட்டான்; தான் ஈடேறும் நல்ல காரியங்களையும் செய்யான். மனைவி யின் ஆசைகளையே அவன் நிறைவேற்றுவான். இவ்வாறு பெண்ணேவல் செய்யும் ஆண்பிள்ளையைவிட, நாலுபே ருக்கு முன்வர நாணும் பெண்ணே பெருமை யுடையவள். பெண்டுகள் அடிமை, பெண்ணே ஆவன்.

> பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையி னுணுடைப்
> பெண்ணே பெருமை யுடைத்து.

பெண்ணேவல் செய்து ஆண்மைக்குரிய வீரக் கடமையை மறந்த பேடியிடம், அறவினை யிராது; அவ்வினை முடித்தற்

கேற்ற பொருளும் அவன் கையில் தங்காது. அறம் பொருள்தானில்லை. மற்ற இன்பமாவ திருக்குமா? அது வும் இராது. பெரிய எண்ணங்களையுடைய மனவுறுதி கொண்ட மேலோர், ஒருகாலும் பெண்வலையிற்பட்டு, அவர் சேர்க்கையாற் பேதைபோல நடவார்; ஆண்மையுடன் அறஞ் செய்வர்.

## 71. குலநல முடையார் குன்றுவ செய்யார்

ஆண் பெண் இருவரும் தமது குலநலம் போற்றி யொழுகவேண்டும். நற்குடிப் பிறந்தவர் செம்மையும் நாணுங் கொண்டொழுகுவர். கீழ் மக்களிடம் இவை காணப் படா. நல்ல குடிப் பிறந்தார், வாய்மை தவறார்; ஒழுக் கத்தை உயிர்போலக்காப்பர். பிறர் நாணத்தக்கதைத் தாம் நாணுவர்.

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.

உண்மையான நற்குடிப் பிறந்தாருக்கு நாலு தன்மைகள் முதன்மை: (1) மலரைப் போன்ற நகை, முக மலர்ச்சி, (2) இன்சொல், (3) ஈகை, (4) பிறரை எக்காரணத் தாலும் இகழாமை. இவ்வகையாலே அவரை உயர் குல மென் றறியலாம்.

நகையீகை யின்சொல், இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

அடுக்கி வைத்து, 'கோடிப் பொன் இதோ பெற்றுக்கொள் ளுங்கள்' என்றாலும், உயர்குடிப் பிறந்தோர், தமது குலநல மும் ஒழுக்கமும் குன்றும் காரியத்தைச் செய்யமாட்டார் கள்; பணத்தாசையால் குணத்தை யிழக்க மாட்டார்கள்;

தங்கள் பொருள் சுருங்கினாலும், கொடுக்கும் ஈகைத்தன்மையிற் சுருங்கார்; முடிந்ததைச் செய்வார். மாசற்ற குலவொழுக்கம் பற்றி வாழும் மானிகள், பிறரை வஞ்சியார்; பெருமையற்ற புன்செயல் புரியார். நற்குடிப் பிறந்து ஒழுக்கங்களிற் சிறந்தோர் சிறு குற்றஞ் செய்தாலும், அது மதியில் மறுப்போல அனைவருங் காண உயர்ந்து தோன்றும். குலப்பெருமை காப்போர் சிறு குற்றமுமின்றிக் கவனமாக நடக்கவேண்டும்.

> குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
> மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

நல்ல குலம் என்போனிடம் அன்பற்ற கடுமொழி தோன்றினால் அவனது குலமே சந்தேகத்திற் கிடமாகும். நிலத்தின் இயல்பைப் பயிர்முளை காட்டும். குலத்தின் இயல்பை வாய்ச்சொல் காட்டும்.

> நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
> குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

'கிடந்தமை' யாவது நிலத்திற்கு இருக்கும் இயல்பான தன்மை. 'கால்' என்பது முளை. நலம் வேண்டினால் நாண் வேண்டும். குலம் வேண்டினால், எவரிடமும் பணிவு வேண்டும். அகங்கார நடையும் அவமானச் செயலும் குலத்தைக் கெடுக்கும்.

> நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
> வேண்டுக யார்க்கும் பணிவு.

## 72. விடா முயற்சியால் வீட்டை யுயர்த்து

குடும்பிக்குச் சோம்பல் கூடாது. அறிவு, செல்வம், ஆற்றல் ஈகை, புகழ் அனைத்திலும் தனது குடிநலம் மேன்

மேலும் ஓங்கும் முயற்சியை, அவன் செயயவேண்டும். இவ்வாறு குலப்பெருமை யோங்கும் முயற்சியிற் கைவிளைக்காது கருமஞ் செய்வோன் பெருமையே உயர்ந்த பெருமையாகும்.

கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

ஆள்வினை, அறிவு, இவையிரண்டும் நீண்டோங்கும் முயற்சியால் குலநலமும் நீண்டோங்கும். "என் வீட்டை நன் முயற்சியால் உயர்த்துவேன்" என்ற உறுதியுடன் வேலை செய்வோனுக்குத் துணையாக, தெய்வமே ஆடையை இறுகக் கட்டிக்கொண்டு துணைசெய்ய முன்வரும். திண்மையாக முயல்வோனுக்குத் தெய்வம் முன்வந் துதவும்.

குடிசெய்வ லென்னு மொருவர்க்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

குடிநல முயர்த்தத் தாழா துழைப்பவர்க்கு, பலவாறு ஆலோசிக்காமலே, காரியம் வெற்றியுற முடியும். குற்றமில்லாது, அறவழியில், முடிநல முயர்த்தி வாழுவோனை உலகோர் அனைவரும் உறவெனச் சூழுவர். அதரும வழிகளில் பணஞ்சேர்த்துக் குடும்பத்தைக் காப்பவனை உலகம் மதியாது. தரும வழியில் முயன்று குடிநலம் போற்றும் நல்லோனை அனைவரும் உறவுகொண்டாடி ஆதரிப்பர்.

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

இல்லாண்மையே நல்லாண்மை. தான் பிறந்த வீட்டைத் திறம்பட, திருவோங்க, ஆளுதலே உயர்ந்த ஆண்மையாகும்.

நல்லாண்மை யென்ப தொருவர்க்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.

ஆண்மையுடன் வீட்டை நிர்வகித்து உயர்த்தும் திறமையை இல்லாளன் பெருக்கிக்கொள்ளவேண்டும். போர்க்களத்தில் அஞ்சாத சூரனுக்கே வேலை அதிகம். அவனே போரின் பொறுப்பாளி. அதுபோல, பல உறவினர் இருக்கும் வீட்டில், தாங்கக் கூடிய ஆற்றலுள்ளவன் மீதே குடும்பச் சுமை ஏறும். வேலைக்குச் சோம்பிப் பெருமை பாராட்டித் திரிந்தால் குடிகெடும். ஆதலால் குலமுயர்த்தும் பொறுப்பாளிகள், எல்லாப் பருவத்திலும், ஓய்வொழிச்சலின்றி முயற்சி செய்து மேன்மேலும் வீட்டை முன்னேற்றுவர். பழுது வராமல், குற்றங்களைப் போக்கி, நன்மைகளைச் செய்து குடும்பத்தைக் காப்பாற்றுவோன் பல இடர்களைப் பொறுக்க வேண்டும். ஆ, அத்தகைய பொறுமையான குடும்பியின் உடல் இடும்பைக்கே கொள் கலமல்லவா ?

> இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ, குடும்பத்தைக்
> குற்ற மறைப்பா னுடம்பு ?

முட்டுக்கொடுத்து ஊன்றவைக்கும் அத்தகைய பொறுப்பாளி யில்லாவிட்டால், பல இடுக்கண்களால் வேரழிந்து குடும்பம் வீழ்ந்தழியும். ஆதலால் குடும்பத்தலைவன் தக்க உழைப்பும், விழிப்பும், பொறுப்பும் உடையவனு யிருக்க வேண்டும்.

# நூல் 9

## முயற்சியும், செல்வமும்

---

### 73. அருளை வளர்க்கப் பொருளைச் செய்க

குடும்பத்தைத் தாங்குவதற்குப் பொருட் செழிப்பு வேண்டும். இல்லாதவனை எல்லோரும் 'வெங்கன்' என்று இகழுவர்; பொருளுள்ளவனைப் புகழுவர். உலகவாழ்விற்குப் பொருட் பெருக்கம் இன்றியமையாதது.

*இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்; செல்வரை*
*யெல்லாஞ் செய்வர் சிறப்பு.*

மூளையில் சரக்கிருக்காது; கல்வி கேள்வி, வீர தீர மிராது; இவனொரு பொருளா என்று அலட்சியம் செய்யத்தக்கவனு யிருப்பான் ஒருவன். அவனுக்கு ஒரு வியாபாரத்தில் பொருள் சேர்ந்துவிட்டால், பிறகு பார்க்கலாமே—எத்தனை பேர் அவனை நாடுவர்; இசை பாடுவர்! ஒரு பொருட்டாக மதிக்கத் தகாதவரையும் உலகம் மதிக்கச் செய்வது பொருட் செழிப்பு. பகைவர் செருக்கையறுக்கும் கூரிய வாள் பொருட் செழிப்பினும் வேறில்லை.

*செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்*
*எஃகதனிற் கூரிய தில்.*

செல்வச் செழிப்புள்ளவன் ஒரு காரியத்தை மேற்கொண்டால், அஃது எவ்விதமான தடங்கலும், அச்சமும், ஆபத்தும் இன்றிப் பயனுகும். அவன் தக்கவரை அக்காரியத்

தில் தூண்டிடத் தான் மேற்பார்வை பார்த்துக் கொண்டிருப் பான். கீழே நடக்கும் யானைப்போரை மலைமேலிருந்து பார்ப்பவனுக்கு ஏதேனும் அச்சம் ஆபத்துண்டோ? நல்ல வழியில் ஏராளமான பொருள் சேர்த்தவனுக்கு அறமும் இன்பமும் கைகூடும். ஒருவன், எந்த நல் வழியில் தனக் குத் திறமை யுள்ளதென்றறிக; அத்திறமையால், பிறர்க்குத் தீங்கில்லாமல் பொருளீட்டுக; அந்த நியாயமான பொருள் அறமும் இன்பமும் நல்கும்.

> அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
> தீதின்றி வந்த பொருள்.

பலருக்குப் பயனாகும் ஒரு நல்ல தொழின் முயற்சியால் பொருளீட்டவேண்டும். கொடுங்கோல், கொள்ளை, இலஞ் சம், வஞ்சனைகளால் வந்த பொருள் தக்காது போகும்; பழி பாவமாகும். அருளொடும், அன்பொடும் வராத பொரு ளாக்கத்தைப் பற்றாது நீக்குக. இரத்தமும் பாவமும் தோய்ந்த பணம், அரசையும் குலத்தையும் அழிக்கும். ஒரு அரசன் ஆறிலொரு கடமை வாங்கலாம். அது தவிர, பின்வாரிசில்லாத அநாதைச் சொத்து, சுங்கப் பொருள், அறப்போரில் பகைவரை வென்று வந்த பொருள்— இவற்றை நியாயமாக அடையலாம். இப்பொருளால் மக் களின் வறுமை, மடமைப் பிணிகளை நீக்கப் பாடுபடவேண் டும். பொருள் ஒரு பொய்யா விளக்கு; தான் எண்ணிய தேசத்திற்குச் சென்று அங்குள்ள மக்களின் மடமையிருளை யோட்டவல்லது. பாதிரிமார்கள் பொருட் செழிப்பால், உலகெங்குஞ் சென்று, தங்கள் சமயத்தையும், கல்வி, கலை, தொழில்களையும் பரப்பி வருதல் காண்க. உள்ளன்பினால் எல்லா வுயிர்களிடமும் அருள் உண்டாகிறது. அன்பின் குழந்தை அருள். 'ஐயோ, பாவம்! ஏழைகள் பசிப்பிணி

யால் வருந்துகிறார்கள்' என்று இரக்கப்பட்டால் மட்டும் போதாது. பரிவு கூறினால் பசி தீருமா? பொருட் செழிப்பால் உழைப்பும் பிழைப்பும் உண்டுபண்ணி, அந்தப் பசி தீர்க்கவேண்டும்; கல்வி பரப்பி, மடமையைத் தீர்க்கவேண்டும். அதற்கு வேண்டுவது பொருளன்றோ? ஆதலால் அன்புக் குழந்தையாகிய அருள், பொருட் செல்வமாகிய செவிலியால் வளரும். பொருட்செவிலி அருளை வளர்ப்பாள்.

அருளென்னும் அன்பீன் குழவி, பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

## 74. வாழ்வைக் கெடுப்பது வறுமைப் பாவி

பல துயர்களுக்கும் பாவங்களுக்கும், வறுமை காரணமாகும். வறுமைபோலத் துன்புறுத்தி வாழ்வைச் சிதைப்பது வேறில்லை. வறுமைத் துயருக்கு இணை வறுமைத் துயரே. அது இம்மை மறுமைப் பயன்களைக் கெடுக்கும். இகத்திலும் வறியனுக்கு மகிழ்வில்லை, சுகமில்லை, புகழில்லை. பொருளிலான் தான தருமங்கள் செய்ய முடியாது; தான் பிழைப்பதற்கே பல அகட விகடங்கள் செய்யவேண்டி வரும்; அதனால் மறுமையின்பத்தைத் தேய்க்கும் பாவமும் பெருகும்.

இன்மை யெனவொரு பாவி மறுமையும்
இம்மையு மின்றி வரும்.

தோலையும் அழகையும் கெடுக்கும மேகபபறறு போல, வறுமைப்பற்று, தொல்குடிப் பிறப்பையும் அதற்குரிய கௌரவமான பேச்சையும் கெடுக்கும். கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், கைநொடித்து, வறுமையால் பிறரை இழிவாகக் கெஞ்சி யாசகங்கேட்டுச் சோர்வடைய

வும் நேரிடும். நல்குரவென்னும் ஒரு துன்பத்தால் பற்பல துன்பங்கள் விளையும். துன்பத்திற்குக் கொள்கலம் வறுமை.

நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

ஏழை சொல் அம்பல மேறுது. நல்ல பொருளுணர்ந்து, திறம்பட பேசினுலும், ஏழையின் சொல்லும் பொருளும் பிறர் காதில் ஏருமற் சோர்வு படும்.

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

அதர்ம வழிகளில் உள்ளதைப் போக்கிக் கைநொடித்த வறியனை, பெற்ற தாய்கூட அன்னியன் போலப் பாவிப்பாள். 'ஆ! நேற்று என்னைக் கொன்று கொடுமை செய்த வறுமைப் பிணி, இன்றும் தீராது மீண்டும் வந்து வருத்துமோ? ஐயோ! என்செய்வேன்'' என்று ஏழை பரிதவிக்கிறுன். நெருப்பிலாயினும் படுத்துறங்கலாகும். இந்த வறுமையில் எவ்வகையானும் ஒரு நொடி கூடக் கண் மூட முடியாது.

நெருப்பினுட் டுஞ்சலு மாகு, நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

வாழ்விற்கு வேண்டிய பொருளில்லாத வறியர் (துப்புர வில்லார்) தேகாபிமானத்தை முற்றும் துறந்துவிட வேண்டும். அப்படித் துறவாதவர், பிறரைத் தொந்திரவுசெய்து, அவர்கள் பாடுபட்டுச் சம்பாதித்த உப்பிற்கும் கஞ்சிக்கும் கூற்றுவர்.

துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று.

தொழில் செய்து பிழைக்கவேண்டும். ஏதோ பாடுபட்டுக் கஞ்சிகுடிக்கும் பிறரிடம் பிச்சை கேட்டுத் தொந்திரவு செய்யக் கூடாது.

## 75. ஈபவரிடத்தில் இரப்பவர் வருவர்

ஆனால் இரப்பதற்கும் ஒரு சந்தர்ப்பம் உண்டு. ஒரு வியாபாரத்திற்கு முதல் வேண்டும்; தாய்தகப்பன்மார் இல்லாத ஒரு பிரமசாரி கல்வி கற்க வேண்டும்; நாட்டுப் பொது நலத்திற்கும், பொது நிலயங்களுக்கும் பொருளாதாரம் வேண்டும்; திடீரென்று ஒரு சம்பவத்தால் கைநொடித்தவர்க்கு உதவிவேண்டும்; வெள்ளம், பஞ்சம், போர், பூகம்பம், முதலியவற்றில் அடிபட்டவர்க்கு உதவி வேண்டும்; இவற்றிற்கெல்லாம் தக்காரிடம் பொருள் கேட்கலாம். அப்படிப் பொருள் கேட்பவர் தராவிட்டால் வெகுளக்கூடாது. "நாம் கையிலில்லாது வருந்துகிறது போல, இந்த மனிதனும் வருந்துகிறான்போலும்" என்று உணரவேண்டும். யாரிடம் கேட்கவேண்டும்? செயலிருப்பவர்களைக் கேட்கலாம். தராவிட்டால் அவருக்கே அவமானம் விளையும். துன்பமில்லாது கேட்டபொருள் எளிதாக வருவதானால், யாசகம் கேட்பதும் இன்பமாகும். 'இந்தக் காரியத்திற்கு உதவுதல் நமக்குக் கடமை' என்றுணர்ந்து, நெஞ்சிற் கரவின்றி, தம்மாலானதைத் தரும் புண்ணியவாளரிடம் யாசிப்பதும் ஒரு அழகாகும். கனவிலும் தமக்கியன்றதைக் கரவாமல், 'இல்லை' யென்று சொல்லியறியாத தருமவான்களிடம் கேட்பதும், கொடுப்பது போலாகும்.

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

அப்படிக் கரவாது தரும் தரும்வான்கள் இருப்பதனாலே தான், அவர்முன்னின்று, 'கொடுங்கள்' என்று கேட்பவரும் இருக்கின்றனர். வைத்துக்கொண்டே இல்லையென்று பஞ் சப்பாட்டுப் பாடாது, உள்ளதைக் கொடுக்கும் உத்தம ரைக் கண்டாலே, வறுமைத்துயர் ஒருங்கே கெடும். இக ழாது, எள்ளாது, இரக்கமுடன், தம்மால் இயன்றதைத் தரும் நல்லோரைக் கண்டால், கேட்பவர் மனம் மகிழ்ந்து, உள்ளாரக் களிப்புறும். இரப்பவராலேதான் ஈவார் பெருமை விளங்கும். கேட்பவரில்லாவிட்டால், கர்ணனுக் குப் புகழ் ஏது? வாங்குவோ ரின்றேல் வள்ளலு மில்லை. நல்ல காரியங்களுக்காகப் பொருளுதவி கேட்பவர் இல்லா விட்டால், ஈந்து பெருமை பெறுவோரும்இலர்; அப்போது, இடமகன்ற இவ்வுலகிலுள்ள செல்வரின் வரவு செலவுகள், உயிரற்ற சூத்திரப் பாவை சென்று வந்து கூத்தாடுவது போலும். அஃதாவது, பொருளானது பலருக்கும் பய னுகும் ஜீவகளை யற்று, பெட்டகத்துள் போவதும் வருவது மாக இருக்கும். தான தருமம், பரோபகாரம், பொது நலங்களுக்குச் செலவிடாச் செல்வம் உயிரற்றதாகும்.

இரப்பாரை யில்லாயின், ஈர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று.

## 76. இரந்து பிழைத்தல், இழிவினு மிழிவு

இதே சாக்குவைத்து, இரந்து பிழைப்பதே தொழிலா கக் கூடாது. அதனால் சோம்பலும், மடமையும், தொழி லுறக்கமும், குடும்பத்திலிருப்பவர்களுக்குத் தொந்திரவும் உண்டாகும். இரப்பது இழிவு. மானமுடன் வாழ வேண் டுவோர் இரவை அறவே யொழிக்கவேண்டும். கரவாது மகிழ்வுடன் தரக்கூடிய கண்போன்ற நேயரிடத்திலும், இர வாதிருப்பது கோடிப் பங்குமேல்.

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.

பிழைக்க வழியின்றிக் கொடிய வறுமை வந்தபோதிலும், பிற ரிடம் கைநீட்டாத பெருந்தன்மை, உலகங்கொள்ளாப் பெருமையுடைத்து. இவ்வுலகை இயற்றிய கடவுள், 'மனிதன் பிறரைப் பிச்சை கேட்டும் பிழைத்திருக்க வேண்டும்' என்று விதித்தானாயின், அவன் வேண்டுமென்றாலும் யாசகத்திற்காகப் பரந்தலைந்து கெடட்டும். அதன் கொடுமையும் இழிவும் அப்போது தெரியும். 'பிச்சை யெடுத்து வறுமை தீர்வோம்' என்பது மிகக் கடினம். அதைவிடக் கொடுமை யில்லை. வறுமையை நீக்குவது இரவன்று; நல்ல தொழில் முயற்சியே 'பசுவுக்குத் தண்ணீர் கொடுங்கள்' என்று இரந்தாலும், நாவிற்கு இழிவாகும்.

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்(கு)
இரவின் இளிவந்த தில்.

தண்ணீர் போல நீர்க்கக் காய்ச்சிய கூழாயினும் சரி, ஒருவன், தன் முயற்சியால் பாடுபட்டு வந்ததை உண்பது போன்ற இன்பமில்லை. உழைத்துண்பது கூழாயினும் யினும் மனக் களிப்பளிக்கும். பிச்சையால் வந்தது அமுதாயினும் இழிவாகும். பிச்சைக்காரரிடமெல்லாம் வேண்டுமாயினும் யாசிப்போம். உள்ளதை மறைத்துக் கைவிரிக்கும் கருமியைக் கேட்கவேண்டா. இரவு ஒரு மகிழ்வற்ற துன்பத் தோணி. கரவென்னும் பாறைநிலம் தாக்கினால், அது பிளந்து உடைந்துபோகும்.

இரவென்னும் ஏமாப்பிற் றோணி, கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

ஆ! இரப்பவர் வருந்திக் கெஞ்சிக் கூவிப் படும்பாட்டைப் பார்த்தால் மனமுருகும். இருப்பதை ஒளித்து 'இல்லை,

போடா' என்று கடுமையாகச் சொல்லி, யாசகங் கொடாது கருமிகள் விரட்டுவதைக் கண்டால் மனம் இறந்தேபோகும்.

இரவுள்ள வுள்ள முருகும், கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்.

## 77. பயிரை வளர்ப்பான் உயிரை வளர்ப்பான்

'ஐயோ! வறுமை, உண்ண வழியில்லை' என்று சோம்பித் திகைத்திருப்பவனைக் கண்டு, நிலம் என்கின்ற நங்கை சிரிப்பாளாம். 'ஏன் சோம்பி யழுகுறாய்? எழுந்திரு; ஏர் பிடித்து உழுது பயிர்செய்; பலனைத் தருகிறேன். உண்டு பிழைக்கலாம்' என்கிறாள் நிலமகள். அதையறியாமல் மாந்தர் வறுமையால் ஏங்கித் திரிகின்றனர். அவமானம்!

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்,
நிலமென்னு நல்லா ணகும்.

பயிர்த்தொழில்செய்பவர் இரவார்; இரப்பவர்க்குக் கரவாது ஏதாயினுந் தருவர்; கையால் உழைத்து உண்ணும் வேளாளரின் பெருமை அத்தகையது.

இரவார்; இரப்பார்க்கொன் றீவர்; கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

ஏராளமான பேருக்கு விவசாயம், உழைப்பும் பிழைப்புந் தரும். மனிதனுக்குப் பசி யிருக்குமட்டும் பயிர்த் தொழில் இருக்கும். ஆயிரந்தொழில்களில் எங்கே சுழன்று திரிந்தாலும், முடிவில் வயிற்றிற்குச் சோறு வேண்டும். சோறு தருவது ஏரு. ஆதலால் உலகெல்லாம் முடிவில் ஏரின் பின்னேதான் வரும்; உழவுத் தொழிலே தொழில்களுக் கரசு. உழத் தெரியாத கோடானுகோடிப் பேர்களைத் தாங்குவோர் உழவரே; ஆதலால் அவர் உலகத்தாருக்கு

உறுதிதரும் அச்சாணி போன்றவர். உழுதுண்டு வாழ்வாரே, சுதந்திரமாக வாழுவோர்; பிறர் பலபல சேவகங்கள் செய்து தொழுதுண்போராவர்.

> உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற் றெல்லாந்
> தொழுதுண்டு பின்செல் பவர்.

யாரிடமும் கைகட்டாமல்,வேளாளர் ஏர்கொண்டு வாழுவர். பிறர்க்குச் சேவகஞ் செய்துண்போர் தங்கள் எசமானர் பின்னே கைகட்டிச் செல்லவேண்டியவரே. நெற்கதிர் மிகப் பெருக்கி, அதன் நிழல் மேவிய நிலமுடையார், பலகுடை மன்னரும் தமது பசுவளக்குடைக்கீழ் வரக் காண்பர். எந்த நாடு மிகுதியாகத் தானியங்களையும், உணவுப் பொருள் களையும் உண்டாக்குகிறதோ, அந்த நாட்டைப் பல மன்ன ரும் நாடி வருவர்; எதிர் பார்ப்பர். உழவர் கைமடங்கி ஏர்த் தொழில் நடக்காவிட்டால், 'எல்லா ஆசைகளையும் விட் டோம்' என்னும் முனிவருக்குக் கூட நிலைப்பிராது.

> உழவினார் கைம்மடங்கி னில்லை, விழைவதூஉம்
> விட்டேமென் பார்க்கு நிலை.

இனி, விவசாயத்தொழில் நுட்பங் காண்பாம். ஒரு பலப் புழுதி காற்பல மாகும்படி வற்றக் காயப்போட்டுப் பிறகு பயிர்செய்தால், பிடியெருக்கூட வேண்டாமல், நிலம் நன்றாக விளையும். ஒரு மகசூல் ஆனதும், நன்றாகக் காயப் போட்டு, நிலத்திற்கு ஓய்வு தந்து பிறகே உழவேண்டும். உழுதலைவிட, எருப்போடுதல் மிகவும் நல்லது. உழுது எருவிட்டபின், நாற்று நட்டுக் களைப்பிடுங்கி, நீர் பாய்ச்ச வேண்டும். நீர் பாய்ச்சுவதைவிட, ஆடுமாடு, பறவைகள், பூச்சிகள் வந்து அழிக்காது, பயிரைக் காத்தல் முதன்மை யானது.

ஏரினு நன்ரு லெருவிடுதல் ; கட்டபின்
நீரினு நன்றதன் காப்பு.

வயலைக் கருத்துடன் காக்காமல் நிலத்திற்குரியவன் ஆட்களையேவி, வீட்டில் உட்கார்ந்திருந்தால், அந்த நிலநங்கை கணவன் அவமதித்த இல்லாளைப்போல, வெறுப்புக் கொண்டு ஊடுவாள் ; சரியான பலனளிக்கமாட்டாள்.

செல்லான், கிழவ னிருப்பி னிலம்புலந்(து)
இல்லாளி னூடி விடும்.

தலைமகன் தலைமகளைப் பரிவுடன் உடனிருந்து பேணுவது போலவே,நிலமகன் பயிர்தரும் நிலமகளைப் பேணவேண்டும். நமது அன்பைப் பயிர்கள் நன்கறியும். இதைப்போலவே வாழ்விற்கு இன்றியமையாத நூற்றல், நெசவு, முதலிய பலவேறு தொழில்களையும் கருத்துடன் போற்றவேண்டும்.

## 78. சோம்பித் துயில்வோன் ஏங்கித் தவிப்பான்

சோம்பல் கூடாது. மேன்மேலும் குன்ருது வளரும் குலவிளக்கு, 'சோம்பல்' என்கிற மாசுபடிந்தால் மங்கி யணையும். நன்ருக்க் குடித்தனம் செய்யவேண்டுவோர், சோம்பலை அறவே யொழிக்கவேண்டும். மடியால் குடி மடியும். 'மடி' யென்ருல் சோம்பல். குலத்தை மடிக்கும் மடிகொண்ட பேதை, தான் மடியுமுன்பே தன் குல மழியக் காண்பான். சோம்பல் மடியவேண்டும். மாண்புள்ள வினைகளை முயலவேண்டும் ; இன்றேல், குடும்பம் கெட்டுக் குற்றமும் பெருகும். தாமதம் (நெடுநீர்), மறதி, சோம்பல், உறக்கம் இந்த நான்கும், கெட்டழியுந் தன்மை யுள்ளவர்கள் விரும்பிச் செல்லும் காமப் படகாம்.

நெடுநீர், மறவி, மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

மாநிலமாளும் வேந்தர் நட்புக் கிடைத்து, எல்லாச் செல்வமும் பெற்றவராயினும் சரி, சோம்பேறிகள், வாழ்வில் பெரும்பயன் பெறமாட்டார்கள்.

> படியுடையார் பற்றமைந்தக் கண்ணு (ம்), மடியுடையார்
> மாண்பய னெய்த லரிது.

பெருமையான காரிய முயற்சியின்றி, சும்மா தின்றுறங்கிச் சோம்பித்திரிவோர், பலர் வாயால் இடித்து, எள்ளப்படுவர். சொந்த மனைவிமக்களே சோம்பேறியை இடித்து ஏளனம் செய்வர். பெருகும் ஒரு குடியில் சோம்பல் புகுந்தால், அஃது அந்தக் குடியைச் சீக்கிரம் பகைவருக்கு அடிமை யாக்கிவிடும். அடிமைத் தனத்திற்கு அடிப்படை முயற்சியில்லாது சோம்பித்திரிதலேயாம். மடியை யொழித்தால், குடியிற் புகுந்த குற்றங்களெல்லாம் நீங்கும். சோம்பலில்லாது பல நன் முயற்சிகளிலும், சீர்திருத்தங்களிலும் எப்போதும் ஈடுபட்டுள்ள அரசன், மேன்மேலும் சிரோங்கி, திருமால் ஈரடியால் அளந்த மூவுலகையும் ஆளுவான்.

## 79. ஆழ முயன்றால் ஆகாத தில்லை

'இது நம்மால் ஆகிற காரியமா? நாம் இதை முடித்தல் அருமை' என்று தளரக்கூடாது; தைரியமாகச் செயலில் இறங்கவேண்டும். முயற்சியால் அக்காரியத்தைச் சாதிக்கவேண்டிய திறமை வரும். கொண்டவினையைக் குறைபட விடக்கூடாது. முற்றும் நன்கு முடிக்கவேண்டும். ஒரு காரியத்தை அரைகுறையாக விட்டவரை உலகம் மதிக்காது, அலட்சியம் பண்ணிவிடும். அயராது **தாளாண்மை** (முயற்சி) யுள்ளவனே உலகிற்கு **வேளாண்மை** (பொதுநலப்பணி) புரியும் பெருமை பெறுவான். பொது.

நலம் புரியும் ஆண்மை, பெருமை, செருக்கு, தளராது முயற்சி செய்யும் சிறந்த தன்மையில் அடங்கும்.

> தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
> வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

தீவிரமான முயற்சியில்லாதவன் கையில் பொதுநலப்பணியைத் தருவது, பேடி கையில் வீசத்தந்த வாளைப்போலப் பயனற்றதாகும். தைரியமில்லாத பேடிகையில் வீரன் பிடிக்கும் வாளைத் தந்தால் போர் வெல்லுமா? துணிந்து முன்வந்து முயலாதவன் பொறுப்பில் ஒரு பெரிய காரியத்தைவிட்டால், ஆபத்துக் காலத்தில 'அப்பாடா' என்று பயந்து காரியத்தைக் கைவிட்டுப் போவான்; காரியம் கெட்டுப்போகும்.

> தாளாண்மை யில்லாதான் வேளாண்மை, பேடிகை
> வாளாண்மை போலக் கெடும்.

'நமக்கு இன்பம் வேண்டா; நல்ல பொதுநலக் காரியம் இருந்தால் போதும்; பலருக்குப் பயனுகும் தொண்டு செய்தால் அதுவே இன்பம்' என்னுந் தீரன், தனது நண்பர் துன்பத்தைத் துடைத்து, இன்பத்தை நிலைநாட்டும் தூண் போன்றவன். தன்னலம் பேணுது பொதுநலம் புரிந்தே மகிழ்வோன், தனது சமுதாயத்தின் இடர்களைத் தீர்த்து நன்மையைத் தாங்குவான்.

> இன்பம் விழையான், வினைவிழைவான் றன்கேளிர்
> துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

முயற்சி எல்லாச் செல்வத்தையும் மேன்மேலும் ஆக்கும். முயற்சியில்லாச் சோம்பல், ஒருவனை வறுமையென்னும் துன்பக்குழியில் புகுத்திவிடும்.

> முயற்சி திருவினை யாக்கு ; முயற்றின்மை
> யின்மை புகுத்தி விடும்.

சோம்பலே மூதேவிக்கு இருப்பிடம். சுறுசுறுப்பான கர்மவீரனது முயற்சியில் திருமகள் விளங்குவாள். நிதி யில்லாதிருப்பது யாருக்கும் பழிப்பன்று. அறியவேண்டிய வைகளை அறிந்து, அவைபால் ஆழ்ந்து முயன்று பயன் பெறுமையே குற்றமாகும். வேண்டுமென்றே வேலைக்குச் சோம்புவோன், பலர் பழிப்பிற் குள்ளாவான். 'இந்தக் காரியம் உனக்கு ஆகாது, கைகூடாது' என்று தெய்வமே விதித்தாலும் சரி, முயற்சியாளன் தனது மெய் வருந்தப் பாடுபட்டால் உழைப்பிற்கேற்ற கூலி, தானே கிடைக்கும். இடைவிடாத முயற்சிக்கு அவ்வளவு திறமையுண்டு.

> தெய்வத்தான் ஆகா தெனினு, முயற்சிதன்
> மெய்வருத்தக் கூலி தரும்.

விதியை வெல்ல யாராலும் முடியாது. தளராது உழைப் பவர் அந்த விதியையும் புறங்காண்பர். **மார்க்கண்டன்** தனது அருந்தவத்தால் விதியை வென்றான். **சாவித்திரி** தனது விடாமுயற்சியால் தொடர்ந்து நமன் கையினின்றும் கணவன் உயிரை மீட்டாள். **ஜாந்தார்க்** (Jeanne d' Arc) தனது வீராவேச முயற்சியால், அன்னியர் வசப்பட்ட தாய் நாட்டை மீட்டாள். முயற்சியாளருக்கு முடியாததில்லை.

> ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
> தாழா துஞற்று பவர்.

## 80. உள்ள மிருந்தால் உன்னிய தாகும்

குடும்ப வாழ்விலும், பொது வாழ்விலும் இன்ப துன் பங்கள், லாப நஷ்டங்கள் வரும். அவற்றால் மனம் மாறு படாமல் மேன்மேலும் ஊக்கமுடன் முயலவேண்டும். ஊக்கமே ஆக்கம். ஊக்கமுடைமையே உடைமை. ஊக்க மில்லாதவர் மற்றெந்தச் செல்வமுடையரேனும் தமது ஊக்

கக் குறைவால் அதை யிழப்பர். ஊக்கமில்லார் உடைமை உடமையாகாது. உள்ளத்தில் ஊக்கமும், வீறும், முயற்சி யும் வேண்டும். அஃதே உண்மைப்பொருள். வேறு மண் ணினப் பொருள், ஒருநாள் நில்லாது நீங்கிப்போகும். உள் ளச் செல்வமே உள்ள செல்வம். வெள்ளிச் செல்வம் விரைவில் அகலும்.

உள்ள முடைமை யுடைமை; பொருளுடைமை,
நில்லாது நீங்கி விடும்.

அப்படிக் கைப்பொருளை இழந்தாலும் ஊக்கமுடை யவர் மனமுடையார்; 'இது போனால் இன்னும் ஈட்டிக் கொள்வோம், வலுவிருக்கிறது' என்று தைரியங்கொள்வர். அத்தகைய அசைவில்லாத ஊக்கமுடையவரிடம் ஆக்கம் (செல்வம்) வழிதேடி வந்து சேரும். நாம் பாய்ச்சும் நீருக் குத் தக்கபடி செடிகளில் மலர் குலுங்கும். அது போலவே உள்ளத் திண்மைக்கும், உண்மைக்கும், ஊக்கத் திற்குந் தக்கபடியே வாழ்வில் மாந்தருக்கு உயர்வு கிடைக் கிறது. ஒரு எளிய ராணுவச் சேவகனாயிருந்த **நெப்போலியன்** எப்படிப் பிரஞ்சுதேசத்திற்கே அரசனானான்? அநாதியாக, சோற்றிற்குக்கூடக் கூலிவேலை செய்த **முசோலினி** எப்படி இத்தாலிக்கே சர்வாதிகாரியானான்? நாடோடியாகத் திரிந்த **மாக்ஸிம் கோர்க்கி** (Maxim Gorky) எப்படி உலகெலாம் புகழும் நாவலனாகி, **லெனினுக்குக்** கண்போலிருந்தான்? உயிருக்கே ஆபத்துடன் நாடுதோறும் திரிந்து பலவாறு வருந்திய **லெனின்**, எவ்வாறு **ருஷ்யாவின்** ரக்ஷகனானான்? எளிய **சிவாஜி** எப்படிச் **சத்திரபதி**யானான்? எல்லாம் உள் ளத்தால், திண்மையால், முயற்சியால், தைரியத்தால் அன்றோ? நீருக்குத்தக்க மலர் நீட்டம்; வீறுக்குத்தக்க வினை நீட்டமாம்.

வெள்ளத் தனைய மலர்நீட்ட(ம்); மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

உயர்ந்த எண்ணங்களைக் கொள்ளுக, முயல்க. அவை வசத்தால் கைகூடாமற் போனாலும், தவறாது வெற்றிபெற்ற தற்குச் சமானமேயாகும். ஏனெனில், உயர்ந்த எண்ணங்கள் தன்காலத்தில் இல்லாவிடினும், பிற்காலத்திலாவது நிறைவேறும். **காரல் மார்க்ஸ்** (Karl Marx) கைக்கொண்ட பொதுவுடைமைக் கொள்கை அவர் காலத்தில் நிறைவேற வில்லை; பாவம்! வறுமையில் வாடி யிறந்தார். எனினும், உள்ளங் குறையவில்லை. அவருக்குப்பின் லெனின் அவர் எண்ணத்தையே நிறைவேற்றி ஒரு பெரிய நாட்டையே காப்பாற்றினர். **தேஜபகதூர்** தைரியத்துடன் சத்தியத் திற்கே தலையைத் தந்தார். அவர் மகன் **குருகோவிந்தன்** தந்தையின் எண்ணத்தை நிறைவேற்றினன். உயர்ந்த எண் ணங்கள் உண்மையின் சக்தி பெறும்; ஒருகாலத்தில் தீவிர மாக நிறைவேறும். ஒரு யானை, போர்க்களத்தில் அம்பு தைக்கப்பெற்றால், அப்போதே விசையாகக் காலூன்றிப் பகைவரைத் தாக்கும்; தலைவன் பெருமையைக் காக்கும். அதுபோல, உரங்கொண்ட உள்ளமுடையார், தமது காரி யம் சிதைந்தாலும் தளரமாட்டார்கள்; பின்னும் வீறு கொண்டு முயல்வர். உள்ளவுரன் இல்லாதவர், 'உலகில் பலருக்கு உதவும் வண்மை யுடையோம்' என்னும் பெருமை யெய்தார்.

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

பெரிய, உடலால் பயனில்லை. பெரிய, துணிந்த உள்ளமே பெருமை யுடையது. யானை, பேருடலும் கூர்கொம்பும் உடையது; எனினும், தன்னிற் சிறிய உடலுள்ள புலி எதிர்

த்துத் தாக்கினால் அஞ்சி நடுங்கும். உள்ளத்தின் வீறு, ஆண்மை, திண்மையே ஒருவனுக்குச் சரியான பலமாகும், அறிவாகும். அவ்வாறு மனவுறுதி யில்லாதவர் மரத்தினை ஒப்பர்.

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

இவ்வாறு ஊக்கமும் முயற்சியுங்கொண்டு, பொருளும் புகழும் ஈட்டி உலகில் வாழவேண்டும்.

## நூல் 10

### ஈகையும், புகழும்

### 81. ஈதலே யிசையாம்; இசையே வாழ்வாம்

உள்ளமும் உரமும் கொண்டு ஈட்டியதைப் பலருக்கு உதவி இசைபட வாழவேண்டும். இல்லாத பேருக்குத் தம்மாலியன்றதை ஈதலே புகழ்பட வாழ்வதாகும். அப்படிப் பிறர்க்கீந்து இசைபெற வாழாவிட்டால் மனிதவுயிராகப் பிறந்தும் பயனில்லை.

> ஈத லிசைபட வாழ்த லதுவல்ல(து)
> ஊதிய மில்லை யுயிர்க்கு.

உலகத்தில் புகழ்படப் பேசுவதெல்லாம், தம்மிடம் கேட்பார்க்குத் தம்மாலானதொன்றைத் தந்துதவும் தருமவான்களின் புகழேயாகும். கொடுப்பவனையே உலகம் புகழும், பாடும், கொண்டாடும். உலகில் எல்லாம் பொன்றும். பொன்றாது நிற்பது ஒன்றே; அஃதே உயர்ந்த பொதுநலச் செயல்களைச் செய்த புகழ். இராமராஜ்யம் போனாலும் **இராமர்** புகழைப் பாடுகிறோம். நாடும் அரசும் காலத்தால் அழியும். வீரர் புகழ் நீடித்து நிற்கும். **சிவாஜி** ஆண்ட ஸாம்ராஜ்யம் இன்று இல்லை; அவர் புகழ் இருக்கிறது. **கர்ணன்** இல்லை; 'கொடையிற் கர்ணன்' என்ற சொல் நிற்கிறது. உலகில் ஒருவன் பரோபகாரங்களையே செய்து பலர் புகழ, பலர் வாழ்த்த, வாழ்ந்தால் அவனையே தேவருலகம் போற்றும்; முற்றத் துறந்த ஞானிகளைப் போற்றாது. அஃதாவது, முற்றத்துறந்த ஞானிகளைவிடப் பலருக்குதவிப் புகழ் பெற்ற தருமவீரரைத் தேவர் நன்கு மதிப்பர்.

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

ஆயினும், அப்படிப்பட்ட புகழ் யாருக்குக் கிடைக்கும்? அறிவும், புலமையும், ஆற்றலும், தியாகமும் கொண்ட **வித்தகருக்கே** கிடைக்கும். உலகில் மனிதன் அறிவு, முயற்சி, தவம், தியானநிதிகளால் அடையத்தக்க உன்னத நிலையே **வித்தக நிலை.** அத்தகையர், வறுமையும் துயரும் வந்து கெட்டால் பின்னும் புகழே பெறுவர். **அரிச்சந்திரனும் பிரதாபசிம்மனும்** நாடுநகரிழந்து மெலிந்தாலும், மனவலி கொண்டு சத்திய வீரராயிருந்தனர். அவர் கேடு, அவரது புகழையே விளக்கிற்று. இரவுகெட்டால் பகலாகிறது. நத்தை கெட்டால் முத்தாகிறது. நத்தம் என்பது இரவு, நத்தை, சங்கு. கேட்டால் புகழ் பெருகுவதும், பூதவுடல் செத்தாலும் புகழுடல் என்றும் இருக்கும் பெருமையும் வித்தக மேலோருக்கே இயலும்.

நத்தம்போற் கேடும், உளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

உலகம் புகழ்ந்து போற்றும்படி நற் செயல்களால் வாழாதவர், மனிதவாழ்வை வீணாக்கியதற்காகத் தம்மை நொந்து கொள்ளாது, தம்மை யிகழ்வாரை நோவதேன்? ஊன் மைந்தனைப் பெற்றுற் பயனில்லை. விலங்குகள் கூடக் குட்டிகளைப் பெறுகின்றன. 'புகழ்' என்னும் நித்தியப் புதல்வனைப் பெறவேண்டும். அப்படியில்லாவிடில், உலகோர்க்கு மனித வாழ்வே வசையாகும். இசையில்லா வாழ்வு வசையாகும்.

வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

எச்சம் என்பதற்கு சந்ததி, புதல்வன் என்பது பொருள். இசை யில்லாதவர் தமது நாட்டிற்கே கேடு விளைப்பர். முன்னே வசையில்லாத வளப்பம் அளித்தேனும், பெருஞ் செயல்களால் இசைபடவாழாத மாந்தரைச் சுமக்கும் நிலம் தனது தாராளமான வளப்பத்தில் குன்றும்.

> வசையிலா வண்பயன் குன்றும், இசையிலா
> யாக்கை பொறுத்த நிலம்.

உலகம் வசைகூறுது, பலர் மெச்சும்படி பரோபகாரங்கள் செய்து வாழ்வாரே, உண்மையாக வாழ்வாராவர். இசை யின்றி வாழ்வார் வாழ்ந்தும் வாழாதவரேயாவர்.

> வசையொழிய வாழ்வாரே வாழ்வார்; இசையொழிய
> வாழ்வாரே வாழா தவர்.

ஆதலால், மனிதனுகப் பிறந்தால் புகழ் பெற்று விளங்குக. அப்படிப் புகழ்பெற வாழாதவர் பிறவாதிருப்பதே நலம்.

> தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
> தோன்றலிற் றோன்றுமை நன்று.

## 82. ஈந்து நுகர்வதே யின்ப மாகும்

புகழின் உயிர் ஈகை. எல்லா மதங்களும் ஈகையை வற்புறுத்தும். இல்லாத பேர்க்கு ஈவதே ஈகை. இருப்ப வர்க்குப் பட்டம் பதவி, பேர் புகழைக் குறித்து, இடாம் பீக விருந்துகள் வைப்பது, தன்னலமாகும்; வட்டி எதிர் பார்த்துக் கடன் கொடுப்பது போலாகும்; ஈகை யாகாது.

> வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
> குறியெதிர்ப்பை நீர துடைத்து.

தேவையுள்ளவன் ஒன்றைக் கேட்டால், வைத்துக்கொண் டே இல்லை யென்பது இழிவு. இயன்றதைத் தருதல் உயர்

குலத்தாருக்கு இயல்பு. இட்டார் பெரியார், இடாதார் இழி குலத்தோர். நல்ல வழியில் வந்தாலும் ஒருவரிடம் கொள் ளுதல் தீது. அதாவது யாரிடமும் யாசிக்காது, தன்முயற் சியால் ஒவ்வொருவரும் பிழைக்கவேண்டும். ஆனால் ஒரு வன் ஒன்றைக் கேட்டால், எப்படியாயினும் தருதல் நல் லது. அதனால் நமக்கு மோட்சலோகமே இல்லை யென்றா லும் சரி. குருவின் வார்த்தையை மீறியும் **இராமானுஜர் அஷ்டாக்ஷர**த்தைக் கோடிக்கணக்கானபேர் கேட்டுய்யும் படி கோபுரத்தின்மேல் ஏறி உபதேசித்தார்; "இத்தனைபேர் உய்ந் தனர்; இனி, குருசொல் மீறியதால் நரகம் வந்தாலும் அதுவே என் விண்" என்றார். மேலுலகம் இல்லெனினும் ஈதலேநன்று. இரப்பவர் முகமலருமட்டும் கொடுத்தால்தான் ஈபவனுக்கு மனமகிழும். இன்றேல், கொடுக்க விதியில்லையே என்று மனம் இன்னலுறும். தன்னை அடக்க ஆற்றும் தவத்தினருக்குப் பசியை ஆற்றுதலே பேராற்றல். அப் படிப் பசி பொறுப்பவரைவிடத் தாராளமான ஈகையால் பிறர் பசியை மாற்றும் தருமவான்களின் ஆற்றலே மேல். ஏழைகளின் கடும்பசியைத் தீர்த்தலே, ஒரு செல்வன் தகுந்த இடத்தில் பொருளைச் சேமிப்பதாகும். பசி தீர்த்த புண்ணியமே அவனுக்கு மேலான செல்வம். தந்தை வாணிப முதலாகக் கொடுத்த பொருளை; **குருநானகர்** ஏழைத் துறவிகளுக்கு விருந்திட்டுத் தீர்த்தார். "மகனே லாபமா?" என்று ஆவலாகக் கேட்டார் தந்தை. "ஆம் வேண் டியபுண்ணியம் நமக்கு லாபம்" என்றார் ஞானநானகர். பொருளீகை அருட்செல்வம். வழக்கமாகப் பாத்துண்பவ னைப் பசியாகிய தீயபிணி தீண்டாது.

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

நாட்டின் பசிப்பிணி யொழிக்க, உள்ளவர் செல்வத்தைப் பலருக்கும் பகுத்துண்பதே வழியென்று முன்பு காட்டினோம். மிகுந்த பொருளை நிரப்பி, அத்தனையும் தானே ஓரியாக உண்ணும் கருமித்தனம் பிச்சைவாங்குதலை விடக் கேவலமானது. ஈயாதுண்ணல் இரத்தலி னிழிவு. அப்படிச் சேர்த்துத்தான் தலையில் கட்டிக்கொண்டு போவதென்ன? சாவோலை வந்தாலும், வீடுவாசல் சொத்துச் சுகமெல்லாம் விட்டுப் பிறந்த மேனிக்குக் கிளம்ப வேண்டியதுதானே. அல்லது ஒரு கொள்ளை, கள்ளன் வந்தாலும் போயிற்று. அப்படிச் சேர்த்து வைத்து இழந்துபோகும் வன்கணர், கடுமனத்தர், கருமிகள், பலருக்கும் ஈந்து தாமும் உண்ணும் இன்பத்தை அறியார்களோ? அறிந்தால் கஞ்சத்தனம் செய்யமாட்டார்கள்.

ஈத்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

இறப்பினும் இன்னா லில்லை. கேட்பவர்க்குக் கொடுக்க முடியாதுபோனால் சாவும் இனிதாகும். வருந்திக் கேட்பவர்க்குக் கொடுக்க விதியில்லாது வாழுவதைவிடச் சாதல் இனிது. ஒவ்வொருவரும் தம்மால் ஆன ஈகைபுரிந்து, அந்த இன்பந் துய்த்து வாழவேண்டும்.

சாதலி னின்னாத தில்லை; யினிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

## 83. வழங்காச் செல்வம் வறுமையிற் கொடிது

செல்வத்தைத் தானும் அனுபவிக்கவேண்டும்; பல தொழில்களும் பொது நலங்களும் வளர வழங்கவும் வேண்டும். மனையெல்லாம் பெரும்பொருள் குவித்தாலும், அனுபவிக்கத் தெரியாத கஞ்சன் செத்தவனுக்குச் சமானம்.

பிணத்திற்கும் செயலில்லை; அவன் பொருளுக்கும் செய லில்லை, பெட்டியில் உறங்குகிறது. எல்லாம் பொருளால் ஆகும், அதுவே வாழ்வின் புருடார்த்தம் என்று பிறர்க்குக் கொடுக்காது குவித்து வைப்போன் தனது அறியாமையி னல் லோபித்தனஞ்செய்து பேய்ப்பிறப் பெடுப்பான். மேன்மேலும் சேர்ப்பதே தொழிலாகி, இசைபெறப் பல ருக்குப் பயன்பெற வழங்காத மாந்தர் பிறப்பது, மண்ணிற் குப் பெருஞ் சுமைதவிர வேறில்லை.

ஈட்ட மிவறி, யிசைவேண்டா ஆடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

உள்ளமட்டும் பலர் 'நல்லவன், தருமவான், கொடையாளி, தனது செல்வத்தைப் பலருக்குப் பயன்பட இன்ன தான தருமங்களைச் செய்தான்' என்று சொல்லும்படி வாழ வேண்டும். பல ஏழைகள் தமது குறைசொல்லிப் பொரு ளுதவிகேட்டு, வேண்டியதைப் பெற்று வாழ்த்திச் செல்லும் படி வாழவேண்டும். அப்படியில்லாது, சேர்த்துப் பூட்டி வைத்து லோபித்தனம் செய்பவன், முடிவுகாலத்தில், எதைத் தனக்குப் பின் சாசுவதம் என்று நினைப்பானே தெரியவில்லை! சேர்த்துவைத்தபொருள் தாயாதிகள் சண் டைக் கிரையாகப்போகிறது. லோபித்தனத்தால் தனக்கு நரகம் வரப்போகிறது. நாலுபேருக்குத் தந்து புகழ் பெற்றால், தருமவான் என்று உலகம் கொண்டாடும். தேவையானவர்களுக்கும் சமயத்தில் கொடுத்துதவாது, தானும் அனுபவிக்காது, அடுக்கி அடுக்கிக் கோடிச் செல் வக்குவியல் உண்டாயினும் ஒரு பயனும் இல்லை. அவர்கள் இருந்தும் இல்லாதவரேயாவர்.

கொடுப்பதூஉந் துய்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

தானும் துய்க்காது, தக்காருக்கும் ஒன்றுந் தராத லோபி யின் செல்வம் ஒரு நோயாகும். ஒரு பெண் இரதிபோல அழகாயிருக்கிருள்; பெண்ணிற்குரிய எல்லா வனப்பு வளப் பங்களையும் பெற்றிருக்கிருள்; எனில், அவளது இளநலத் தைக் கூடி யனுபவிக்கும் கணவன்மட்டும் இல்லை; அப் படியே தனிமையாக வயது முதிர்ந்து கிழவியாகிவிடுகிருள். அத்தகைய பெண்ணின் அழகும் வனப்பும் இளமையும் என்ன பயனும்? ஏழை யெளியவருக்குத் தக்க சமயத்தில் ஏதாயினும் ஒரு உதவிசெய்துதவாதவன் செல்வமும் அதனை யொக்கும்.

அற்ருர்க்கொன் ருற்ருதான் செல்வ (ம்), மிகநலம்
பெற்ருள் தமியண்மூத் தற்று.

“ சீ! இவன் கருமி, கொடுக்கமாட்டான்” என்று ஒருவரும் வந்து விரும்பிக் கேட்கப் பெருதவன் செல்வம் எப்படிப் பட்டது? ஊருக்கு நடுவே ஒரு நஞ்சுமரம் (எட்டி) பழுத் தால் அது யாருக்காவது பயனுகுமா?

நச்சப் படாதவன் செல்வ நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

ஆருயிர்களுக்கு அன்பில்லாத கருமி, கல்நெஞ்சன்; தனக் கும் செட்டுப்பண்ணி, தன்னையும் வருத்திக்கொள்ளுவான். நல்லவழியிலாயினும் பொருளைச் சம்பாதிப்பானு? இல்லை. அதர்மங்கள் செய்து சொத்துச் சேர்ப்பான்; அந்தப் பாவி யின் ஒள்ளிய பொருளை முடிவில் யாராயினும் அன்னியர் பறித்துக்கொள்வர். அவன் சந்ததிகளுக்குக் கூட அது தக்காது போகும்.

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

பலர்க்கும் பயன்படக் கொடுக்கும் சிறப்புடைய செல்வர் தமது தாராள ஈகையால் சிறிது வறுமையாகின்றனர். அஃது எப்படிப்பட்டதென்றால், மேகம் தனது தண்ணீரை உலகிற்கு வழங்கி வற்றிப்போனது போன்றது. அதனால் உலகப் பயிர் செழிக்கிறது. ஆறுகளும் ஏரிகளும் நிறைகின்றன. உலகிலுள்ள நீர் மீண்டும் ஆவியாகி மேகத்தை நிரப்புகிறதல்லவா? ஈகைப்பயன் அழியாது. ஈந்தோர் கெடார்.

சீருடைச் செல்வர் சிறுதுனி* மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

கொடுத் திளைத்த கையுமில்லை. கொட்டியிளைத்த மேகமுமில்லை.

## 84. மாரி போலப் பாருக் குதவு.

பரோபகாரத்திற்கு உதாரணம் மேகமே. மேகம் மழை பெய்யாவிட்டால், உலகம் வாழாது. தன் மழையால் உலகை வாழ்விப்பதற்காக, மேகம் ஏதாயினும் உலகோரிடம் கைம்மாறு எதிர் பார்க்கிறதா? மழைக்கு, உலகால் என்ன கைம்மாறு செய்ய முடியும்?

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு)
என்னாற்றுங் கொல்லோ வுலகு?

அவ்வாறு பேர் புகழ், பிரதி பலனை எதிர்பாராது, உலகிற்கு உதவும் மேகங்கள் போலவே, நல்லோர் பரோபகாரஞ் செய்வர். தகுந்த வண்மையாளருக்குத் தங்கள் முயற்சியால் கூடிய பொருளெல்லாம், பலருக்கும் பயன் படும்படி உதவிசெய்யவேயாகும்.

* துனி—வறுமை

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

இப்படிப் பலருக்கும் உபகாரம் செய்வதே ஒப்புரவு. விண்ணுலகிலும் மண்ணுலகிலும் மிகவும் அருமையான பொருள் ஒப்புரவே. தன்னலமற்றுப் பிறர்க்கு நல்லுதவி செய்தலே தேவர்க்கும் மாந்தர்க்கும் அரிய புகழாகும். மனிதனுகப் பிறந்து, செய்தற்கொத்த அறம் யாது என்று அறிந்து செய்பவனே உயிர் வாழ்பவனுவான். தனக்கொத்த அறமறியாது, பிறர்க்குதவாது, தன்னலத்துடன் வாழுவோன் செத்தவர் தொகையிலே சேர்க்கத் தக்கவனே. அவன் இருப்பதும் இறப்பதும் ஒன்றுதான். ஒரு ஊருணி நிறைந்தால் எல்லாருக்குந்தானே பயனுகிறது. அது போல உலகின் நலத்தை விரும்பும் பேரறிஞன் செல்வ நிறைவும் பலர் குறைகளைத்தீர்த்துப் பயன்படும்.

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

ஈயாதவன் செல்வம் நடுவூர் எட்டி பழுத்தாற் போலும். தாராளமான மனதுடையானிடம் உள்ள செல்வம், பசியாற உண்ணப் பயனுகும் ஒரு மரம் உள்ளூரில் பழுத்தது போலாகும். நயமுள்ளவன் செல்வம் பலர்க்கும் பயனுகும்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றூற் செல்வம்
நயனுடை யான்கட் படின்.

எல்லாப் பிணிகளுக்கும் மருந்தாகி, அனைவருக்கும் தப்பாது உதவும் ஒரு நல்ல மூலிகைமரம் உள்ளூரில் இருந்தால் எவ்வளவு உபகாரம் ஆகும். அதுபோலவே, பெருமையான குணங்களையுடைய ஒரு வள்ளலிடம் சேரும் செல்வமும் பயனுகும்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

அத்தகைய நல்லார், மனித சமுதாயத்திற்குத் தாம் செய்யத்தக்க கடமையை நன்கு காண்பர்; தமது நிலைமை இடங்கொடுக்காது கைசுருங்கிய காலத்தும் மனஞ்சுருங்காது, தளராது, பரோபகாரஞ் செய்வர்.

இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்,
கடனறி காட்சி யவர்.

பிறர்க்கு உதவுதலே இயல்பானவன், தான் செய்யத்தக்கதைச் செய்யாது இருக்கமுடியாது; முடிந்ததைச் செய்யாதமையான். அவ்வாறு செய்யத் தவறினால், "ஆகா, இப்போதே நான் வறியனானேன்" என்று வருந்துவான். பரோபகாரம் செய்வதால் கெடுதி வருமானால், தன்னை விற்றாயினும் அதை வாங்கிக்கொள்ளத் தகும். தன்னை விற்றாயினும் பிறர்க்கு உதவிசெய்வோன் பெருமையே பெருமை!

ஒப்புரவி னால்வருங் கேடெனின், அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

## 85. விருந்துடன் அருந்தலே மருந்தினு மினிது

**தாளாண்மை, வேளாண்மை**—உண்மையான உழைப்பால் ஈட்டல், பலருக்கும் பயன்படும்படி மாரிபோல் ஈதல்—இந்த இரண்டும் நமது நாகரிகத்தின் இரு கைகளாகும். விருந்தோம்பல் ஈகைக் குணத்தின் கண்ணாகும். மற்ற எந்நாட்டினும் நமது நாட்டிலேதான் அன்னச் சாலைகளும், அறச் சாலைகளும் மிக்குள. இல்லறத்தில் இருந்து, மனை மக்கள் பொருள்களைக் காத்து வாழுவதெல்லாம் எதற்கு? வந்த விருந்தினரை உபசரித்துப் பலருக்கும் உதவிசெய்பவேயாம்.

> இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம், விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு.

ஏனெனில், பிரமசாரிகள், ஏழைப் பரதேசிகள், துறவிகள் அனைவர்க்கும் இல்வாழ்வாரே துணை. சாகா மருந்தானாலும் வந்த விருந்தாளியைத் திண்ணைப் புறத்தில் காக்க வைத்துத் தானே உண்ணல் விரும்பத் தகாதது. மருந்தேயாயினும் விருந்தோடுண்க.

> விருந்து புறத்ததாத் தானுண்டல், சாவா
> மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

நாடோறும் தன் வீட்டிற்கு வரும் விருந்தாளியை நன்கு உபசரிப்பவன் வாழ்க்கை, வறுமையால் வருந்திப் பாழாகாது. முதலில் விருந்தாளியை உபசரித்துப் பிறகு மீதியைத் தான் உண்ணும் புண்ணியவான் நிலத்தில் விதையிடவும் வேண்டுமோ? அது அவனது தரும பலத்தினால் தானே முளைத்து விளைவேறும்.

> வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
> மிச்சில் மிசைவான் புலம்.

வந்த விருந்தினரை உபசரித்து, இன்னும் வரும்விருந்தை உபசரிக்க எதிர்பார்த்திருப்பான், புண்ணியப் பலனால் தேவருக்கே நல்ல விருந்தாளியாவான். விருந்தோம்பல், ஒரு வேள்வி. அதன் பயன் இவ்வளவு என்று வரையறுக்க முடியாது. விருந்தாளிகளின் தகுதி எத்துணையோ அத்துணை அவ்வேள்வியின் பெருமையாம். இந்த விருந்தோம்பும் வேள்விப்பயனை அடைந்து மகிழாத செல்வன், "அந்தோ! பொருளை எவ்வளவு பரிந்து காத்தேன். என்ன பயன்? யாருக்கும் கொடுக்காத லோபியானேன். இப்போது என்னைப் பற்றுதலுடன் ஆற்றுவாரில்லை; வாழ்வில் இன்பமில்லை" என்று ஒருநாள் வருந்துவான். செல்வம்

இருந்தும் வந்த விருந்தாளியை உபசரிக்காதவன் தரித்திர னுக்குச் சமானம் ஆவான். சில அறிவிலிகளிடம் இந்த மடமையான கஞ்சத்தனம் உண்டு. அனிச்சமலர் மோந் தால் வாடும், முகம் திரிந்து பார்த்தாலே விருந்தாளியின் மனம் வாடும். முகமலர்ந்து, விருந்தாளியை அதிதி தேவனுகக் கருதி உபசரிக்கவேண்டும். அப்படிப்பட்ட வீட்டில் ஸ்ரீதேவி மனமகிழ்ந்து குடியிருப்பாள்.

அகனமர்ந்து செய்யாள் உறையு; முகனமர்ந்து,
நல்விருந் தோம்புவா னில்.

## 86. பற்றுத லுடையார் சுற்றம் பெருகும்

இவ்வாறு விருந்தோம்புவதுடன் கிளைகளையும் தாங்க வேண்டுமென்பது சொல்லாமலே தெரியும். சுற்றத்தார் கள் சுற்றி வாழும்படி அன்பும் ஆதரவும் கொண்டு நடப் பதே செல்வம் பெற்றதன் பயனும்.

சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

சுற்றத்தார் எப்போது ஒருவனை மகிழ்வுடன் அணைந்திருப் பர்? முக மலர்ந்து வரவேற்று, "சௌக்கியமா? வாருங் கள், உட்காருங்கள்; சாப்பிடுங்கள், ஏதேனும் தேவையா? கேளுங்கள்" என்று இன்சொல் பேசி, சமயத்தில் அவர் களுக்குக் கைகொடுத்துதவுதலே சுற்றத்தார் எப்போதும் தொடர்ந்து தன்னைச் சுற்றி அன்புடன் கூடுவதற்கு ஏது வாகும். ஒருவன் சிடுமூஞ்சி, கடுஞ்சொல் உடையவனு யிருந்தால் ஒரு பிராணியும் அவனிடம் வராது. ஈகை, இன்சொல்—இரண்டுதான் சுற்றத்தாரையும் மற்றையோ ரையும் வசப்படுத்துவன.

கொடுத்தலு மின்சொலு மாற்றின், அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

பெருங் கொடையாளியாகி, சிடுசிடுப்பில்லாமல் கோபமில்லாமல் முகமலர்ந்து வந்தவரை ஏற்பவனே உலகில் அதிகமான சுற்றத்தை ஆளுவான். காக்காய் எப்போதும், "கா கா" என்று கரைந்து தனது இனத்தைக் கூவியே உடனுண்ணும்; தான் மட்டும் கரந்து தனித்துண்ணாது. அப்படிச் சுற்றத்தாருடன் சேர்ந்து உண்ணும் இயல்புள்ளவர்க்கே ஆக்கம் பெருகும்.

காக்கை கரவா, கரைந்துண்ணும், ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள.

ஒரு குளத்தைச் சுற்றிக் கரையிருந்தால்தானே தண்ணீர் நிறைந்தால் அதில் தங்கும் ? இல்லாவிட்டால் தண்ணீர் ஓடிப் போய்விடுமல்லவா ? அதுபோல, சுற்றத்தாரோடு தாராளமான அன்புடன் அளவளாதவன் வாழ்வும் செல்வாக்கும் ஒருவராலும் மதிக்கப் பெறுமல் போய்விடும். குளம் கரையளாவவேண்டும். மனிதன் சுற்றமளாவ வேண்டும்.

அளவளா வில்லாதான் வாழ்க்கை, குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

விருப்பறுத, அன்புமிக்க சுற்றம் இணைந்தவன் ஆக்கம் அரும்போங்கிக் கிளைத்துப் பல நலங்களைத் தரும். கையிளைத்தாலும் சுற்றத்தார் அவனுக்குக் கைகொடுத்துத் தூக்கிவிடுவர். அன்புள்ள வண்மையாளன் பசையற்றுப் போனாலும், 'நமது பந்து, நமக்கு உதவி செய்தவன், கைவிடக்கூடாது' என்று நன்றியுடன் அன்புபாராட்டி, சுற்றத்தார் அவனுக்குக் கைபோலுதவுவர். முன்னே உறவு பூண்டு, ஒரு மனஸ்தாபத்தால் சுற்றத்தான் பிரிந்துபோனால் அவனை மீண்டும் வசப்படுத்தவேண்டும். எப்படி ? அவன்

மனத்தாபங்கொண்டு நம்முடன் அமராது போனதற்குக் காரணம் அறிக. அந்தக் காரணத்தை நீக்குக. பிறகு உறவு மீளும். ஆனால் **அரசன்**, அவரவர் திறத்திற்குத் தக்க படி ஆட்களை மதித்து உறவு கொள்ளவேண்டும். தன்னிடமிருந்து பிரிந்து வேறொரு கட்சியில் சேர்ந்தவன், மீண்டும் ஒரு காரணமாகத் தன்னிடம் வருகிறான்; வேந்தன் என்ன செய்யவேண்டும்? வந்த காரணத்தை மட்டும் எண்ணி, அநுசம்பந்தமாகப் பேசி, அதை முடிவு செய்க. இன்றேல் பகை முதிரும். மற்றப்படி கவனமாயிருக்க வேண்டும். வேந்தன் எல்லாரையும் ஒரே சமனாக நோக்காமல், அவரவர் தகுதிக்கேற்றபடி நோக்கவேண்டும். அப்போது பலர் வேந்தனின் அன்பு விழிகளை நோக்கி, அவனுக்குப் பிரியமானதைச் செய்து வாழுவர்.

பொதுநோக்கான் வேந்தன்; வரிசையா நோக்கின்,
அதுநோக்கி வாழ்வார் பலர்.

## 87. கண்ணிற் கழகு கண்ணோட்ட மென்க

சுற்றத்தார், விருந்தினர், பொது ஜனங்களுடன் அன்புறப் பழகுவதற்குக் கண்ணோட்டம் வேண்டும். 'கண்ணோட்டம்' என்பது தாட்சிண்யம், முகங்கொடுத்துப்பேசல். ஈயாக் கைபோல, ஈயாக் கண்ணும் பயனில்லை. கண்ணிற் கழகு கண்ணோட்டம். ஒருவருக்கொருவர் தயை தாட்சிண்யத்துடன் பழகுவதால்தான் இவ்வுலகமே இருக்கிறது. உலக வாழ்க்கை கண்ணோட்டத்தில் உள்ளது. அதில்லாதவர் நிலத்திற்குச் சுமையேயாவர். பாடுவதற்கு ஒத்துவராத பண் என்னபயன்? அதுபோலக் கண்ணோட்டமில்லாத கண்ணும் பயனில்லை.

பண்ணென்னும் பாடற் கியைபின்றேற், கண்ணென்னுங்
கண்ணோட்ட மில்லாத கண்.

அளவறிந்து தாட்சிண்யம் காட்டாத கண் முகத்தில் இருந்துமென்ன ? கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம். கண்ணோட்டமில்லாத கண் புண்ணென் றுணர்க.

> கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
> புண்ணென் றுணரப் படும்.

கண்ணிருப்பவருக்குக் கண்ணோட்டமில்லாமலிராது ; அது கண்ணின் இயல்பு. கண்ணோட்டமில்லாதவர் மண்ணோடு பொருந்திய மரம்போன்று உணர்ச்சி யில்லாதவ ராவர்.

> மண்ணோ டியைந்த மரத்தனையர் ; கண்ணோ(டு)
> இயைந்துகண் ணோடா தவர்.

நண்பரிட மட்டுமல்ல. தம்மை ஒறுத்தாரிடமும் தாட்சிண்யத்துடன் பொறுமைகொண்டு ஒரு காரியத்தைச் செய்யும் பண்பே சிறந்தது. எல்லாரும் விரும்பத்தக்க நாகரிகம் (கண்ணோட்டம்) வேண்டும் பண்பினர், நண்பர் நஞ்சூற்றிக் கொடுத்தாலும், **சொக்ராத்தஸைப்**போல (Socrates) உண்டு, மனமாறாது நேசிப்பர். அஃதாவது எவ்வளவு கெடுதல் செய்த நண்பரிடமும், பண்புள்ளவர் தாட்சிண்யத்துடன் நடந்துகொள்வர். ஆனால், தாட்சிண்யப்பட்டு ஒருவன் தான் மேற்கொண்ட நல்ல கருமத்தைச் சிதையவிடக் கூடாது : தனது நற்செயல் சிதறாது கண்ணோட்டத்துடன் நடந்துகொள்பவனுக்கு இவ்வுலகமே உரிமையாகும்.

> கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்(கு)
> உரிமை யுடைத்திவ் வுலகு.

## 88. தீயறிந் துண்க. நோய்மருந் தேனோ ?

இனித் தன் வயிற்றிற்கு உணவுதருவதைப் பற்றிப் பேசுவோம்: 'யோகசித்தி' 'உடலுறுதி', 'இயற் சிகிச்சை,

யென்னும் அதிகாரங்களில் உணவு நெறியும் நோயற்ற வாழ்வும் விளக்கப்பட்டுள்ளன காண்க. அளவறிந்து உண்பதே நோயற்ற வாழ்வின் அடிப்படை. முன் உண்டது சீரணித்துக் கழிவு நீங்கியபின், பசியளவை அறிந்து உண்க. அஃதே உடம்பைப் பெற்ற மனிதன் நீண்டகாலம் வாழுவதற்கு வழி.

> அற்றால், அளவறிந் துண்க; அஃதுடம்பு
> பெற்றா னெடிதுய்க்கு மாறு.

ஊண், உறக்கம், வேலை இவை மிகுதியானாலும், குறைந்தாலும், வாத பித்த கபங்கள் நோய் செய்யும். நோய் தீரப் பல மருந்துகளைப் போட்டடைக்கின்றனர். அது வழியன்று. உள்ளேயிருக்கும் சரக்கு வெளி யேறவேண்டும். உபவாசமிருந்தால் நல்லது. 'முன்னே உண்டது சீரணித்து, மலம் அற்றபின்னரே உண்பது' என்ற உறுதி பூண்டால் மருந்தே வேண்டா. ஏனெனில், பிணிகளுக்கெல்லாம் பிறப்பிடம் வயிறு. வயிற்றில் பழைய சரக்குகள் அடைபட்டுக் குடல் நாறி, உடல் நாறி, மந்தம், புளிச்சேப்பம், வயிற்றுவலி, மலச்சிக்கல், தலைவலி முதலிய பல நோய்கள் உண்டாகின்றன. குடல் காலியாகத் தண்ணீர் அருந்திக் காலையில் இரண்டு மூன்று மைல் நல்ல காற்றில் நடக்கலாம்; **உடலுறுதியில்** குறிக்கப்பட்ட யோகாசனங்கள் செய்யலாம். மற்ற உடற்பயிற்சிகளும் செய்யலாம். எப்படியேனும் அடிவயிறு காலியாகவேண்டும்; அதன் பிறகே கப கபவென்று பசியெடுக்கும். அப்போது உண்டால், உண்டது உடம்பில் ஒட்டும்; மருந்தே வேண்டா.

> மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
> தற்றது போற்றி யுணின்.

முன் உண்டது - அற்றதை அறிந்து, துவரப் பசித்து, அஃதாவது வயிற்றில் புளிச்சேப்பம் இல்லாது, பசிக்கனல் சுத்தமாகக் கிளம்பும்போது உடம்பிற்கு ஒத்ததாய், நன்னெறி யொழுக்கத்திற்கு மாறில்லாத சைவ வுணவை, சுசி ருசியாக உண்க. ஊன், மது, திருட்டுத்தீனிகள் முன்பே கண்டிக்கப்பட்டுள்ளன. கனி, கிழங்கு, தானியம், காய், கீரை, கடலை வகைகள், பால், தயிர், நெய்யுடன் உண்ணலாம். அவரவர் உடம்பிற்கும், சுவைக்கும், சீரண சக்திக்கும் ஏற்றவாறு இவ்வுணவுப் பொருளைப் பக்குவப்படுத்தி யுண்க.

> அற்ற தறிந்து, கடைப்பிடித்து மாறல்ல
> துய்க்க துவரப் பசித்து.

மறுபடியும் அதையே வற்புறுத்துகிறார். உடம்பிற்கு ஒத்துவரும் மாறுபாடில்லாத உணவை உண்ணவேண்டும். அதையும் இடையிடையே ஒவ்வொருநாள் மறுத்து உண்ண வேண்டும். அஃதாவது, பட்சத்திற்கு ஒருநாள் உணவை மறுத்து உபவாசம் இருந்தால், சீரணக்கருவிகள் சற்று ஓய்வு பெற்றுக் கழிவை உமிழ்ந்து, மீண்டும் சுறுசுறுப்பாக வேலை செய்யும். கண்டபடி வைத்தடைக்கும் பேராசையை மறுத்து, அளவுடன் உண்ணல் என்றும் கொள்ளலாம். அளவுடன், பசித்து, தகுந்த உணவை இயல்பாக உண்டால், உயிருக்கு எவ்விதமான பிணியும் துன்பமும் இல்லாமல் வாழலாம்.

> மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்,
> ஊறுபா டில்லை யுயிர்க்கு.

உண்டது இறங்கி, மலம் இழிந்தபிறகு, பசிகண்டு சுசிருசியாகச் சாப்பிடுவோன் இன்புறுவான். சாக்கில் அடைப்

பது போலக் கண்டநேரமெல்லாம் உண்ணும் பெருந்தீனிக் காரனிடம், நோயும் துன்பமும் குடிகொண்டிருக்கும்.

இழிவறிந் துண்பான்கண் இன்பம்போ னிற்கும்
கழிபே ரிரையான்க ணோய்.

ஜாடராக்கினிக்குத் தக்கபடி அளவாக உண்ணத்தெரியாது, பெருந்திண்டிக்காரன், அளவில்லாத நோயால் துன்பப்படுவான்.

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்,
நோயள வின்றிப் படும்.

இவ்வாறு உணவுநெறி காத்தால் நோய் வராது. நெறி தப்பி வாழ்ந்து நோய் வந்தால் என்ன செய்வது? கண்ட மருந்துகளை உண்ணக்கூடாது. இன்ன நோய் என்று அறிக. அதன் காரணம் அறிக. அது தணியும் வழி யறிக. அதற்கேற்றதைச் செய்க. ஒருவனுக்கு நோய் காய்ச்சல் ஏன்? குடலில் அடைப்பு, வயிற்றில் பித்தம். காரணம்? உள்ளே அடைபட்ட அழுக்கு வெளியேற வில்லை. சிகிச்சை? இன்னும் மருந்துகளை வைத்தடைப் பதா? இல்லை. உள்ளே யிருக்கும் சாக்கடை நாற்றத்தை வெளியேற்ற வேண்டும். உடனே வயிற்றிற்கு ஓய்வு தருக. நன்னீர் அருந்தி உபவாசம் இருந்தால் சரக்கெல் லாம் கீழேயிறங்கும். பிறகு, வஸ்தி வைத்துக்கொண்டால் எல்லாம் காலியாகும்; மறுநாளே நோய் குணமாகும். இம்மாதிரியே மற்றநோய்களுக்கும் இயற்கையாகச் செய்ய வேண்டியதைச் செய்க.

நோய்நாடி, நோய்முத னாடி, யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

மருத்துவ நூல்களையும் இயற்கை முறைகளையும் நன்குக் கற்றவன், நோயாளி தாங்கும் அளவு, பிணியின் அளவு,

காலத்தின் மாறுபாடு முதலியவற்றைக் கருதியே சிகிச்சை செய்யவேண்டும். நாலும் சேர்ந்தால்தான் நோய் குணமாகும்:-(1) **நோயாளி**, வைத்தியனுக்கு இணங்கிச்சொன்னபடி நடக்கவேண்டும், பொறுக்க வேண்டும். (2) நோய் தீர்க்கும் **வைத்தியன்**, நோய்க்கேற்ற பரிகாரத்தைக் கருத்தூன்றிச் செய்யவேண்டும். (3) **மருந்து**, மீண்டும் வயிற்றில் சுமையேற்றாது, நோய்காரணமான அழுக்கை நீக்க வேண்டும். (4) கிட்ட இருந்து, **நோயாளியைக் கவனிப்வன்** (உழைச் செல்வான்) அன்பும் ஆதரவுமாக இருக்க வேண்டும்.

# நூல்—11

## நாடும், அரசும்

### 89. வளம், பொருள், அமைதி வாய்ந்தது நாடு

இதுகாறும், வீட்டாட்சி கண்டோம். இனி நாட்டாட்சியைக் காண்போம்: முடியரசு குடியரசாகி வருகிறது; எல்லாருந் தாய்நாட்டு மன்னராகின்றனர். இக் காலத்தில் அரசியல் அறிவு அனைவருக்கும் வேண்டும். **அர்த்தசாத்திரம்** (Economics) அல்லது **பொருள் நூல்**, அரசியல் அறிவை விளக்கும். **மனு, பராசரர், பிருகஸ்பதி, உசானர், சுக்கிரன், காமந்தகர்** முதலிய முனிவர் இயற்றிய பொருளெல்லாம் தொகுத்து, மீதும் பல அரசியல் நுட்பங்களையும், போர், படை, பகைவெல்லும் சூட்சிகளையும் சேர்த்து, **சாணக்கர்** என்னும் தென்னாட்டவர், **சந்திரகுப்தன்** காலத்தில் அர்த்தசாத்திரம் எழுதி யுள்ளார். தமிழில் 'ஆத்திச்சூடி' முதல் 'ஐம்பெருங்காப்பியம்' வரையில், அரசியல் நுட்பங்களைக் கூறாத நூலில்லை. அவற்றுள், அரசியலை ஒரு தனிச் சாத்திரமாக விளக்குவது வள்ளுவர் 'பொருட்பால்'. பொருட்பால் எழுபது அதிகாரங்களில், படை, அரசு, குடி, பொருளாதாரம், அமைச்சு முதலியவை, நாட்டின் நன்மைக்காக நன்கு அமைந்து, ஆட்கிச் சக்கிரத்தை நடத்தும் வகையை விளக்குகிறது. வள்ளுவர் காலம் முடியாட்சிக்காலம். அறநெறிச் செங்கோன்மை பூண்டு, கல்விகேள்விகளிற் சிறந்த அமைச்சர் சூழ, அருளும் அறிவும் சான்ற பெரியார் துணைக்கொண்டு, வீரப்

படைகூட்டிப் பகைவரிடமிருந்து நாட்டைக்காத்து, உழவு, தொழில்களால் செல்வம் பெருக்கி, ஆறிலொரு கடமை வாங்கி, மக்கட்குப் பல நலம் புரிந்து, பகை பிணி அச்சம் வறுமை உட்பகை நீக்கி, கல்வி, கலை, தொழில், செல்வம், சுகாதாரம், அன்பு, அமைதி பெருக நாடாளும் மன்னறமே **பொருட்பால்.** இப்போது இரத்தப் புரட்சிகளால் கொலை வழி நடக்கும் பொதுவுடைமையைவிட, இந்த அறநெறிச் செங்கோல் மேலானது. அரசன் என்பதற்குப் பதில், **ஜனநாயகம்** (Democracy) என்றுணர்ந்து பார்த்தால் வள்ளுவர் 'பொருட்பால்' இக்காலத்திற்கும் எக்காலத்திற்கும் பொருந்தும் ஒப்பற்ற அரசியல் இலக்கணமாகும். எத்தகைய நாட்டை வள்ளுவர் வேண்டுகிறார்? காண்பாம்:

நாட்டிற்கு மூன்று வேண்டும்:—1. மாந்தர் உண்டு பிழைக்கவும், பல தொழில்கள் ஆற்றவும், நிறைவான விளைவு வேண்டும்; நீர் நிலவளமை வேண்டும். 2. மக்களுக்கு வழிகாட்டி, அவர்களை அறவழியில் நடத்தத்தக்க அறவோர், பெரியார் வேண்டும். 3. தாளாண்மையும் வேளாண்மையும் செய்யும் குறைவற்ற செல்வர் வேண்டும். அறிவு, தொழில், கலை, வாணிபங்களால் நாட்டில் பெரும் பொருள் நடமாடவேண்டும். அதனால் நாட்டை அனைவரும் விரும்புவர். பஞ்சம் வறுமை வேண்டா. நிலம் ஏராளமாக விளைவைத் தரவேண்டும்.

> தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்விலாச்
> செல்வருஞ் சேர்வது நாடு.

பஞ்சம், பகை, பிணிகளால் கேடுறாது, அப்படிக் கெட்டாலும்; தனது வளமையிற் குறைவுபடாது, ஏராளமான உணவு, உடை, மருந்து, தொழிற் பொருள்களைத் தந்து, கேட்டைத் தவிர்ப்பதே நாடு. மழைவளத்தால், மக்கள்

அதிகமாக உழைக்காமலே, மிக்க வளந்தருவதே நாடு. நாடி உழைத்துப் பாடுபடப் பலனைத்தருவது அவ்வளவு சிறந்த நிலமன்று. அஃதாவது நாட்டில் இயல் வளங்கள் மிகுந்திருக்கவேண்டும். இயல்பாக வான்வளத்தால், மண், காய் கனி கிழங்கு தானியவகைகளை ஏராளமாகத் தரவேண்டும். நமது பாரதநாடு அத்தகையதே. இங்கிலாந்து, இத்தாலி போன்ற நாடுகள் மிகவும் பாடுபட்டுப் பலந்தருபவை.

நாடென்ப நாடா வளத்தன ; நாடல்ல
நாட வளந்தரு நாடு.

மழையால் நிரம்பிய ஊருணிகள், ஊற்றூறுங் கேணிகள் ஆகிய இருபுனலும், இமயமலைபோன்று நாட்டிற்குத் தக்க காப்பாக அமைந்த மலையும், அந்த மலையிலிருந்து கங்கைபோலத் தவழ்ந்துவரும் அருவியும், பகைவர் உட்புகாது காக்கும் காடு, மலை, முதலிய அரண்களும் நாட்டிற்கு உறுப்புகளாகும்.

இருபுனலும், வாய்ந்த மலையும், வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு.

இனி நாட்டிற்குள்ளே சென்று மக்கள் நிலையறிவாம். 1. நோய் நுடக்கம் இருத்தல் கூடாது ; 2. வறுமை, பசி, இருத்தல் கூடாது ; செல்வம் நிறைந்திருக்கவேண்டும். 3. நிலம் ஏராளமாக விளையவேண்டும் ; 4. மாந்தர் மடமை, அடிமை கொடுங்கோன்மைத் துயரின்றி இன்புற்றிருக்க வேண்டும் ; 5. கள்ளர், விலங்குகள், பகைவர் வராது, பலமான காவற் படையிருக்கவேண்டும். இந்த ஐந்தும் ஒரு நாட்டிற்கு அணியாகும்.

பிணியின்மை, செல்வம், விளைவின்பம், ஏமம்,
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

இனி நாட்டிற்கு எவை கூடா? மக்கள் துயருறும் பசிக் கொடுமை; நீங்காத் தொத்து நோய்கள்; இன்னும் பலவகை நோய்கள்; புறத்திலிருந்து நாட்டைப் படையெடுத்து மக்களை அழிக்கும் பகை. இவை இல்லாததே நாடு.

> உறுபசியும், ஓவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
> சேரா தியல்வது நாடு.

நாட்டில் பல கட்சிகள் கூடா. ஒற்றுமை வேண்டும். நாட்டைப் பாழ்படுத்திப் பகைவருக்குக் காட்டிக் கொடுக்கும் உட்பகை கூடாது. அரசை அலைக்கும் கொலைவெறி கொண்ட புரட்சிக்காரரும் இருத்தல் கூடாது. பொதுப் பணிச் சுமை எவ்வளவு வந்தாலும் தாங்கிக்கொண்டு, நாட்டின் சேமத்தையும் பாதுகாப்பையும் வகிக்குந்தலைவனுக்கு, அரசிறை முழுதையும் தரவேண்டும். அத்தகைய கட்டமை பூண்ட மக்களைப் பெற்றதே நாடு. இந்தப் பெருமையெல்லாம் பொருந்தியிருப்பினும், நீதிநெறி கடைப்பிடித்து, அன்புடன் ஆளும் மன்னன் அமையாவிட்டால் பயனில்லை.

## 90. ஆளும் காப்பும் அமைந்தது நல்லரண்

இது ஆகாயகுண்டர் காலம். மின்கம்பிகளால் நகரங்களை வளைத்துக் காப்பாற்றுகின்றனர்: அக்காலம் பகைவரைத் தடுக்க நால்வகை அரண் அமைப்பர்: 1. நீரரண்: 2. மண்வெளி; 3. மலை; 4. நன்னிழற் காடுகள். இவை இயற்கை யரண்களாகும். ஆண்மை, அறிவு, பொருள், படை முதலிய பலங்களைக்கொண்டு போராற்றுவோருக்கும் அரண் பெருந்துணையாகும். பகைவருக்கு அஞ்சித் தம்மைக் காத்துக்கொள்ள விரும்புவோருக்கும் அரண் சிறந்த பலமாகும். அரண் அல்லது கோட்டை எப்படியிருக்கவேண்டும்? பகைவர் ஏணிவைத்து அல்லது உடும்

பைப் போட்டு ஏறமுடியாதபடி உயரமாக இருக்கவேண்டும்; மேலே படைகளும் பீரங்கிகளும் வைத்துப் போர் புரிய, தாராளமான அகலம் இருக்கவேண்டும்; பகைவரின் பீரங்கிகள் துளைக்கமுடியாதபடி கல்லைப்போலத் திண்மையாயிருக்கவேண்டும். வேற்றவர் உள்ளே புகுதல் அருமையாகும்படி, அரணானது பலமான உட்காப்பும், புறக்காப்புங் கொண்டதா யிருக்கவேண்டும். மதிலின் அமைப்பினாலேயே பகைவர் நுழையாது காக்கவேண்டும். மற்று, ஆட்காவல் வைக்கவேண்டியது சிறிதா யிருக்க வேண்டும். உள்ளேயும், மேலும் படைகளுக்கு விசாலமான இடம் அமைந்திருக்க வேண்டும். தன்னைச் சூழ்ந்த பகைவரின் ஊக்கத்தை அழிப்பதா யிருக்கவேண்டும். "அடேயப்பா, இந்தக் கோட்டையைப் பற்ற நம்மால் முடியாது" என்று பகைவர் அதைரியப்படத்தக்கதா யிருக்கவேண்டும். பகைவர் முற்றுகைபோட்டுப்பிடிக்கமுடியாதபடி உறுதியா யிருக்கவேண்டும். உள்ளே பொது ஜனங்களுக்கும், படைகளுக்கும் போர்க்காலத்தில் வற்றாது ஏராளமான உணவும் பொருளாதாரமும் நிறைந்திருக்கவேண்டும். கோட்டைக்குள்ளே இருப்பவர் எளிதாகத் தம்மைக் காத்துக்கொள்ளக் கூடியதாய் அரண் அமைந்திருக்கவேண்டும். அது உணவு, உடை, படைக்கலம், முதலிய எல்லாப்பொருளும் தன்னுட் கொண்டு, பகைவர் நுழைந்தவிடத்தில், உடனே உதவிசெய்யும் நல்ல வீரரையும் பாதுகாப்பாகக் கொண்டிருக்கவேண்டும்.

> எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
> நல்லா ளுடைய தரண்.

பகைவர் முற்றுகை போட்டாவது, குண்டுகளை யெறிந்து தகர்த்தாவது, துரோகிகளைகொண்டு தந்திரமாகப் பற்ற

முடியாதபடி அரண் இருக்கவேண்டும். உறுதியும் பொருளு மிருந்தால் முற்றுகை பலிக்காது. நன்றியுள்ள நல்வீரர்இருந் தால், துரோகிகள் சூட்சி பலிக்காது. முற்றுகை போட்ட பகைவரை முறியடிக்கவேண்டும். முற்றுகை போட்டுப் பற்றினுலும், தளராது தாம்பற்றிநின்ற இடத்தைக் காத் துப் பகைவரை வெல்லவேண்டும். புறத்தோர் புகாது காத்துக்கொள்ள எளிதான வினைப்பாடுகளுடன், தக்க போர் வீரர் காப்பினுல் வீறுற்று, அதன் முன்முனையில் வந்தாலே பகைவரைப் பொருது வீழ்த்தத் தக்கதாக நாட் டின் காப்பு அமையவேண்டும். இஃதே அரண்பெருமை. எவ்வளவு பெருமை வாய்ந்தாலும், போர்வினையில் தக்க மாண்பும், தேர்ச்சியும் உள்ள வீரர்கள் இல்லாத போனுல் பயனில்லை. பகைவர் வந்தவிடத்து, உள்ளேயிருப்பவர், துணிவும் திறமையுங்கொண்டு போர்வினை தொடர முடியா விடில், பயனில்லை.

எனைமாட்சித் தாகியக் கண்ணும், வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

## 91. அறமறி யிகை யரசர்க் கழகு

இவ்வாறு நல்ல வீரப்படை, நன்றியுள்ள குடிகள், அவர்களைத் தாங்க ஏராளமான பொருள் (கூழ்), அறிவும் திறமையுமுள்ள அமைச்சர், பிற மன்னருடனும் அறிஞருட னும் நல்லோருடனும் நட்பு, பகைவரைத் தடுக்கும் பல மான அரண் இந்த ஆறும் உடையவனே மன்னரிற் சிங்கம்.

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு.

அரசனுக்கு நான்கு குணங்கள் இயல்பாகவேண்டும்— அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம். இவை எஞ்சாது, நீங் காது, எப்போதும் இருக்கவேண்டும்.

அஞ்சாமை, யீகை, யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.

நிலவுலகாளும் மன்னன் போகசுகங்களில் சொக்கி மயங்கித் தூங்காது, அரசியலைக் கண்ணும் கருத்துமாகக் கவனிக்க வேண்டும்; பலதிறக் கல்வியறிவை நாளும் வளர்க்கவேண்டும். கல்வி கேள்விகளின் அவசியம் முன்பே சொன்னோம். 'இன்ன சந்தர்ப்பத்தில் இன்னது செய்யத்தக்கது' என்று மந்திரிகளுடன் ஆய்ந்து துணிந்து நடக்கவேண்டும். கண்டிப்பதைக் கணடிக்கத் துணிவு வேண்டும். தூங்காமை, கல்வி, துணிவு இம்மூன்றும் மன்னனுக்கு எப்போதும் வேண்டும். எத்தகை யரசு பெருமையும் புகழும் உடையது? அறந்தவறக்கூடாது; செங்கோல் நடத்தவேண்டும்; அதர்மத்தை ஒழிக்கவேண்டும். வீரத்திற்கு இழுக்கு வராது துணிந்து நடக்கவேண்டும். தனது மானத்தைக் காக்கவேண்டும். அதுவே, புகழ்பெற்ற அரசிற்கு அழகு. அரசின் கடமை யென்ன? 1. காலத்திற்கும், குடிகள் நன்மைக்கும், முன்னேற்றத்திற்கும் தகுந்த சீர்திருத்தங்களையும், சட்டதிட்டங்களையும் இயற்றல். 2. வரி, தீர்வைகள் வழியாக அரசியல் செலவிற்கு வேண்டிய வருமானம் ஈட்டல். 3. அப்படி ஈட்டிய பொருளைப் பகைவர், கள்வர், தீயர் கொள்ளாமல் பாதுகாத்தல். 4. அவ்வாறு காத்த பொருளைக் கல்வி, தொழில், நீதி, படை, சேவகர், அறநிலயம், சுகாதாரம் இவற்றிற் தகுந்த முறையில் வகுத்துச் செலவிட்டுக் குடிகளுக்கு நலம் புரிதல்.

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

மன்னன் குடிகளிடம் எப்படி நடந்துகொள்ளவேண்டும்? எளிதாக யாரும் கண்டு தங்கள் குறைகளை முறையிட்டு

நலம்பெறத்தக்கவனாக அரசன் இருக்கவேண்டும். இதற்காக நமது தமிழ்மன்னர் ஆராச்சிமணி கட்டினர். சிடுசிடுவென்றாவது, அகங்கார அதிகாரமாவது செய்யாமல், மன்னன் இனிமையாகப் பேசவேண்டும். அப்படிப்பட்டவனை உலகம் உயர்த்திச் சொல்லும். இன்சொல்லால் குடிகளின் மனத்தை மன்னன் வசப்படுத்தவேண்டும். அறிவும், தொழிலும், ஆற்றலும், அறமும் மக்களிடையே ஓங்கி வளரும்படி தாராளமாகப் பொருளீந்துதவவேண்டும். வறுமை, மடமை, பிணி, பகையால் குடிகள் வருந்தாது காப்பாற்றவேண்டும். இவை வல்ல அரசன் புகழ், உலகெல்லாம் பரவும்; "இவன் நலம்புரியும் நீதி மன்னன்" என்று எல்லாரும் சொல்லும் புகழினாலேயே உலகமெல்லாம் தனதாகக் கண்டவனாவான். அவனுக்கு உலகம் வசப்படும். அவன் சொல் எங்கும் செல்லும். குடிகள் குறைகளைக் கூறும்போதும், மந்திரிகள் இடித்துப் புத்திமதி கூறும்போதும் செவி கைத்துப்போகும்படி கேட்டு, தன்னைத் திருத்திக் கொண்டொழுகும், வேந்தன் ஆட்சி, அனைவரும் விரும்பத்தக்கதாயிருக்கும். அவன் குடைக்கீழ் உலகம் மகிழ்ந்து நீடுழி, போர் பகையின்றித் தங்கும்.

> செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
> கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

அறம், அறிவாற்றல், தொழில் வளம் ஓங்கத் தாராளமாகப் பொருளும் சௌகரியங்களும் கொடுக்கவேண்டும். குடிகளிடம் அன்பும் இன்சொல்லும் முகமலர்ச்சியுங் காட்டவேண்டும். கடுவரிகள், கடுவிதிகள், அகங்கார அடக்குமுறைகள் இன்றி, நியாயமாக, அன்பும் அறமும் ஈகையும் கொண்ட செங்கோல் செலுத்தவேண்டும். காவலன் தனது குழந்தைகளைப்போலக் குடிகளைப் பேணவேண்டும்.

உடம்பை உயிர்போல, மன்னன் குடிகளைப் போற்றவேண்டும். அத்தகைய மன்னனே வேந்தருக்கெல்லாம் ஒளியாக நிலவுவான். அவன் மற்ற மன்னருக்கு ஒளிகாட்டுவான்.

கொடையளி, செங்கோல், குடியோம்ப னான்கும்
உடையானும் வேந்தர்க் கொளி.

இவ்வாறு நீதி முறைசெய்து குடிகளைக் காப்பாற்றும் மன்னவனே, மக்களுக்கு இறைவன் என்று மதிக்கப் படுவான்.

முறைசெய்து காற்பாற்று மன்னவன் மக்கட்(கு)
இறையென்று வைக்கப் படும்.

**மனுநீதிச் சோழன், பொற்கைப் பாண்டியன், அசோகன் அக்பர், அகுஸ்தன்,** முதலியோர் இவ்வாறு முறைசெய் தாண்டு புகழ்பெற்றனர்.

## 92. செங்கோ லாட்சி செழிப்புற் றோங்கும்

வான்மழையைப் பார்த்து வாழும் உலகைப் போலவே, இத்தகைய செங்கோல் மன்னனை நோக்கிக் குடிகள் வாழ்வர்.

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

ஆதலால் மன்னன் குடிகளின் மனத்தையும், நலத்தையும் தழுவி, செங்கோல் செலுத்தவேண்டும். அத்தகைய மன்னன் அடியை விடாது உலகோர் பற்றி நிற்பர்; அஃதாவது அவன் ஆட்சியின்கீழ் விரும்பி வாழ்வர்

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு.

அந்தணர், நன்னூல்களை ஓதிப் பிறர்க்கும் கற்பித்து, அற நெறியைப் பரப்ப, மன்னவன் செங்கோலாட்சியே காரண மும் ஆதரவுமாகும். அறிவாற்றல் ஒழுக்கங்களில் வல்ல வரை மன்னன் காப்பாற்ற விட்டால், ஓதல், ஓதுவித்தல், ஞான—கர்ம வேள்விசெய்தல், செய்வித்தல், அறிவையும் தவக்கனலையும் ஈதல், தானதருமங்களை ஏற்றுத் தமது அறிவுக் கடமையைச் செய்தல் ஆகிய ஆறுதொழில் பூண்ட அந்தணர், வேதத்தையும், தரும சாத்திரங்களையும் மறந்து வயிற்றுப் பிழைப்புத் தேடுவர். அறிவும் அறமும் பரவா விடில், மக்கள் தீயவழிச்சென்று பாவஞ் செய்வர். அத ஞல் வான்பயன் குன்றிப் பசுமையற்று, உலகம் வரட்சி யடையும். அதனுல் பசுக்களுக்குப் பால் சுருங்கும். மன்னவன் முறைகோடினல், வான்மழையும் பருவமழை யும் பொய்க்கும். தரும சாஸ்திரங்களிலே சொல்லப் பட்ட இயல்பான அறவழியில் நின்று செங்கோல் செலுத் தும் மன்னவன் நாட்டில், பருவமழை பெய்தலும், நிலம் ஏராளமாக விளைதலும் பொருந்தியிருக்கும். வேலால் அன்று; கோடாத செங்கோலாலே மன்னன் வெற்றி பெறுவான்.

> வேலன்று வென்றி தருவது; மன்னவன்
> கோலதூஉங் கோடா தெனின்.

உலகையெல்லாம் அரசன் காப்பான். அரசனைக் காப்பது நேர்மையான செங்கோல். அரசன் ஒவ்வொன்றையும் நன் ருக உணர்ந்து ஆராயவேண்டும்; ஓரகங் கூடாது. குற் றங் கடிவதில் தாட்சிண்யம் கூடாது; நடுநிலை தவருது ஆள வேண்டும்; ஒரு காரியத்தை அமைச்சருடன் ஆராய்ந்தே நியாயம் அறிந்து செய்யவேண்டும். அஃதே ஆட்சி முறை. எவரும் எளிதில் பார்த்துப் பேசமுடியாதபடி தனியகத்தை

கொண்டு, காரியங்களை அறிவாளிகளுடன் நன்கு ஆராயா மல் செய்யக்கூடாது. தனது ஆட்சிமுறையைச் சரியாகச் செய்யாத மன்னவன் தனது நிலையினின்று இழிந்து, ஆங் கில நாட்டு **சார்லெஸ், ஜேம்ஸ்** மன்னர் வீழ்ச்சியடைந்தாற் போலத் தானே கெடுவான். அரசன் தனது குடிகளைப் புறத்தினின்று பகைவர் துன்புறுத்தாமல் காக்கவேண்டும். குடிகளிடம் உள்ள குற்றங்களை எந்த விதத்திலாயினும் போக்கவேண்டும். குற்றத்திற்காகக் குடிகளைத் தண்டித் தல் அரசனுக்கு வடுவாகாது. அஃது அவன் கடமை யாகும்.

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்,
வடுவன்று வேந்தன் றொழில்.

தீ, களவு, விபசாரம், கொள்ளை வஞ்சனை, கொலைகளால் மக்களுக்குக் கொடுமைசெய்யும் பாவிகளை மன்னன் ஒழிக்க வேண்டும். அது, களை களைந்து நெற்பயிரைக் காத்ததற் குச் சமானமாகும்.

## 93. கொடுங்கோ லாட்சி கெடுங்கோ லாட்சி

கொடுங்கோல் செலுத்திக் குடிகளை அச்சுறுத்தி, **துரியோதனன், நீரோ, கம்சன்** போன்று வாழும் அரக்கரின் 'சைத்தான் ராஜ்யம்' தனது கொடுமையாலே குமையும். மன்னருக்கு, அரசும் புகழும் நிலைபெறுதல் எதனால்? செங் கோலால். அறநெறிச் செங்கோலில்லாமல் கொடுமை செய்தால், மன்னரின் புகழும் ஒளியும் மன்னாது, நிலை பெறாது, மங்கி யணைந்துபோகும்.

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை; யஃதின்றேல்
மன்னாவா மன்னர்க் கொளி.

கடுவரிகளாலும், அடிமைச் சட்டங்களாலும், அடக்கு முறைகளாலும், அநீதியான தண்டனைகளாலும், வீண் போர்களாலும் குடிகளை அலைத்துச் சீரழித்து, அறமில்லாத செயல்களைச் செய்யும் மன்னன் கொலையாளியைவிடக் கொடியன். அவன், தனது கொடுங்கோலால் குடிகளைச் சித்திரவதை செய்கிறான். கொடுங்கோல் பிடித்து, "போடு வரி; செய் அதை" என்று குடிகளைக் கொடுமையாக அதிகாரஞ்செய்து கேட்போன்", "கொடு உள்ளவெல்லாம்; இன்றேல் குத்துவேன்" என்று வேல்காட்டி நின்று பயமுறுத்தும் வழிப்பறித் திருடனுக்கே இணையாவான்.

> வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
> கோலொடு நின்றா னிரவு.

இவ்வாறு முறைதவறிக் கடுமையாக வரிகளை வாங்கும் கொடுங்கோலாட்சியின் கீழ், செல்வமுயிருப்பது வறுமையைக் காட்டிலும் துன்பமாகும். அரசன் சும்மா பணம் கேட்பான்; தராவிட்டால் கொடுமை செய்வான். இந்த வரிக் கொடுமையாலேதான் பெரும்பாலும் குடிகளின் பகை முற்றி, அரசன் அழிவது. இங்கிலாந்தில் **சார்லஸ், ஜேம்ஸ்,** ரஷ்யாவில் **ஜார்**, பிரான்ஸில் **லூயி** ஆட்சி உதாரணம். 'நமது ஆட்சி முறைகளில் இன்ன குறைகள் உள்ளன; அவற்றை இந்த வழியில் தீர்த்துக் குடிகளை மகிழ்விக்கவேண்டும்' என்று மன்னன் நாடோறும் ஆராயவேண்டும். பெரியோர்களையும் மந்திரிகளையும் நாடி, அவர்கள் சொல்லும் நன்முறை தழுவி நலஞ்செய்யவேண்டும். அப்படியின்றி, தான்றோன்றித்தனமாக **ஜார்** போலக் கடுவரியும் கொடுவினையுங் கொண்டு ஆண்டால், அத்தகைய கொடுங்கோல் மன்னன் நாளுக்குநாள் நாட்டையிழந்து கெடுவான். பதினாறும் **லூயி** இதற்கு உதாரணம். அவ்

னது கொடுமையால் பிரெஞ்சுக் குடிகள் சுதந்திர வெறி கொண்டு புரட்சிசெய்து, அரசனைத் தூக்கிட்டுக் குடியரசு நாட்டினர். தனது கொடுமையின் விளைவைக் கருதாது, முறைதப்பி, அதர்மம் செய்யும் அரசன் தனது செல்வத்தை யிழப்பான்; குடிகளிடம் செல்வாக்கை யிழப்பான்; அரசை யிழப்பான். "ஐயோ கொடுங்கோல் தாங்க முடியவில்லையே! தெய்வமே காப்பாற்று" என்று அல்லற்பட்டுத் தாங்கமுடியாது, ஏழை எளியவர் அழுத கண்ணீரே, மன்னன் செல்வத்தைத் தேய்க்கும் வாட்படையாகும்.

அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

மழைத்துளியில்லா நிலம் எப்படித் தழைக்காதோ, அப்படியே அன்பில்லாத கொடியன்கீழ் வாழும் உயிர்களும் தழைக்கமாட்டா.

## 94. நடுக்குங் கொடுங்கோல் நடுக்குற் றழியும்

வெருவந்த செய்யக்கூடாது. அஃதாவது குடிகளைக் கொடுமையான தண்டனைகளால் பயமுறுத்தி நடுக்கக் கூடாது. குற்றவாளிகளை நன்கு விசாரிக்கவேண்டும். தகுந்த தண்டனை விதிக்கலாம். ஆனால் தண்டனை எப்படியிருக்கவேண்டும்? குற்றவாளி மீண்டும் குற்றம் செய்யாது திருந்தும்படி யிருக்கவேண்டும். திருத்தச்சாலையே (Reformatory) நல்லது. ஒருவன் வறுமைக்கொடுமையால் திருடினால், அவனுக்கு விலங்கு போடுவதைவிடத் தொழில் கற்பிப்பது நலம். தண்டனையென்னும் கோலைக் கடுமையாக ஓச்சுவதுபோலக் காட்டி, லேசாகத் தண்டித்து, குற்றவாளியைத் திருத்தப் பார்க்கவேண்டும். அஃதே நீண்ட செல்வமும் செல்வாக்கும் நீங்காது அரசியல் நடக்கும்

முறை. அப்படியின்றி, எடுத்ததற்கெல்லாம் கடுமையாகத் தண்டிக்கும் கொடுங்கோலன் அதி சீக்கிரம் அழிவ துறுதி. "இந்த அரசன் இரக்கமில்லாதவன், கொடியன்" என்று குடிகள் இன்னல்களைச் சொல்லி வருந்தினால், அரசன் ஆயுள் சீக்கிரம் அழிந்துபோகும். எளிதில் காணமுடியாத வனும், கடுமுகத்தனும் இருப்பவன் பெற்ற பெருஞ் செல்வம் பேய்காக்கும் புதையல் போன்றது. அது யாருக் கும் பயனாகாது. கடுஞ்சொல்லனாகி, ஏழை யெளியவரிடம் கருணையற்ற வன்கண்ணன், எவ்வளவு நெடுஞ்செல்வம் வாய்ந்தவனானாலும், எல்லாம் சீக்கிரம் அழிந்துபோகும்.

> கடுஞ்சொல்லன் கண்ணில னாயி, னெடுஞ்செல்வ
> நீடின்றி யாங்கே கெடும்.

கடுமொழியும் ,கைக்குமிஞ்சிய கொடியதண்டனையும், வேந் தனுடைய போர்வலியை அரம்போலத் தேய்த்துவிடும். கடுஞ்சொல்லால் மன்னன் படையும் சேவகருமே பகை யாவர். இரக்கமில்லாத கொடுமையால் குடிகள் பகைப்பர்

> கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
> அடுமுரண் டேய்க்கு மரம்.

மந்திரிகளுடன் கலந்து ஆராய்ந்து நடக்கவேண்டும். அப் படியின்றி, சினங்கொண்டு ஒரு காரியத்தைச் செய்து, அதில் தோல்வியுற்றால், அமைச்சரையும் சேவகரையும் சீறி விழும் மன்னன் திருவும் செல்வமும் சிறுத்துத் தேயும். நாட்டைத் தகுந்தமுறையில் பாதுகாக்கவேண்டும். அரண், படை, குடிகளின் அன்பு ஆகிய இவையே மன்னனது பாது காப்பு. பாதுகாப்பின்றித் தூங்கினால், பகைவர் எளிதாகப் படையெடுத்துப் போரிடுவர். அப்போது அரசன் அஞ்சிப் போர்த்திறனின்றி விரைவில் தோற்றழிவான். கொடுங் கோலன் நல்லறிவாளரை விரும்பான். அவர் புத்தி

சொன்னால் இராவணனுக்கு விபீஷணன் சொன்ன புத்தி போலாகும். தான் சொல்வதற்கெல்லாம் 'ஆமாம்சாமி' போட்டுத் தலையாட்டி, முகத்துதி பேசும் கல்விகேள்வி யற்ற அறிவிலி வஞ்சகரையே அவன் நண்பரெனச் சேர்த்துக் கொள்வான். அத்தகைய அறிவிலிகளைக் கூடிய கொடுங்கோலே உலகத்திற்குச் சுமக்க முடியாத பாரமாகும்.

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

முற்பகுதிகளில் சொல்லியுள்ள கல்வி, கேள்வி, ஒழுக்கம், நட்பு, கண்ணோட்டம் முதலியன மன்னருக்கு இன்றியமையாதனவாம்.

## 95. பயனறிந் துரைப்போன் பண்புடை யமைச்சன்

அரசனுக்கு நன்மதி போன்றவன் அமைச்சன். புகழும், வளமும், பொதுநலமும், வெற்றியும் எய்தும் அரிய காரியங்களை மந்திரி அரசனுக்குத் தெரிவிப்பான்; அத்தகைய காரிய வெற்றிக்குத்தக்க கருவி, காலம், வினைசெய்யும் வகை அனைத்தையும் ஆராய்ந்து உறுதியாகச் சொல்லுவான். அவனே நல்லமைச்சனவன். இத்துடன் கல்வியறிவு, காரியவுறுதி, ஆழ்ந்த முயற்சி, குடிகளின் க்ஷேமத்தைப் பாதுகாத்தல் ஆகிய மாண்புள்ளவனே அமைச்சன். மந்திரிக்குத் தந்திரம் வேண்டும். பகைவருக்குப் பலமாக இருப்பவரைப் பிரித்தல்; தமக்கு அனுகூலமானவர்களைப் பொருளாலும் இன்சொல்லாலும் பேணிக் கொள்ளல்; பயனுள்ளவர்கள் மனஸ்தாபத்தினால் பிரிந்துபோனால், அவர்களை மறுபடியும் சமாதானஞ் செய்து தம்மிடம் பொருந்தச்செய்தல்; இம்மூன்றும் வல்லவனே திறமையுள்ள மந்திரியாவன்.

பிரித்தலும், பேணிக் கொளலும், பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

இன்னகாரியம் ஏற்றது என்று தெரிந்துகொண்டு, அது கைகூடும் வகைதேர்ந்து, 'உறுதியாக, ஒருதலையாக, இன்னது செய்க' என்று உறுத்த வல்லவனே அமைச்சன்.

தெரிதலும், தேர்ந்து செயலும், ஒருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

இன்னது அறம், தருமம், நியாயம் என்று அறிந்து, அதை நிறைந்த சொல்வன்மையுடன் எடுத்துறுத்தி, எப்போதும் காரியங்கள் பலிக்கவேண்டிய திறனறிவோனே, ஆலோசனைக்கேற்ற மந்திரி. இயல்பான மதிநுட்பத்துடன் நூலறிவும் மிகுந்த மந்திரிகளுக்குமுன் எந்தப் பிரச்சினையும் அதிநுட்பமன்று. அவர்கள் தமது நுண்ணறிவால் எந்தக் காரிய வெற்றிற்கும் வழி சொல்வர். கற்றதனுல் உண்டான செயற்கையறிவுடன், உலகியற்கையும் நன்கறிந்து காரியங்களைச் செய்யவேண்டும்.

செயற்கை யறிந்தக் கடைத்து, முலகத்
தியற்கை யறிந்து செயல்.

அரசன் அறிவிலியாயிருக்கலாம்; சொன்ன அறிவையும் கொள்ளாமல் காரியத்தைக் கெடுக்கலாம். எனினும், அமைச்சன் கைவிடாது, பக்கத்திருந்து, 'அது சரியன்று; நியாயம் இப்படி' என்று விடாது எடுத்துக் கூறவேண்டியது கடமையாகும். அப்படிச் சொல்லாது பக்கத்திலிருந்தே அரசனுக்குத் தீமை நினைக்கும் மந்திரி எழுபது கோடிப் பகைவரைவிட அபாயமானவன். அத்தகைய மந்திரி அரசனைப் பகைவருக்குக் காட்டிக் கொடுப்பான். அவனை ஒழிக்கவேண்டும்.

> பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோர்
> எழுபது கோடி யுறும்.

திறமையற்ற மந்திரிகள், ஒரு காரியத்தை முறையாக ஆராய்ந்தும், இடையில் சோர்ந்து, காரியத்தை முடிக்காமல் அரை குறையாக விடுவர். கல்வி கேள்வி, உலகியல் அனுபவம், சோராத சொல்வன்மை, அஞ்சாவுறுதி, தரும வுணர்ச்சி, சூட்சித்திறமை, அரசரிடம் உள்ளன்பு, பொருள், இடம், காலம், கருவி, செய்வகை தேர்தல், விடாமுயற்சி, வெற்றித் திறன், இவை அனைத்தும் அமைந்தவனே அமைச்சன்.

## 96. அன்பறி வின்சொல் அணிவது தூது.

வேற்றரசர் குறிப்பைத் தன்னரசனுக்கும், தன்னரசன் மனத்தை வேற்றரசருக்கும் வினயமாகத் தெரிவித்து, அரசர் பணிபுரிவோன் தூதன். அன்பு, நற்குடிப் பிறப்பு, அரசர் விரும்பும் வசீகரமான தன்மை—இவை தூதன் பண்பு. அன்பு, அறிவு, நன்கு ஆராய்ந்து சொல்லுந் திறமை, இம்மூன்றும் தூதுகொண்டு செல்வோருக்கு இன்றியமையாதனவாகும்.

> அன்பறி வாராய்ந்த சொல்வன்மை, தூதுரைப்பார்க்
> கின்றி யமையாத மூன்று.

வேல்மன்னரிடையே, தன்து அரசருக்கு வெற்றிதரும் காரியமாகப் பேசும் தூதன், அறநூல்களையும், அரசியல் நூல்களையும் நன்கு கற்றறிந்து, பண்டிதரிற் பண்டிதனாக இருக்கவேண்டும். அறிவு, ஆராய்ந்த கல்வி, பார்ப்பவர் மதிக்கத்தக்க கம்பீரமான தோற்றம், இவை அமைந்த ஆற்றலுடையவனே தூதுகொண்டு செல்லவேண்டும். தூதன் எப்படிப் பேசவேண்டும்? வழவழாக் கூடாது; முன்பே

பேசவேண்டியதை உள்ளே ஆராய்ந்து, சுருக்கமாகத் தொகுத்துச் சொல்லவேண்டும்; நயமில்லாத வார்த்தைகளை நீக்கவேண்டும்; கேட்போர் மகிழ்ந்து கவனிக்கும்படி இனிமையாகப் பேசவேண்டும். இவற்றாலேதான் தூதன் அரசனுக்கு நன்மை செய்யக்கூடும்.

> தொகச் சொல்லித் தூவாத நீக்கி, நகச்சொல்லி
> நன்றி பயப்பதாந் தூது.

தூதன் தனது கடமை யறியவேண்டும். தக்க சமயம் பார்த்து, இடமறிந்து, பயனை ஆராய்ந்து, கொண்டுவந்த செய்தியைச் சொல்லவேண்டும். தான் எடுத்துக்கொண்ட விஷயத்தை நன்கு கற்று, எதிர் மன்னர் மனத்திற் பதியும்படி சொல்லி, அவர்கள் கோபவிழிகளாற் பார்த்தாலும், கண்ணைக் கண்டு அஞ்சாது, சமயத்திற்குத் தக்கதை அறிந்து செய்வான் உண்மைத் தூதனுவன். வஞ்சம், இலஞ்சம், மாயச் சூட்சிகளால் பிறர் வசப்பட்டுக் காரியத்தை யிழக்காது மனத்தூய்மையுடன் இருக்கவேண்டும். எதிர்ப்பக்கத்து மந்திரிகளைத் துணைக்கொள்ளும் திறமை, தனது மன்னன் முடிபைத் துணிந்து கூறும் திண்மை, இவை உண்மையாகத் தனது அரசன் ஏவியவழியில் தூதுபேசுவோன் பண்பாகும். வாய்தவறியும் வடுமாற்றம், பழிகுற்றம், சிறுமை, வரக்கூடிய சொற்களைச்சொல்லாது, மனமும் நாவும் அடங்கி, உறுதிபெற்ற திறமையுள்ளவனே அரசன் விடும் செய்தியைப் பிறவேந்தர்க்குத் தக்கபடி சொல்லவல்ல தூதனுவான். அப்படிப் பேசுவது தனது உயிருக்கே இறுதி பயப்பதானாலும் சரி, அவன் பயப்பட மாட்டான். தனது இறைவனுக்கு நன்மையானதைத் துணிந்து சொல்லி, உறுதியான பயனைச் செய்வோனே உண்மைத் தூதன்.

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற் (கு)
உறுதி பயப்பதாந் தூது.

## 97. விருப்ப மறிந்து வேந்தரோ டிணங்குக

மன்னருடன் பழகும் அமைச்சரும் நண்பரும் அவசியம் கவனிக்கவேண்டிய சில விதிகள் உள்ளன: குளிர்காலத்தில் தீக்காய்கிறோம். தீயை மிகவும் நெருங்கித் தொடுவதில்லை. அதனின்று தூர விலகிப்போவதுமில்லை. அது போல, மன்னருடன் மிகவும் நெருங்காமலும்,விலகாமலும், மரியாதையான தூரத்தில் இருந்து பழகவேண்டும். ஏனெனில், மன்னர் மனம் மாறுபடும். அது கடல் யாத்திரை போன்றது. அதில் அபாயமும் உண்டு.

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

அரசன் ஆடம்பரமான சட்டைகளணிந்து, பல்லக்கில் போனால், தானும் அப்படிப்போக விரும்பக்கூடாது. தனது நிலைக்கேற்றபடி நடந்துகொள்ளவேண்டும். அதுவே மன்னர் சலுகையைப் பெற்று, ஆக்கம் பெருகும் வழி. 'நானும் அரசனைப்போல உண்பேன், உடுப்பேன்' என்றால், 'இவன் நமக்குச் சமமாகத் தன்னை நினைத்து அகங்கரிக்கிறான்' என்று மன்னன் வெறுக்க நேரிடும்.

மன்னர் விழைப விழையாமை, மன்னரால்
மன்னிய வாக்கந் தரும்.

அரிய பிழைகள் வராது கவனமாக நடக்கவேண்டும். ஒரு தரம் சந்தேகத்திற்கு இடங்கொடுத்தால், மன்னன் மனத்தைத் தேற்றுதல் யாருக்கும் முடியாது. மேலும், பின்னிருந்து ஆட்கள் தூண்டிவிடுவர். சந்தேகத்திற்கு இட

மில்லாது, கவனமாகவும் குற்றமில்லாமலும் நடந்து கொள்ள வேண்டும். நிறைந்த பெரியார் முன்னிலையில், பிற ருடன் காதுவைத்து இரகசியம் பேசக்கூடாது; மற்றொரு வர் முகத்தை நோக்கி நகைக்கக்கூடாது; ஏதோ பரிகாசம் செய்வதாகவாவது, சூட்சி செய்வதாகவாவது அவர் நினைப்பர். பிறர் அவ்வாறு தூண்டி விடவும் இடமாகும். பெரிய மன்னர் சபையில் பலவகை மாந்தர் கூடியிருப்பர். அரசனுடன் நமக்கு என்ன கடமையோ அதைமட்டுமே கவனிக்கவேண்டும்.

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து.

மற்றொன்று; அரசன் பிறருடன் இரகசியமாகச் செவிச் சொல் பேசினால் அதை உற்றுக் கேட்கக் கூடாது. 'என்ன பேசினீர்?' என்று தொடர்ந்து சென்று கேட்கவுங் கூடாது. அரசனாக மனத்தில் இருக்கும் அந்த இரகசியப் பொருளை வெளிவிட்டால்தான், 'ஆகா, அப்படியா' என்று செவி கொடுத்துக் கேட்கவேண்டுவது கடமை. மன்னனுடன் எப் படிப் பேசுவது? மன்னன் மனநிலை எப்படி என்று முகக் குறிப்பால் அறிக. சமயம் எப்படிப் பட்டதென்று உணர்க. வேண்டிவந்த காரியத்தை, அரசன் விரும்பிக் கேட்குமாறு நயமாகச் சொல்லுக. சுருங்கப்பேசி விளங்கவைக்கவேண் டும். அரசன் வெறுப்படையும்படி வழவழவென்று கதை யளக்கக்கூடாது. அரசன் மனமொப்பி விரும்பும் பெரும் பயனுள்ளதைச் சொல்லுக. காரியமில்லாததை, அனாவசிய மாகப் பேசவேண்டா. அதைக் கேட்டாலும் சொல்லா திருக்கவேண்டும்.

வேட்பன சொல்லி, வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

நம்மைவிட வயதில் இளையவன், அல்லது நமது இனமுறை, உறவு என்று அவமதிக்காது, அரசனின் ஒளி, புகழ், மேன்மையறிந்து மரியாதையுடன் நடக்கவேண்டும். 'மன்னர் சலுகை கிடைத்தது, அன்புடன் விரும்பிக் கொள்ளப் பட்டோம்'என்றெண்ணி, அவர் ஒப்புக்கொள்ளாத காரியங்களைச் செய்யமாட்டார்கள்—யார்? துளக்கமில்லாத, அசைவில்லாத, உறுதியான அறிவுடையவர். 'நீண்டநாள் பழகியவர்தானே' என்றெண்ணிப் பண்பற்ற காரியங்களைச் செய்யும் நட்புரிமை கேட்டையே தரும். எட்டாவது **ஹென்ரி** யுடன் (Henry VIII) ஒட்டுறவாயிருந்த **உல்ஸிக்கு** (Wolsey) ஆன கதிதான் அவ்வாறு எண்ணுவோர்க்கும் உண்டாகும்.

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

## 98. உலக நடப்பெல்லாம் ஒற்றரால் அறிக

ஒற்றனும், மன்னறம் விளக்கும் தருமசாத்திரமும் அரசனுக்கு இரண்டு கண்போலும். ஒற்றன் வெகுதொலை நடக்கும் நிகழ்ச்சிகளைக் கூறும் கண்போல்வான். 'இன்னது செய்வது நலம், நியாயம்' என்று அருகே யிருந்து விளக்கும் கண்போன்றது தருமசாத்திரம். எல்லாருக்கும் நிகழும் எல்லாவற்றையும் உடனுடன், ஒற்றரால் விரைவில் அறிதல் மன்னனுக்கு நித்தியத் தொழிலாகும்.

எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

நமது தமிழ் மன்னர் தாமே உருமாறிச் சென்றும் குடிகளின் நிறை குறைகளைக் கண்டு நீதி செலுத்தினர். **பொற்கைப் பாண்டியன்** உதாரணத்தைக் காண்க. குடிகள்,

பகைமன்னர், நண்பர், சேவகர் முதலியோர் நிலையும், கருத்தும், செயலும் பேச்சும் ஒற்றரால் அறியவேண்டும். இவ்வாறு எல்லா நிகழ்ச்சிகளையும் ஒற்றரால் அறிந்து, அவற்றின் பொருளறிந்து, தக்கது செய்யாத மன்னன் ஆட்சி வெற்றிபெறாது. யார்யாரை ஒற்றனால் ஆராயவேண்டும்? தனது காரியத்தைச் செய்யும் அரசாங்க ஊழியர், நண்பர், சுற்றம், பகைவர் முதலிய அனைவரையும் சோதித்தறியவேண்டும். ஒற்றிற்கு ஏற்றவன் யார்? கண்காணிக்கப்படும் ஆட்கள் சந்தேகப்படாத உருவொடு சென்று, அவர்கள் சந்தேகித்துப் பார்த்தாலும் அஞ்சாது, தனது இரகசியத்தை எங்கும் யாரிடமும், ஒருகாலும் வெளியிடாது, நிலைமையறிந்துரைப்பவனே சரியான ஒற்றனாவான். ஆள் தெரியாது, ஆளை அறிதலே ஒற்றின் இலக்கணம். ஒற்றர், துறவிகள், விரதிகள் வேடமும் கொண்டு, சந்தேகத்திற்கு இடந்தராது சென்று, ஆட்களை நன்றாக முற்றும் ஆராய்ந்து, நிகழ்ச்சி தெரிவிக்கவேண்டும். பகைவர் என்ன செய்தாலும் சரி; சோர்வடையக் கூடாது. எந்தத் தந்திரம் செய்தும், ஆட்களின் உட்கருத்தை யறிந்து அரசனுக்குத் தெரிவிக்கவேண்டும். மறைவான செயல்களை உள்ளாட்களைக் கொண்டு கேட்டறிந்து, ஐயப்பாடின்றிச் செய்திகளை அறிவிக்க வல்லவனே ஒற்றிற்கேற்றவன். ஆனால், ஒற்றர் சொல்வதையும் அப்படியே நம்பிவிடக்கூடாது. இன்னொரு ஒற்றனைவிட்டு மற்றொருமுறை நன்கு அறிந்தே முடிவாக ஒன்றைத் தீர்மானிக்கவேண்டும்.

> ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
> ஒற்றினால் ஒற்றிக் கொளல்.

ஆனால் ஒரு ஒற்றனை, மற்றவன் அறியாதபடி ஒற்றுளவேண்டும். இவ்வாறு மூன்று ஒற்றர் சொல்வது ஒத்திருந்தால்

அந்த அறிக்கை உண்மையெனக் கொள்ளலாம். நல்ல செய்தி கொணர்ந்த ஒற்றனுக்குச் சிறப்பாகப் பரிசு தருவதானால், எல்லாரும் அறியும்படி தரக்கூடாது; தனித்தே சிறப்புச் செய்யவேண்டும். இன்றேல், இரகசியத்தை மன்னன் தானே வெளியிட்டதுபோலாகும்.

சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க; செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

இனி, அரசன் தனது அங்கத்தினருடன் எப்படி வினைத்திறன் ஆளுவானெனக் காண்போம்.

## நூல் 12

### வினைத்திறன்

---

### 99. பொல்வினை நீக்கி நல்வினை செய்க

இயற்கை ஒவ்வொருவரையும் செயலுக்குத் தூண்டு கிறது. சிந்தை யடக்கி, தம்முள்ளே தாமான யோகியரே முற்றும் வினையற்றிருக்க முடியும். மற்றவர் தீமை விலக்கி நல்வினை செய்க! நல்ல துணையிருந்தால் ஆக்கமுண்டாகும். நல்வினையிருந்தால் நாம் வேண்டியதெல்லாம் எய்தும். நல் வினையால் பொல்ல தொழியும்; வாழ்வு மாசறும்; புகழுண் டாகும்; கடவுள் அருள் உண்டாகும். நிலையான நன்மை யும் புகழும் இல்லாத காரியத்தை விலக்கவேண்டும். எப் போதும் இதைச் சிந்தித்தே ஒரு காரியம் தொடங்க வேண்டும்.

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்று பயவா வினை.

மேன்மேலும் மேலோங்க வேண்டுவோர், தமது புக ழொளியை மழுக்கும் வினையை ஒழிக்கவேண்டும். அசை யாது உறுதிபெற்ற அறிவாளிகள், மெய்க்காட்சியாளர், எத்தகைய இடுக்கண் வந்தாலும் இழிவினை செய்யார். 'முன்னே இன்னார் இதைச்செய்து அவமானப்பட்டார்' என்று கண்டு, தாம் அதனின்றும் விலகுவர்.

இடுக்கட் படினும், இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

'ஆகா! எப்படிப்பட்ட காரியம் செய்தோம், ஏன் செய் தோம்?' என்று பின்னால் இரங்கி வருந்தும்படியான வினை களைச் செய்யற்க. அப்படித் தவறுகச் செய்தால் அக்காரி யத்திற்காக இரங்கி, மற்றும் அத்தகைய காரியம் செய்யா திருத்தல் நல்லது. ஒருதரம் செய்து வருந்திய பிழையை மறுமுறையும் செய்யாது கவனமாயிருக்கவேண்டும்.

எற்றென் றிரங்குவ செய்யற்க; செய்வானேல்,
மற்றன்ன செய்யாமை நன்று.

பெற்றதாய் பசியால் வருந்தக் கண்டாலும் சரி, அப்பசி தீர்க்க, பெரியார்கள், 'பாவம் தீமை, அநியாயம்' என்று பழிக்கும் வினைகளைச் செய்யற்க.

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க,
சான்றோர் பழிக்கும் வினை.

ஏனெனில், பழி பாவங்களைச் செய்து பெற்ற செல்வத்தைக் காட்டிலும், குற்றமற்ற சான்றோர் வருந்தும் கொடிய வறுமையே சிறந்தது. **துரியோதனச்** செல்வத்திலும் **விதுரன்** எளிமை சிறந்தது. அறநூல்கள் கண்டிக்கும் தீவினையை விலக்காது, செய்து முடித்தாலும், அதனால் பெருந்துன் பமே வரும். சீதையைத் தூக்கிச்சென்ற இராவணன் குலத்தோடு அழிந்தான். சகுனி சூட்சி முடிந்தாலும், பாரதப்போர் மூண்டு, கௌரவர் கிளையறுந்தது. பிறரை அழவைத்துக் கொள்ளையடித்த செல்வமெல்லாம், உடைய வன் தலையில் கையைவைத்து அழும்படி, அழிந்துபோகும். அழக்கொண்ட எல்லாம் அழப்போம். **பாஞ்சாலி** கண்ணீர் விட்டழ, துரியோதனன் செய்த அநியாயங்களெல்லாம் முடிவில் அவன் குலத்தை வேரோடு அழித்தன. நல்ல வழியில் வந்தபொருள், இடையே எதிர்பாராத காரணத்

தால் போனாலும், பின்னால் ஒருகாலம் வட்டியும் முதலு மாக வந்துசேரும்; நன்மைதரும். **ஏலேலசிங்கம்** கடலில் போட்ட தங்கம் திரும்பித் தனக்கே வந்தது. நாடு நகரைத் தோற்று மயானங் காக்கும்படி நேரிட்டும், **அரிச்சந்திரன்** சத்திய பலத்தால் எதிரியை இணக்கி, இழந்த அரசுடன், உலகுள்ள மட்டும் அழியாப் புகழும் பெற்றான். வஞ்சனை யால், தீமையால் பொருள்செய்து உலகை ஏமாற்றப் பார்த் தல் முடியாது; அது சூளையிடாத ஈரக்களிமண்பானையில் தண்ணீர் வைத்ததுபோல் ஒழுகிப்போகும்.

## 100. மனத்திட்பத்தால், வினைத்திட்ப முறும்

நல்ல காரியத்தில் மனவுறுதி கொள்ளவேண்டும். மனமே மனிதன். மனத் திண்மையே செயல் வெற்றி. மனம் படைத்தவர் வினைவலி பெற்று வெற்றியடைவர். மனம் திண்மையுற்றார் எண்ணியது எண்ணியவாறே பலிக் கும். **பூசலார் நாயனார்** மனவுறுதியால் உள்ளத்தில் கட்டிய கோயிலில், கடவுள் முதலில் எழுந்தருளினார். பெரிய மேதாவிகளெல்லாம் காரியசித்தி பெறுவது மனத்திண்மை யால். பத்துப்பேர் மனவுறுதியுடன் ஒருங்கேகூடி எண் ணிய காரியம் உறுதியாகப் பலிக்கும். எண்ணத்திற்கு அபார சக்தியுண்டு.

> எண்ணிய வெண்ணியாங் கெய்துப; எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின்.

குற்றமான செய்கை விலக்குதல்; ஒரு நல்ல காரியத்தைக் கைக்கொண்டபின் எது வந்தாலும் அதனைக் கைவிடாது செய்துமுடித்தல்—இந்த இரண்டும் ஆராய்ச்சியுள்ள அறி வாளிகள் கொள்கையாகும். காரிய வெற்றிக்கு ஒரு வழி யுள்ளது; முடிவாகக் கைகூடுமட்டும் நம் கருத்தை வெளி

விடக்கூடாது. மனம் நாவடக்கிக் காரியக் கருத்துடன் னிருந்து முடிவில் வெற்றியால் வெளிவரச் செய்யவேண்டும். இடையில் வெளிப்படுத்தினல், பகைவரும் பொருமைக் காரரும் காரியத்தைக் கெடுப்பர். நீக்கமுடியாத துன்பங் கள் உண்டாகும். இரகசியம் அவசியம். அடங்கி முயல் வதே ஆண்மை. கலங்காது, நல்லதென்று கண்டவினையை இடையில் மனஞ் சலியாது, சோம்பித் தூங்காது, சுறுசுறுப் பாகச் செய்யவேண்டும்.

> கலங்காது, கண்ட வினைக்கட் டுளங்காது
> தூக்கங் கடிந்து செயல்.

'இப்படிச் செய்யவேண்டும், அப்படிச் செய்யவேண்டும்' என்று சொல்லுதல் எல்லாருக்கும் எளிதுதான். சொன்ன படி செய்து காட்டுவதுதான் அருமை. செப்புவ தெளிது; செய்வ தரிது.

> சொல்லுதல் யார்க்கு மெளிய; வரியவாஞ்
> சொல்லிய வண்ணஞ் செயல்.

பெரிய செயல்களை மன வீறுடன், உறுதியுடன் வென்று புகழ்பெற்ற பெரியாரை அரசன் தன்னிடம் ஈர்த்துக் கொள்ளவேண்டும். அவர்களது வினைத் திட்பத்தால் அரசியலுக்கு நல்ல மதிப்புக் கிடைக்கும். அத்தகைய அறி வாளிகள், உருளும் பெருந்தேர் போன்ற அரசியலுக்கு அச்சாணிபோன்று உதவக் கூடியவர். கேவலம் வெளித் தோற்றத்தில் குட்டை, ஒல்லி யென்று அவர்களைப் பார் த்து எள்ளாதிருக்கவேண்டும். சிறியோரெல்லாம் சிறிய ரல்லர். உருவிற் சிறிய **அகத்தியர்** எவ்வளவு அற்புதமான காரியங்களைச் செய்தார்! உடலின் அளவும், நிறமும் அல்ல; உள்ளத்தின் தூய்மையும், திண்மையும், காரிய வீறுமே மனிதனைக் காட்டும். உடல், செல்வம், ஆள்,

படைகளில் எவ்வளவு வலுத்திருந்தாலும், காரியவுறுதி யில்லாவிட்டால் உலகம் அவரை மதியாது. ஆதலால் பலருக்கும் இன்பந்தரும் பொதுநலப்பணியைத் துணிந்து மனவுறுதியுடன் செய்க. எவ்வளவு துன்பப்பட நேர்தா லும் மனந்தளரவேண்டா. **தென்னாப்பிரிக்காவில்** எவ் வளவு துயர் பொறுத்து **மகாத்மா** நலம் புரிந்தார்!

> துன்ப முறவரினுஞ் செய்க, துணிவாற்றி
> யின்பம் பயக்கும் வினை.

## 101. துணிந்த வினையைத் தூங்காதியற்றுக

நன்கு ஆலோசித்து, 'சரி இதைச் செய்வது' என்று துணிந்தபின், காலத்தாழ்ச்சி யின்றி அவ்வினையைத் தொடர்ந்து செய்யவேண்டும். நிதானமாக ஆலோசித்துச் செய்யவேண்டியதைத் தாமதித்தே செய்யலாம்; சுறுசுறுப் பாக நடக்கவேண்டிய காரியத்தைத் தூங்காது, சுறுசுறுப் பாகவே செய்யவேண்டும்.

> தூங்குக தூங்கிச் செயற்பால; தூங்கற்க
> தூங்காது செய்யும் வினை.

தடையில்லாமல் எளிதாக, முடிந்த தருவாயிலெல்லாம் காரியத்தைக் கடியதாகச் செய்தல் நல்லது. அப்படி முடி யாது சந்தர்ப்பம் முட்டுக்கட்டைபோட்டால், காரியத்தைக் கொண்டுசெலுத்தும் வழியை ஆலோசித்து, முன்பின் பார்த்துச் செய்யவும். கொண்ட வினையை முடிக்காது பாக்கி வைக்கக்கூடாது; பொருதிய பகைவரையும் முறி யடிக்காமல் விட்டுவிடக்கூடாது. வினை, பகை இரண்டும் மிச்சப்பட்டால், தீயை அணைக்காது மீதிவைத்ததுபோலத் தான். அத்தீ மீண்டும் கனன்று வீட்டைப் பற்றும். அது போல, முடிக்காது இடையில் கைவிட்ட வினை புகழை

யெரிக்கும். பகை மீண்டும் பலம்பெருகிப் போர்செய்து, ஊரை யழிக்கும். ஓடிப்போன **மாரீசன்** மீண்டும் வந்து, **இராவணன்** சீதையைத் தூக்கிச்செல்லக் காரணமானான்.

> வினை, பகை, யென்றிரண்டின் எச்சம், நினையுங்கால்
> தீயெச்சம் போலத் தெறும்.

ஐந்து விஷயங்களை ஐயமறத் தெளிந்து ஒரு காரியத்தைச் செய்க. அவையாவன :—1. அக்காரியம் நிறைவேற வேண்டிய பொருள் வளமை. 2. அதற்கேற்ற கருவி, சாதனம். 3. அதற்கேற்ற காலம். 4. கொண்ட வினையின் இயல்பு. 5. அதைத் தொடங்கி முடிக்கத்தக்க இடம்.

> பொருள், கருவி, காலம், வினையிடனொ டைந்தும்
> இருடீர வெண்ணிச் செயல்.

மற்றும் சிந்திக்க வேண்டியன :—அக்காரிய முடிவிற்கு எவ்வளவு முயற்சியும் உழைப்பும் வேண்டும், அதனிடையே வரும் இடையூறுகள் என்ன, எத்தகையன, இவ்வளவு சிரமப்பட்டு வருந்தியும் காரியம் நிறைவேறியபின் அதனால் வரும் பயனென்ன, ஆதாயமென்ன என்று சீர்தூக்கிப் பார்த்துப் பயனுள்ளதைச் செய்யவேண்டும். அந்தக் காரியத்தில் முன்னே அனுபவமாகி, அதன் விஷயங்களை நன்கு அறிந்தவனுடைய கருத்தையும் கேட்டறிந்து கொள்ள வேண்டும். இஃதே ஒரு காரியத்தை ஆற்றலுள்ளவன் செய்யும் முறை. ஒரு வினை தொடர்ந்து செய்யும்போது, அதற்குச் சாதகமாகும் இன்னொரு காரியத்தையும் சாதித்துக் கொள்ளவேண்டும். அது பழகின யானையை விட்டுப் புதிய காட்டானையைப் பிடிப்பதுபோல எளிதாக முடியும். அனுகூலமான நல்லவர்க்கு நல்ல உபகாரம் செய்ய வேண்டும். அதனினும், பகைவரை மீண்டும் சமாதானஞ் செய்து

பகை தீர்த்து, நம்முடன் ஒட்டுறவாயிருக்கச் செய்வது மிக்க நலம்.

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.

சிறிய இடத்தை ஆளுவோர், உள்நடுங்கிக்கொண்டே யிருக்கக்கூடாது. நேர்ந்தபோதே தம்மினும் அறிவாற்றல்களிற் சிறந்த பெரியாரைப் பணிந்து துணைக்கொள்ளவேண்டும். மெலியர் வலியர்துணையை நாடுக.

## 102. செல்வச் சுகத்திற் செய்வினை மறவேல்

செல்வமகிழ்ச்சியால் செய்யவேண்டிய கடமையை மறக்கக்கூடாது. அளவற்ற போகசுகங்களால் செய்ய வேண்டிய நற்செயலில் சோர்வுபடல், அளவிறந்த சினத்தினும் தீது. வறுமை நாடோறும் அறிவைக் கொல்லும். மறதி புகழைக் கொல்லும். மறதியுள்ளவர்க்குப் புகழில்லை. இது எவ்வகை அறநூலாரும் கண்ட முடிபாகும். பயங்காளிக்கு எவ்வளவு அரண் இருந்தும் பயனில்லை. கவனமில்லாதவனுக்கு நல்ல செல்வச் செழிப்பிருந்தும் பயனில்லை. அவன் முன்பின் யோசிக்காமல் அத்தனையும் தனது சுகபோகங்களுக்காக அழித்துத் தீர்த்து விடுவான்.

அச்ச முடையார்க் கரணில்லை; யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

பின்னால் வரப்போவதை, முன்பே ஆராய்ந்து தக்க காப்புடன் வாழாது கவனமற்றிருப்பவன், பின்னால் வரும் பெருந்துன்பத்திற்காக மனம் வருந்த நேரிடும். யாரிடமும், எந்தக்காலத்திலும் கவனமாக இழுக்கில்லாது நடந்தால்

அதைப்போல நன்மையில்லை. மறதியின்றி, எப்போதும் விழித்து நடப்பதைக் கருவியாகப் போற்றினால் ஒருவனுக்கு ஆகாத அரிய காரியம் எதுவுமில்லை. கவனந் தவறாது, நாலையும் யோசித்து நடந்தால் எடுத்த காரியம் நிறைவேறும். அறிவாளிகளாலும், அறநூல்களாலும் புகழப்பெற்ற நல்ல காரியங்களைப் போற்றிச் செய்யவேண்டும். அவ்வாறு செய்யாது மறந்தவர்க்கும், அலட்சியம் செய்தவர்க்கும், ஏழுபிறப்பிலும் நன்மையில்லை. செல்வமகிழ்ச்சியால் மதர்த்துச் செருக்குறும்போது, முன்னே அவ்வாறே சுகபோகங்களில் இழிந்து, கடமை மறந்து கெட்டழிந்தவரை எண்ணித் திருந்துக.

> இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
> மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து

எத்தனையோ சமஸ்தான மன்னர் செல்வக் களிப்பால் கண்டபடி செருக்குற்றலைந்து, நாட்டை மதியாது, நல்லோரை மதியாது, கடமையிற் சோர்ந்து, பதனழிந்து, அரசழிந்து, கடனுடனுற்றுக் கெட்டனர். நல்வினையை எப்போதும் மறவாது உள்ளத்தில் வைத்து நினைத்துக்கொண்டேயிருந்தால் நினைத்த காரியம் கைகூடுவது எளிதாகும்.

> உள்ளிய தெய்த லெளிதுமன், மற்றுந்தான்
> உள்ளிய துள்ளப் பெறின்.

**சுவாமி விவேகானந்தர்** கன்னியாகுமரியில் நினைத்த பொது நலப்பணியை மனவுறுதியால் விடாது சிந்தித்துச் செய்து முடித்தார். எதை நினைத்தாலும் அது கைகூடும். கடவுளையே நினைத்தால் கடவுட்காட்சி யெய்தும். உலகில் ஒரு பெரிய பொதுநலப்பணி செய்ய உறுதியாக நினைத்தால் அது பலிக்கும். போகசுகங்களையே நினைத்தால் அதுவும்

எய்தும்; அத்துடன் கலந்த தீமையும் எய்தும். ஆதலால் மறவாது, சோராது நல்வினைகளையே கருதுக.

## 103. பண்ணுந் தொழிலை யெண்ணித் துணிக

ஒரு காரியத்தில் இறங்குமுன், 'இதனால் இன்னது ஆகும், இவ்வளவு அழியும், முடிவில் இவ்வளவு ஊதியந் தரும்' என்று நன்றாக ஆராய்ந்து பார்த்துச் செய்யவேண்டும். தன்னினத்தாரில் (அமைச்சரில்) முன்பின் அனுபவமுள்ளவரைத் தேர்ந்தெடுத்து அவர்களுடன் நன்குச் சிந்திக்கவேண்டும்; பிறகு காரியம் செய்யவேண்டும். அப்படிப்பட்ட அரசனுக்குக் கைகூடாத அரும்பொருள் ஏதுவும் இல்லை. பெரிய லாபந் தருவபோலக் காட்டி முடிவில் முதலையும் இழக்கச்செய்யும் காரியத்தில் அறிவாளிகள் தமது கருத்தை ஊக்கமாட்டார்கள். நாட்டில் மிகவும் செல்வாக்குள்ள தேசபக்தருக்குப் போட்டியாகத் தேர்தலில் நின்று ஜாமீனையும் இழக்கும் சில செல்வர் உதாரணங் காண்க.

ஆக்கங் கருதி, முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார்.

ஊரார் அவமதிப்பிற்கு அஞ்சி நடக்கும் மானிகள் நன்றாக ஆராய்ந்து தெளியாத ஒரு காரியத்தைத் துணிந்து பிறகு அவமானப்படமாட்டார்கள். காவலன் தனது பலத்தையும் எதிரி பலத்தையும் கண்டு, நல்ல மந்திரிகளுடன் வகையாக ஆராய்ந்து பார்க்காமல், வலுவுள்ள ஒரு நாட்டின்மேல் படையெடுத்தால் என்னவாகும்? உள்ளதும்போகும்; செழிப்பான தனது நிலத்தில் பகைவரை ஊன்றவைத்த தாகும். செய்யத்தகாத காரியத்தைச் செய்தால் கேடுறும். செய்யத் தகுந்த காரியத்தைச் செய்யாது தூங்கினாலும் கேடாகும்.

செய்தக்க வல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

ஆதலால், 'தக்கது, தகாதது இன்னது, இக்காரியத்தில் நன்மையா தீமையா வருவது' என்று நல்ல அறிவாளிகளைக் கலந்து பலமுறை எண்ணிப் பார்த்து ஒரு காரியத்தைத் துணிந்து செய்யவேண்டும். காரியத்தில் துணிந்து இறங்கியபின் 'எண்ணுவோம்' என்பது பிசகு. யோசனையில்லாது **நெப்போலியன்** ரஷ்ஷியாவைப் படையெடுத்து வீணானதை யறிக.

எண்ணித் துணிக கருமம், துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு.

வழியறிந்து, ஒரு முயற்சியிற் பாடுபடவேண்டும். முயற்சியில் பலாபலன்களைப் பார்க்கவேண்டும். பலனுள்ளதானால் அறிவாளிகளுடன் ஆராய்ந்து அதை வெற்றிபெற நடத்தும் வழியை ஆராயவேண்டும்; பிறகு வருந்திப் பாடுபடவேண்டும். அப்படியில்லாமல், வழிதப்பித் தாறுமாறாக ஒரு காரியம் செய்தால் பலர் பக்கத்திலிருந்து போற்றினாலும், அது பலிக்காது ஓட்டையாய், அவமானத்துடன் வீழ்ச்சியடையும். வகையாகச் செய்யாதது நகையாட இடமாகும், வீணாகும்.

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

செயலுக்கேற்றதை முயலுக. பிறர் எள்ளாததை எண்ணிச் செயல் வேண்டும். தமது நிலைக்கும் ஆற்றலுக்கும் ஒத்துக் கொள்ளாத காரியத்தைச் செய்தால் உலகம் ஒப்புக்கொள்ளாது, இகழும். நல்ல காரியங்களுள்ளும் தவறுதல் உண்டாகும். பாம்பைக் கொஞ்சினால் படக்கென்று கொத்தும். பசிக்கும் நோயாளிக்குப் பலாப்பழம் தரலாமா? அவரவர்

பண்பறிந்து, குணங்கண்டு காரியம் செய்யவேண்டும். உலகம் பலவிதம்.

> நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
> பண்பறிந் தாற்றாக் கடை.

## 104 திறமை யறிந்து செய்வது செய்க

'இந்தக் காரியத்தில் இறங்குகிறோம். இக்காரியம் எப்படிப்பட்டது? இதைச்செய்ய எவ்வளவு திறமைவேண்டும்? நமக்கு என்ன திறமை யிருக்கிறது? காரியத்தைச் சாதிக்கப் போதிய பலம் நம்மிடம் உள்ளதா? பகைவன் கை எப்படி? நம்மைவிடப் பலவானா, இல்லையா? அவனுக்குத் துணை செய்வோர் பலம் எவ்வளவு? நமக்குத் துணைசெய்வோர் திறமை எவ்வளவு? இக்காரியம் நமக்குச் சாத்தியமா?' என்று பலவாறு ஆராய்ந்தே ஒன்றில் புகுந்து முயலவேண்டும். இன்றேல், சிலம்பத்தடிகொண்டு ஆகாசகுண்டுடன் போர் புரிந்தவன் கதையாகும்.

> வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
> துணைவலியுந் தூக்கிச் செயல்.

'இந்த மட்டிற்குத்தான் நமக்கு ஒல்லும், சாத்தியமாகும்' என்று ஒருவன் தனது திறமை யறிக. காரியத்திற்கேற்ற எல்லா அறிவையும் நன்கு அறிக. பிறகு தனது அளவில் தங்கி, காரியக்குறிப்புடன் பகைமேற் சென்றால் ஆகாத காரியமில்லை, வெற்றி கிடைக்கும். திறனுந் தகுதியும் அறிந்து வினை செய். தம்முடைய வலிமையறியாது, ஏதோ ஒரு ஊக்கத்தில் வெறிபிடித்துச் சேனையைத் தூண்டி வலிய பகைவரைப் பொருது, இடையில் முறிந்து தோற்றவர் பலர். விளக்கைப் பொருதும் விட்டில் என்னவாகும்.? தன்மட்டில் தனக்கு உள்ளதைக்கொண்டு, மனம் அமைந்து

வாழாது, தனது அளவறியாது, 'நான் பலவான், அவனை வெல்லுவேன், இவனை முறியடிப்பேன், மலையைப் புரட்டுவேன், கடலைத்தூர்ப்பேன், எனக்குச் சமானம் யார்?' என்று தன்னைத்தானே வியந்துகொண்டிருப்பவன், விரைவாகக் கெட்டுப்போவான்; தற்செருக்கால் வகையறியாது, வலிய பகையுடன் முட்டித் தோற்று விழுவான்.

> அமைந்தாங் கொழுகான், அளவறியான், றன்னை
> வியந்தான் விரைந்து கெடும்.

மயிலிறகு லேசானது. அதையும் அளவுக்கு மிஞ்சி ஏற்றினால், வண்டி சுமக்கமாட்டாது அச்சு முறிந்துபோகும். அதுபோல, வலியர் பல எளிய பகைவரை ஒரே சமயத்தில் பொருதால் தமது சேனுபலம் முறியும். எளியராயினும் பலர் ஒன்றுபட்டால் வலிய பகையையும் முறியடிக்கலாம்.

> பீலிபெய் சாகாடும் அச்சிறும், அப்பண்டஞ்
> சால மிகுத்துப் பெயின்.

சாகாடு என்றால் சகடை, வண்டி. தனது சக்திக்கு எவ்வளவு முடியுமோ அதற்குமேலே சென்றால் உயிருக்கே ஆபத்தாகும். ஒரு மரத்தின் நுனிக்கொம்பில் ஏறினவன் அதற்கு மேலே சென்றால், கொம்பொடிந்து கீழேவிழுந்து சாகவேண்டிவரும். தனது அளவறியாது பல நாடுகளுடன் பொருது முடிவில் உள்ளதும் தோற்று **எலனத்தீவில்** (Island of St. Helena) சிறையுண்டிறந்த நெப்போலியன் உதாரணம் காண்க. அவன் பிரான்ஸை மட்டும் கவனமாக நன்கு அரசாண்டிருந்தால் அற்புதமான நன்மைகளைச் செய்திருப்பான்.

> நுனிக்கொம்ப ரேறினார் அஃதிறந் தூக்கின்
> உயிற்கிறுதி யாகி விடும்.

அஃதிறந்து ஊக்குதலாவது, அந்த நுனிக்கொம்பையும் கடந்து மேலே ஊக்கமுடன் செல்லல். ஈகைக்கும் அளவுண்டு. நல்ல வழியில் வழங்கவேண்டும். தனது அளவுக்கேற்றபடியே வழங்கவேண்டும். தனக்கு மிஞ்சிய தானம் வேண்டா. பேர்புகழுக்காகத் தன்னளவிற்கு மிஞ்சிக் கடன் வாங்கியும் கொடுப்பவன் வருந்துவான். தனவைசியர் பத்திலொருபங்கு மகமையாகச் சேர்த்து வைத்துத் தானதருமம், பரோபகாரம் செய்யும் வழக்கம் நல்லது. வருவாய் சிறிதாயிருந்தாலும் பரவாயில்லை. செலவு அளவுக்கு மிஞ்சினால் கெடுதல் விளையும். வாய்க்காலைவிட வடிகால் பெரிதானால் ஆற்றில் மண்ணுதான் மிஞ்சும். இவ்வாறு அளவறிந்து வாழாதவன் வாழ்வு, ஏதோ பசையுள்ளதுபோலத் தோன்றும்; இடாம்பீகத்தாலும், அமிதங்களாலும் நாளுக்குநாள் கையிளைத்து, சூனியமாகி, இருந்த இடங்கூடத் தெரியாது மறைந்தொழியும். எத்தனையோ சமஸ்தானங்கள் நம் நாட்டில் இப்படிச் சீர்குலைந்து போயின.

> அளவறிந்து வாழாதான் வாழ்க்கை, யுளபோல
> இல்லாகித் தோன்றாக் கெடும்.

தனக்குள்ள அளவறியாது, தாசி, கச்சேரி, விருந்து, நாட்டியம் என்று இவைகளுக்கெல்லாம் கொடுக்கத் தொடங்கினால் அந்த ஒப்புரவின் ஆணவம் வளமையை அழிக்கும். அளவறியாத செலவு குளமறியாது இறங்குவதுபோலாம்.

## 105. காலமறிந்தவன் ஞாலம் வெல்வான்

தக்க காலமறிந்து காரியம் தொடங்க வேண்டும். அததற்கு அமைந்த வேளை யுண்டு. ஆந்தையைக் காக்கை இரவில் எதிர்த்தால் இறக்கும். அதே ஆந்தையைக் காக்கை

பகலில் பொருதால் வெல்லும். அதுபோல, பகைவர்மேல் போர் தொடுக்கும் வேந்தர் தக்க சமயம் பார்த்திருக்க வேண்டும்.

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை ; யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

திருமகள் யாரிடமும் நிலைத்து நிற்கமாட்டாள் ; சரியான பருவத்துடன் ஒட்டிய முயற்சியே அத்திருமகளையும் நீங் காது நம்முடன் இணைக்கும் கயிறாகும். அஃதாவது, காலம் பார்த்து நடந்தால் திருவும் செல்வமும் நம்மை நீங்கா. தக்க சாதனங்களுடனே, பொருத்தமான காலமும் அறிந்து முயன்றால் சாதிக்க முடியாத காரியம் எது ? கருவியும் கால மும் கூடினவனுக்கு எக்காரியமும் அரிதன்று. சரியான காலமும், தகுந்த இடமும் கருதிச்செய்தால் உலகையே வெல்லவேண்டும் என்றாலும் கைகூடும்.

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

உலகைத் தம்வசப்படுத்தக் கருதும் பெரிய அரசர், துரு துருத்து ஒருகாரியத்தில் தாவமாட்டார்கள். கலங்காது, அவசரப்படாது, பதறாது, 'காலம் வரட்டும்' என்று பொறுமையாகப் பார்த்திருப்பர்.

காலங் கருதி யிருப்பர், கலங்காது,
ஞாலங் கருது பவர்.

முட்டுக்கடா பின்வாங்குவது எதற்காக ? பகையாட்டை இன்னும் பலமாகப் பாய்ந்து முட்டிப் போர்செய்வதற்கே. அதுபோல, ஊக்கமும் வலிமையும் கொண்ட அரசன் தனது பலங்களை அடக்கி, ஒடுங்கியிருப்பது, தகுந்த காலத் தில் தீவிரமாகத் தாவிப் பொருதவேயாம்.

ஊக்க முடையான் ஒடுக்கம், பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

'பொருதகர்' என்பது போர்செய்யும் ஆடு. ஒள்ளிய அறிவாளிகள் பகைவர் தம்மை இழிவுசெய்தால், பொள்ளென்று அக்கணமே சினந்து பாயமாட்டார்கள்; கோபத்தை உள்ளடக்கிக்கொண்டு தகுந்த காலம் பார்த்திருப்பர். உன்னை விட வலியுள்ள பகைவரைக் கண்டால், பணிந்து நட. அதனால், 'இவன் நமக்குப் பணிந்துவிட்டான்' என்று மிதமாயிருப்பர். அவர் பலம் இளைத்த சமயம் பார்த்துப் பொருது. அப்போது அவரை எளிதில் வென்றுவிடலாம். எய்தற்கரிய காலம் கைகூடும்போது ஒரு நொடிகூடத் தாமதம் வேண்டா. உடனே செய்தற்கரிய செயல்களைச் செயத் துணிக.

எய்தற் கரிய தியைந்தக்கால், அந்நிலையே
செய்தற் கரிய செயல்.

குளத்தில் கொக்குப் பேச்சுமூச்சில்லாமல் அமைதியான யோகி நிஷ்டையி லிருப்பதுபோல அசைவில்லா திருக்கும்; தான் கருதிய மீன் வந்ததும் படக்கென்று கொத்தி யுண்ணும். அதுபோல், தகுந்த வேளைவருமட்டும் காரியந் தொடங்காது, கருத்தைக்கூட வெளிக் காட்டாது, கொக்குப்போலே, மொட்டுப்போலே கூம்பி, குவிந்து, அடங்கி இருக்க வேண்டும்; தூங்கக் கூடாது. சிறந்த வேளை வந்ததும், கொக்கின் கொத்தைப்போலப் பகையைப் பட்டெனத் தாக்குக. தமக்குத் தக்க காலமும் இடமும் வருமட்டும் ஆங்கில ராஜதந்திரிகள் அடங்கியிருந்து, தக்க சமயத்தில் சரியான பலங்களுடன் சென்று போர் வெல்வர்.

கொக்கொக்க கூம்பும் பருவத்து; மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

## 106. இடங்கண் டறிந்து தொடங்குக தொழிலை

முற்றும் ஆராய்ந்து இன்ன இடம் ஏற்றது என்று தீர்மானிக்கவேண்டும். அதன் பிறகே போர்வினை தொடங்க வேண்டும். அதுகாறும் வீரியங்கூறிப் பகைவரை எள்ளாது அடக்கமாயிருக்கவேண்டும். மிக்க போர் வலிபடைத்த வீரருக்கும் கோட்டையுள்ள இடம் சேர்ந்தால் வெற்றிக்கேற்ற பல நன்மைகளைத் தரும். தகுந்த இடங்கண்டறிந்து, தம்மை அரண்களாற் போற்றிப் பிறகு இகலவருடன் போர்தொடங்கினால், ஆற்றாதவர்களும், வலிவுற்றுச் சமர் வெல்லுவர். தக்க இடமறிந்து, கோட்டையிற் பொருந்திப் போர்த் தொழில் புரிந்தால், தம்மை முறியடிக்க எண்ணிய பகைவர் தமது எண்ணம் இழந்து தோற்பர்.

எண்ணியார் எண்ண மிழப்பர் இடனறிந்து,
துன்னியார் துன்னிச் செயின்.

ஆழ்ந்த தண்ணீரில் முதலை எந்தப் பிராணியையும் வெல்லும்; யானையைக்கூட இழுத்துண்ணும். அது தண்ணீரை நீக்கிக் கரைக்கு வந்தால், பிற பிராணிகள் அதை எளிதாகக் கொல்லும். அவரவர் இடத்தில் அவரவர்க்கு வலிவுண்டு.

நெடும்புனலுள் வெல்லு முதலை; யடும்புனலின்
நீங்கி னதனைப் பிற

வலுத்த உருளைகளைக்கொண்ட தேர், கடலில் ஓடாது. இடந்தப்பினால் எதற்கும் தோல்விதான் உண்டாகும். அணிவகுப்புகளை யெல்லாம் நன்றாக எண்ணித் தயாரித்துக் கொண்டு தகுந்த இடமும்பார்த்துப் போர் செய்யும் அரசனுக்கு மனோதைரியந் தவிர வேறு துணை வேண்டா.

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா, எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின்.

தன்படை சிறிதானாலும், தகுந்த இடம்பார்த்துக் களனமைத்துப் போர்செய்தால், மிகுந்த படையுடைய பகைவன் ஊக்கம் அழிந்துபோகும். வீரத்தின **பாஜி** இடம் பார்த்து, கணவாயில் களனமைத்து நின்றதால், ஒரு பெரிய சாம்ராஜ்ய சேனைக்கு மிகச்சில வீரருடன் நின்று ஈடு கொடுத்து, **சிவாஜி**க்கு வெற்றி தந்தான். அஞ்சாமையே அவன் துணை ; எதிரியின் இருப்பிடத்தில் தாக்கக் கூடாது. சரியான அரணும், சீரும் இல்லாத மனிதரையும் அவர்கள் வசிக்கும் சொந்த இடத்திற் சென்று தாக்குதல் அரிது. சொந்த இடத்தினின்று பகைவனை இழுத்து வேறு இடத்திலேயே போர் தொடுக்க வேண்டும். கண் அஞ்சாது, வலிய வேலாட் படையை நேரே எதிர்த்துப் போர்புரிந்த வீர யானையும், கால் ஆழக்கூடிய சகதியில் அகப்பட்டால், ஒரு நரிகூட அந்த இடத்தில் அதைக் கொல்லும். இடம் மாறுபட்டதால் யானை அங்கு வலுவிழக்கிறது.

காலாழ் களரில், நரியடும் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

## 107. அறிந்து தெரிந்தே ஆட்களை நம்பு

தனக்குப் போரிலும் அரசியலிலும் துணைசெய்யும் அமைச்சர், படைத்தலைவர் முதலியோரை அரசன் பலமுறை சோதித்துத் தெளிந் தறிந்தே தேர்ந்துகொள்ள வேண்டும். அவர்கள் **அறவழி** நிற்கிறார்களா, **பொருளுக்குப்** பேராசைப்பட்டு ராஜத்துரோகமான காரியங்களைச் செய்கிறார்களா, **புலனின்பங்களில்** மயங்கி அரசர் பணிகளை

நிறைவேற்ருது விடுகிருர்களா, தங்கள் **உயிருக்கு அஞ்சிச்** சமயத்தில் அரசனைக் கைவிடுவார்களா என்று சோதித்தறிய வேண்டும்.

அறம்பொரு ளின்பம் உயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

பரம்பரையாக நல்லொழுக்கமுள்ள குடியிற் பிறந்தோன், இந்நூலில் '**தீயன விலக்கல்**' என்ற பகுதியிற் சொல்லப் பட்ட குற்றங்கள் இல்லாதவன், அவமானத்திற்கு அஞ்சி மானத்தைக் காப்பாற்றி நடப்போன், நாணமுள்ளவன், அத்தகைய மனிதனை மன்னன் தேர்ந்துகொள்ளலாம். ஆனல் அரிய நூல்களைக் கற்று, மாசற்றவரிடமும் நுட்ப மாக ஆராய்ந்தால், கொஞ்சம் மடமை யில்லாதிருப்பது அரிது. மனிதரிடம் குறைகள் இருக்கவே செய்யும்.

அரியகற் ருசற்ருர் கண்ணுந் தெரியுங்கால்,
இன்மை யரிதே வெளிறு.

ஆதலால் ஒருவனுடைய குணத்தையும் குற்றத்தையும் நாடி யறிக. எது மிகுந்துள்ளதோ அதையே அவனியல்பாகக் கொள்ளுக. குணம் அதிகமானல் நல்லவனெனக் கொள் ளுக. குற்றம் அதிகமானல் அவனை விலக்குக.

குணநாடிக் குற்றமு நாடி, யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

ஒருவன் பெருந்தன்மையுள்ளவன், பெரியான், அல்லது அற்பன், சிறுமையுள்ளவன் என்பதை அறிவதெப்படி? தங்கத்தின் மாற்றை உரைகல்லில் உரசி அறிவதுபோல, 'செய்யுந்தொழில்' என்னும் உரைகல்லில் தேய்த்துப் பார் த்தால் ஆளின் மாற்றுத் தெரியும்.

பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

அவனவன் தகுதிக்கும் குணத்திற்குந் தக்கபடியே தொழி லும் அமையுமாதலின், செய்கையும் நடத்தையும் கண்டு ஒருவனது பெருமையும் சிறுமையும் அறிக. தனக்குச் சம்பந்தமற்ற அன்னியரைத் தேர்ந்தெடுக்கவேண்டா. அவர்களுக்கு உன்னிடம் பற்றிராது. சமயத்தில் விட் டோடுவர், பழிநாணார். தனக்குப் பிரியமானவன் என்று, அறியாமுட்டாளை அந்தரங்கக் காரியங்களுக்காகத் தேர்ந் தெடுத்தால், அவன் எல்லா மடத்தனமான காரியங்களுக் கும் அடிப்படையாயிருந்து துன்பந் தருவான். அன்னி யனை, அறிவு, தகுதி, நடத்தை, நம்பிக்கைகளை ஆராயாது, தனது சேவகத்திற்குத் தேர்ந்தெடுத்தால், அரசியல் கெட் டுச் சந்ததிகளுக்குத் தீராத துன்பமாகும். அன்னியன் தன்னினத்தையே விரும்புவான்; சுயநலத்துடன் நடப் பான்; அரசைக் கைப்பற்றவும் பார்ப்பான். அவ்வாறே தஞ்சாவூர் அரசு, பிறர் கைக்கு மாறியதை யறிக. யாரை யும் நன்றாகச் சோதித்தறியாமல் அரசியற்காரியத்திற்காகத் தேர்ந்து கொள்ள வேண்டா. அவ்வாறு நன்குத் தேர்ந்த பின், அவர்களால் என்ன காரியம் முடியும் என்று சந்தேக மில்லாமல் அறிந்து, அந்தக் காரியத்தில் அவர்களை அமர்த் துக. நன்றாகச் சோதித்துத் தேர்ந்துகொள்ளாமையும், அப்படித் தேர்ந்துகொண்ட நல்லோனிடம் எப்போதுஞ் சந்தேகப் படுதலும் தீராத துன்பங்களைத் தரும். சந்தே கப்பேர்வழி கெடுவான். ஆராய்ந்து கொள்ளுக; கொண்ட வனை அன்புடன் நடத்துக. ஆராயாமல் கண்டவர்களை நம்பினால் கெடுதல் விளையும். நல்லவனைச் சந்தேகப்பட்டால் 'என்னடா, எவ்வளவு கவனமாக நடந்தாலும் இவருக்கு நம்பிக்கையில்லை' யென்று அவன் மனம் வெறுத்து, வேலை

சரியாகச் செய்ய மாட்டான்; எதிராளியுடன் போய்ச் சேர்ந்தாலும் சேருவான்.

> தேரான் றெளிவுந் தெளிந்தான்கண் ஐயுறவுந்
> தீரா விடும்பை தரும்.

## 108. தகுதி நோக்கித் தருகநல் வேலை

நன்மையும் தீமையும் ஊன்றி ஆராய்ந்து, தலைவனுக்கு நன்மையே புரிந்த தன்மையாளரை அரசியல் காரியங்களில் கொண்டு ஆளுக. பொருள் வருமானத்தை (வாரி) மேன் மேலும் பெருக்கி, பல தொழில்களால் நாட்டை வளஞ் செய்து, நாட்டிற்கு ஏதாயினும் துன்பம் குறையுற்றால், ஆராய்ந்து தீர்க்கவல்லவன் பெரிய அரச காரியங்கள் செய் யட்டும். அன்பு, அறிவு, காரியவுறுதி, பேராசையின்மை— இந்த நான்கும் பொருந்தினவனை அரச காரியங்களுக்காகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுக.

> அன்பறிவு தேற்ற மவாவின்மை, யிந்நான்கு
> நன்குடையான் கட்டே தெளிவு,

எல்லாவகையிலும் சோதித்துத் தேர்ந்தெடுத்த மாந்தரிடம் கூட, வேலைவைத்தபின்னும், அவ்வினையின் இயல்பாலே வேறுபாடு உண்டாகும். இட்ட கட்டளையை நிறைவேற்றும் திறமையறிந்தே முடிவாகத் தேர்ந்துகொள்ள வேண்டும். ஏனெனில், பலர் காரியத்தில் முரணாக நடப்பதியல்பு.

> எனைவகையாற் றேறியக் கண்ணும், வினைவகையான்
> வேறாகு மாந்தர் பலர்.

அரசனிடம் அன்பிருந்தால் போதாது. வகையறிந்து, எத்தனை யிடையூறுகள் வந்தாலும் பொறுத்து, தளராமல் செயலாற்றி முடிக்க வல்லவனையே அரசன் ஒரு காரியத் தில் ஏவத்தகும். தொழில் செய்பவன் தகுதி, அவன்

முடிக்கவல்ல தொழில், தொழிலின் இயல்பு, அதற்கேற்ற காலம் இவற்றை நன்கு உணர்ந்தே ஆளை ஏவிச் செய்யச் சொல்லவேண்டும். 'இந்தக் காரியத்தை இன்ன வகையால், இன்ன திறமையால், இவன் முடிப்பான்; அதற்கு இவனே தக்கவன்' என்றாராய்ந்து, அக்காரியத்தை அவன் பொறுப்பில் விடுக. காரியம் நன்றாக நடைபெறும்.

இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.

"வினைக்கு இவன் உரியன், தக்கோன்' என்று கண்டபின்பு, அதற்குவேண்டிய சாதனங்களைத் தந்து, அந்த வேலையி லேயே பழக்கி, அவனை அதற்கே உரியவனாக்கி, அனுபோகத் தால் மேன்மேலும் திறமைபெறச் செய்க.

வினைக்குரிமை நாடிய பின்றை, யவனை
யதற்குரிய னாகச் செயல்.

அரசகாரியத்தில் கண்ணாயிருந்து, வேலைத்திறமையுடைய வன் கேண்மைகொண்டு நெருங்கிப் பழகினால், அதை அவ மதிப் பென்று வித்தியாசமாக நினைக்கக்கூடாது. அப்படி நினைத்தால் அரசன் திரு நீங்கும். உண்மையான வேலைக் காரர்கள் நெருங்கி யுறவாடுவதை அரசன் மாறாக எண்ணி முனிந்தால் செல்வாக்கை யிழப்பான். அரசன் விழிப் புடன் தினந்தோறும் மேற்பார்வை பார்க்கவேண்டும். காரியஸ்தர்கள் நேர்மையாகச் சரியாக, கோணலின்றி வேலைசெய்தால், உலக மக்களும் கோணல், முரண் இன்றி நேர்மையாக நடப்பர். சேவகருக்கும் ஒரு அத்து இருக் கும். அவர்களும் கவனமாக நடப்பார்கள்.

நாடோறு நாடுக மன்னன்; வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

# நூல் 13

## போர், புகழ், வீரம்

---

### 109 சாலவயுஞ் சாடுஞ் சக்திப் படைசேர்

அரசிற்குப் படை வேண்டும். தேர், யானை, குதிரை, காலாள் முதலிய உறுப்புக்கள் அதில் நன்கமைந்திருக்க வேண்டும். என்ன இடர் வந்தாலும், அபாயம் எதிர்த்தாலும் அரசன் அஞ்சக்கூடாது. பகைவரை வெல்லப் போதிய திறமையுள்ள வீரர் சேர்ந்து அப்படையணி யமையவேண்டும். அத்தகைய படை மன்னன் செல்வத்தி லெல்லாம் தலைமையானது.

> உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை, வேந்தன்
> வெறுக்கையு ளெல்லாந் தலை.

போரில் மிடுக்கான நிலைமை வரும். பலர் இறப்பர்; பகைவன் கையேறி இங்கு அழிவு வரும். மின்னலைப்போல வாள்வீசி வெட்டுவர் பகைவர். காயம்பட்டு இரத்தம் பீறிடும். இவற்றையெல்லாம் அஞ்சாது, உறுதியுடன் எதிர்த்து நின்று போர்கொடுக்கும் திறமை நல்ல அனுபவம் பெற்ற இரணவீரருக்கே முடியும். ஆதலால் அத்தகைய சூரரைப் படையில் சேர்த்துக் கொள்ளவேண்டும். எலிகள் பகைத்து நாகப்பாம்பை எதிர்த்தால் என்னவாகும்? பாம்பு 'புஸ்' ஸென்று சீறினால் எலிப்பகை அதோடு சரி. அது போல் தகுந்த சூரர்முன்னே, பகைவர் சேனைக்கடல் ஒலித்தால் பலிக்காது:

ழலித்தக்கா லென்னும் உவரி; எலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்,

வீரம் அழியாது, பகைவர் சூட்சியால் கெடாது, அரச னுக்கு நன்றியுடையதாய், வழிவழியாக வீரப்போர் புரிந்து அனுபவம் பெற்றுச் சௌரியம் நிறைந்ததுவே சரியான படை; கூற்றே சினந்து எதிர்வந்தாலும், ஒன்றுகூடி எதிர்த்துக் கலங்காது போர்புரிந்து நிற்கும் ஆற்றலுள்ளதே படை.

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

மறம், மானம், கலங்காவுறுதி, மாண்புள்ள வீரதர்மவழியிற் சென்று தைரியமாகப் போர் புரிதல் ஆகிய இந்த நான்கும் படைக்குத் தகுந்த காப்பாகும். பகைவர் தன் மேல் போர்தாங்கி வரும் தன்மையை நன்கறிந்து, கொடிப் படை தாங்கி முன்செல்வதே துணிவுள்ள படை. சேனைக்குப் பகைவரைப் பொருதும், சௌரியமும், ஆற்றலும் இல்லை யாயினும், சரியானபடி அணிவகுத்து நின்றால் அதன் தோற்றமே வெற்றிபெற வழியாகும். சதுரம், முக்கோணம், பதுமம் முதலிய வடிவாகப் படையணி வகுத்து நாற்சேனையும் கம்பீரமாக நின்றாலே எதிரி அஞ்சுவான். படையில் போதிய வீரர் இருக்கவேண்டும். தொகை சிறுகக் கூடாது. போர்வீரர் ஒருவருக்கொருவர் எக்காரணத்தாலும் தீராத மனவெறுப்புக் கொள்ளக்கூடாது. உடையுணவிற்கு வறுமை கூடாது. அவ்வாறானால் படை போர்வெல்லும்.

சிறுமையுஞ் செல்லாத் துனியும், வறுமையும்,
இல்லாயின், வெல்லும் படை.

நிலைத்துநின்று போர்புரியும் வீரர் போதுமளவும் இருந் தாலும், படைநடத்தவல்ல தலைவர் இல்லாதபோனல் பய னில்லை.

## 110. வீரங் கனலும் போர்ப்படை காணீர்!

"வருகிறது வீரக் கனற்படை! எமது தலைவன்முன் நிற்காதீர்! ஓடுங்கள், பகைவர்களா! முன்னே பலர் எமது தலைவரை எதிர்த்துநின்று இறந்து, தமக்கு வீரக்கல் நாட் டப்பெற்றுள்ளனர்!"

> என்னைமுன் னில்லன்மின்! தெவ்விர் பலரென்னை
> முன்னின்று கன்னின் றவர்.

என்று வீரங்கூறி வருகிறது படை! இப்படைக்குப் பலமான எதிரி வேண்டுமாம். காட்டு முயலை எய்த அம்பினும், யானையெறிந்து தப்பிய வேலைத் தாங்குவதே பெருமையாம்.

> கான முயலெய்த அம்பினில், யானை
> பிழைத்தவே லேந்த லினிது.

இப்படை பகைவரை வீழ்த்தும் தறுகண் ணுடைத்து. அத்தறுகண் (மறம்) பேராண்மைதான். ஆனல் தோற்ற பகைவருக்கு ஒரு இடர் வந்தால், அதைத் தீர்ப்பது அந்த ஆண்மையின் கூராகும். இப்படை பேராண்மையுடன் ஊராண்மை (உபகாரம்) கொண்டது. போர் நடக்கிறது. ஒரு வீரன்மேல் வேல் தைக்கிறது. அதை அவன் உணர வில்லை. தனது கைவேலை ஒரு யானைமேல் எறிந்து அதை வீழ்த்துகிருன். மற்ருெரு பகை யானை வருகிறது. அதை வீழ்த்த மற்ருேர் வேல் தேடுகிருன். சட்டென்று தன்னு டம்பில் தைத்த வேலைக் காண்கிருன். நோகுருே? இல்லை. அந்த வேலைப் பிடுங்கி மங்ருெரு யானைமேல் எறிந்து, 'இவ்

வளவாயினும் எனது கடமையை நிறைவேற்றினேனே' யென்று சிரித்து மகிழ்கிறான்!

> கைவேல் களிற்றொடு போக்கி, வருபவன்
> மெய்வேல் பறியா நகும்.

பகைவன் தீப்போல் பார்க்கிறான்; வேலெறிகிறான்; நமது வீரன் விழி வேலுக்குக் கூசி இமைக்கிறதோ? அப்படி இமைத்தால் தோல்வியல்லவா? தானும் பகைவனைப் பார்த்து வேல் எறிகிறான்—வன்கண் வீரன். போர்செய்து பெரிய இரத்தக்காயம் படாத நாளெல்லாம், 'சீ! இதை வீணாளோடு எடுத்தெறி' என்று சலித்துக்கொள்ளுவான் நமது வீரன்.

> விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
> வைக்குந்தன் னாளை யெடுத்து.

உயிர்வேண்டான்; உலகெல்லாம் சூழ்ன்று பரவும் வீரப் புகழே வேண்டுகிறான் சூரப்புலி. அவனுக்கு வீரக்கழல் எவ்வளவு அழகாகப் பொருந்தி யிருக்கிறது! போர் வந்தால் உயிருக்கு அஞ்சாத வீரமறவர், தமது தலைவன் கடுமையாயிருந்தாலும், சீர் குலையாது, மனங் குன்றாது, ஒழுங்குப்படி நின்று கட்டளையைச் செய்வர். தமது சபதத்தை நிறைவேற்றப் போர்முனை புகுந்து, அது நிறைவேறுமுன் பொருது சாகும் வீரரை ஒறுப்பார் யார்? கண்ணில் நீர்பெருகி, "அருமையான வீரனை யிழந்தேனே" என்று அரசன் வருந்தும்படி ஒரு வீரன்(**பாஜீப்பிரபுபோல**) இறந்தால், அச்சாவை இரந்தாயினும் வாங்கிக்கொள்ள வேண்டும்.

> புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா (டு)
> இரந்துகோட் டக்க துடைத்து.

## 111. பகையால் வருவது பலபல துன்பம்

எவ்வளவு பெரிய சேனையிருந்தாலும் படைச் செருக்கால் வலுச்சண்டைக்குச் செல்லக்கூடாது. இகலை ஒழிக்கப் பார்க்க வேண்டும். பகை, மாறுபாடு, வெறுப்பு, குரோதம், சண்டை எல்லாம் **இகல்** என்னும் வார்த்தையில் அடங்கும். எல்லா வுயிர்களுக்கும் இகல் என்னும் நோய்தான் துவேஷம், பிரிவு, மனஸ்தாபம் முதலிய பண்பற்ற குணங்களை வளர்ப்பது—ஒருவன் வேறுபட்டு விரோதஞ் செய்தாலும் நாமும் பகையெண்ணித் துன்பஞ் செய்யாதிருப்பது நல்லது; பகை முதிராது. இகல் என்பது பெருந் துன்பந்தரும் ஓர் நோய்; அதை ஒழித்தால் அழியாப் புகழாகும். யாருடனும் ஆத்திரங்கொண்டு சண்டைப் பிடிக்கக் கூடாது. இகல் பெருந்துன்பம், தொல்லை, துயரம் தரும்; அது கெட்டால் அளவற்ற இன்பமாகும்.

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

மனத்திற் பகை தோன்றினால் அதை உடனே மறுத்து மாறின்றி நடக்க வல்லவனை எல்லாரும் விரும்புவர். அவனை யாரும் பொருது வீழ்த்தக் கருதமாட்டார்கள். நமது மனத்திற் பகைகொண்டு குரோத மெண்ணுவதே பிறரும் நம்மைப் பகைப்பதற்குக் காரணம். பிறருடன் இகல் மிகுந்து வெறுப்பை வளர்ப்பதே இன்பமெனச்செய்வோன் வாழ்க்கை விரைவில் தடுமாறிக் கெட்டழியும். குரோதங் கொண்டு பிறருக்குத் தீமைசெய்தால், அறிவுடை மாந்தர், மேன்மேலும் வெற்றியைத்தரும் மெய்ப்பொருளைக் காண மாட்டார்கள்; பிறர்மேல் எப்போதும் குற்றமே கண்டு, சண்டைக்கிழுத்துக் கெடுவர். அறிவிருந்தும் அவர் இவ்வாறு குரோதத்தால் கெடுதல், அறிவீனமாகும்.

பகையை எவ்விதத்தாலும் மாற்றி நட்பாக்குதலே ஆக்கமாம். பகையை மேன்மேல் வளர்த்தால் கேடுதான் வரும். ஒருவனுக்குக் கூடிவருங்காலமிருந்தால் பகையும் குரோதமும் தோன்று; அவன் எல்லாரிடமும் அன்போடிருப்பான்; கெட்டழியும் காலம் வந்தால் எல்லாருடனும் பகையைப்பெருக்கி விரோதத்தைச் சம்பாதிப்பான்; இகலால் எல்லாத் துன்பங்களும் பெருகும். முகமலர்ந்து, நல்லெண்ணங்கொண்டு எல்லாருடனும் நட்பாடுவதால் வாழ்விற்கு நன்மையான அமைதி, களிப்பு, அன்பு, ஒற்றுமை என்னும் பெருமைகள் உண்டாகும்.

இகலானும் இன்னாத வெல்லா; நகலானும்
நன்னய மென்னுஞ் செருக்கு.

## 112. பண்பிலான், சினத்தான், பகைதனக் கெளியான்

உலகம் இருவிகாரக் காடு; நட்பு, பகை, ஆகிய இரண்டும் கலந்தது. அரசருக்குப் பகைவர் இருப்பதியல்பு. பகைவர் உண்டாவதன் காரணமென்ன? நம்மிடம் உள்ள மனப்பகையே வெளிப்பகையைத் தூண்டுகிறது. ஒருவன் கண்தலை தெரியாது சிடுசிடுவென்று பிறரைச் சினக்கிறான்; காமவெறியிலோ இராவணனுக்கு அண்ணனாயிருக்கிறான்; குலப்பெண்களையும் கற்பழிக்கத் துணிகிறான். அவனைக் கெடுக்கப் பகைவர் எங்கென்று காத்துக்கொண்டிருப்பர்.

காணாச் சினத்தான், கழிபெருங் காமத்தான்,
பேணாமை பேணப் படும்.

பேணாமை = பகைமை. கண்டதற்கெல்லாம் அஞ்சி, அறிதற்கரிய அறநூல்களை அறியாத மூடன், பிறருடன் மனப் பொருத்தமில்லாது விரோதங் கொள்வான்; கேட்பவர்க்கு

எதுவுந் தரமாட்டான்; லோபி; இப்படிப்பட்டவன் பகைவருக்கு மிகமிக எளியன்.

அஞ்சும், அறியான், அமைவிலன், ஈகலான்,
தஞ்சம் எளியன் பகைக்கு.

தீராச் சினத்தான்; நிறையில்லாது, பிறரைப் பேசுவான்; எங்கும், என்றும் யாரும் அவனை எளிதில் பகைப்பர்.

நீங்கான் வெகுளி, நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

அறவழி நோக்கி நடக்கமாட்டான்; மன்னறத்தில் விதித்ததைச் செய்யான்; பழிபாபம் பாராது கண்மூடித்தனமாகக் கொடுமை செய்வான்; நல்ல பண்பில்லாதவன்; அவனைப் பொருது வீழ்த்துதல் பகைவருக்கு மிகவும் எளிதாகும். குணமில்லாதவன், பல குற்றங்களுள்ளவன்—அவனுக்கு யாரும் துணையாக மாட்டார்கள். பகைவருக்குக் கொண்டாட்டந்தான்! அறிவிலி, அஞ்சும் பேடி—அவன்பகை பெற்றால், போர்வீரருக்கு அடங்கா மகிழ்வுண்டாகும். போரை அடுத்து, அல்லது, தன் அரசை மிகவும் அடுத்திருந்து, தருமத்திற்குப் பொருந்தாத, குடிகள் நலத்திற்குப் பொருந்தாத, மாண்பற்ற காரியங்களைச் செய்யும் அறிவிலியின் பகையை, ஏதாவது கொடுத்தாயினும் வலியப் பெற்று, அவனது தீமைகளை அடக்கவேண்டும்.

கொடுத்துங் கொளல்வேண்டு, மன்ற அடுத்திருந்து,
மாணாத செய்வான் பகை.

அரசை ஆளும் அறநெறியைக் கல்லாது, அநீதி செய்யும் பக்கத்துப் பகைவனைப் பொருது வென்று, அவனது பொருள் எவ்வளவு சிறியதாயினும் அதைக் கைப்பற்றி நீதிமுறையாகப் பயன்படுத்த வேண்டும்; அப்படிச் செய்

யாத அரசனைப் புகழொளி அடையாது. அல்லது செய்வாரை நீக்கி, நல்லது செய்வதே போரறம். அன்பில்லாதவன், குடிகளைக் கொடுமையாக நடத்துவோன், அதனால் தக்க துணையில்லாதவன், தானே தனியாகவும் நிற்கச் சக்தியற்றவன்—பகைவர் வலிமையை அவன் எப்படிச் சிதைக்க முடியும்? அவன் பகைவரால் அழிக்கப்படுவான். வலிவுள்ள அரசர் இப்படித் துணையில்லாது மெலிந்தவர் மேல் பகைகொண்டு செல்லாமலிருப்பார்களா? அதைத் தமது கடமையாகக் கருதுவர். ஆனால், கைமெலிந்தவன், தன்னினும் வலிய மன்னருக்குப் பகையாகி எதிர்த்துச் செல்லவேண்டா; தோல்வியாகும்.

## 113. பகைமை விலக்குக; பகைச்செருக் கழிக

பகைமை என்பது பல தீமைக்கிடமான பெருந்தொல்லை. விளையாட்டிற்குக்கூட ஒருவன் அதை வேண்டத்தகாது.

பகையென்னும் பண்பி லதனை, யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று.

வில்லை ஆயுதமாகக்கொண்ட போர்வீரர் பகை கொண்டாலும், சொல்லை ஆயுதமாகக் கொண்ட அமைச்சர், கவிகள், எழுத்தாளர் இவர் பகையைக் கொள்ள வேண்டா. வில்வீரர் பகை உடலைச் சிதைக்கலாம். சொல்வீரர் பகை உனது தீமையைப் பறையடித்துப் புகழைக் கொல்லும். இரண்டு பகையும் வேண்டா.

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க,
சொல்லே ருழவர் பகை.

வேறு மன்னர் துணையின்றித் தனிமையாயிருக்கும் அரசன் பலர் பகைக்குள்ளானால் அவனைப்போலப் பைத்தியக்காரன் இல்லை.

ஏமுற் றவரினு மேழை, தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

பகைவனைக்கூட நண்பனாக்கிக்கொண்டு அரசியலை அமைதியாக நடத்தும் ஆற்றலுடைய மன்னன் பெரும்புகழ் பெறுவான். அவன் புகழில் உலகம் அமைதியாக மகிழ்ந்திருக்கும்.

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கட் டங்கிற் றுலகு.

வேறு துணையில்லை. பகைவரோ இரண்டுபேர். என்ன செய்வது? எப்படியாயினும் ஒரு பகைவனைச் சமாதானப் படுத்தி நண்பனாகக் கொள்ளுக. உனக்கு அடுத்த அரசனை முன்பு நேசனாகக்கொண்டிருந்தாலும், பகைவனாகக் கருதினாலும், உனக்கு ஒரு இழிவு வந்தகாலத்தில் அவனை நெருங்கிக்கூடாமல், அல்லது ஒதுங்கிப் பகையாமல், நடுநிலையில் இரு; மிகவும் நெருங்கவிட்டால் உனது அழிவையறிந்து தாக்குவான். நீ இடருற்று நோவதை, அதையறியாத பேருக்குச் சொல்லாதே. உன் மெலிவைப் பகைவருக்குத் தெரிவிக்காதே; அதுதான் சமயம் என்று தாக்குவர்; கவனம். பின்னே என்ன செய்யவேண்டும்? நல்லமைச்சரைக்கொண்டு உனது நிலையை உயர்த்தும் வகையறி; உனது பொருள், படை, ஆற்றலைப் பெருக்கு; தற்காப்புடன் விழித்திரு. பிறகு பகைவர் உன்பாற் காட்டும் செருக்கு அழியும்.

வகையறிந்து, தற்செய்து, தற்காப்ப மாயும்,
பகைவர்கட் பட்ட செருக்கு.

முள்மரத்தை இளையதாயிருக்கும்போதே வெட்டி யெறிய வேண்டும்; அது முதிர்ந்தால், கையைக் குத்திக் காயப் படுத்தும். அதுபோல, பகைவனை முளைக்கும்போதே

கிள்ளியெறிக. பகை முதிர்ந்து படைவலி மிகுந்தால், அவன் உன்னைக் கொல்வான்.

இளைதாக முண்மரம் கொல்க, களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

ஏனெனில், தம்மைப் பகைப்பவரது செருக்கை வீழ்த்தாத வர் நீண்டகாலம் உயிர்த்திருக்க முடியாது. பகைவர் கைம் மிஞ்சி, உயிருக்கே உலைவைப்பர்.

உயிர்ப்ப உளரல்லர், மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

## 114. அரம்போல் உட்பகை ஆக்கந் தேய்க்கும்

நீரும் சோலைநிழலும் அழகுதான். அவற்றால் நோய் பரவினால் அத்தனையும் தீமை யல்லவா? குளம் நல்லதுதான். அது பாசிபிடித்து, நாற்றமெடுத்துத் கொசுப்பூச்சிகளைப் பரப்பி நோய்விளைவித்தால் ஊருக்கே ஆபத்தல்லவா? தம் மைச்சேர்ந்த உறவினர் கெடுதல் செய்யத் தொடங்கினால் அவர்கள் நம்முடனுறைவது தீமையேயாகும். வாள்போல வெட்டவெளிச்சமாக முன்னிற்கும் பகைவரை அஞ்ச வேண்டா; ஒரு கை பார்க்கலாம். ஆனால், நண்பரைப்போல வந்து வஞ்சனை புரியும் பகைவரை அஞ்சுக.

வாள்போற் பகைவரை அஞ்சற்க; அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

**நெப்போலியன்** எகிப்தைப் படையெடுத்து வென்று ஆண் டான். **லாபுகார்** என்னும் ஒரு பிரெஞ்சுக்காரன் நெப் போலியனது நண்பன்போலிருந்து, அவனது பகைவருக்கு உடைந்தையாக வேலைசெய்தான்; நெப்போலியனை ஒரு போர்வீரன் மனைவியின் காதலிற் சிக்கவைத்தான். பிறகு அப்போர்வீரனைத் தூண்டி நெப்போலியனைச் சுட்டுக்

கொல்லும்படி எவினுன்; தனது சூழ்ச்சி பலிக்காமல் வாபுகார் அழிந்தான். ஆட்களை மிகவும் சோதனைசெய்தே நம்பவேண்டும். உட்பகையை அஞ்சித் தற்காப்புடனிருக்கவும்; உட்பகைவன் உனது கை தளர்ந்தவுடனே, குயவன் ஈரமான மண்பானையை அறுக்கும் ஆயுதம்போல, உன்னைத் தப்பாமல் எளிதாகக் கழுத்தறுப்பான்.

உட்பகை யஞ்சித்தற் காக்க; உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

மனத்தில் வஞ்சம் வைத்து நட்புநடிக்கும் உட்பகைவன், உனது இனத்தார் மனத்தையும் கலைத்துப் பகைமூட்டித் தொல்லை செய்வான். உட்பகை கொண்ட உறவின்முறையான் உன்னைக் கெடுத்துப் பொட்டலாக்கத் தொல்லைசெய்வான். ஏனென்றால், சொந்தக்காரனுக்கு உனது உட்குட்டெல்லாம் தெரியும்; அருகிருந்தே கெடுப்பான். தன்னுடன் ஒன்றி யிருப்பவரே மனவேறுபாடுள்ள உட்பகையானுல், அரசன், ஏதாயினும் ஒருநாள் அவர் சூழ்ச்சியால் அழியாமல் இருக்கமுடியாது. ஒரு சிமிழின் மூடி, சிமிழோடு கூடியிருப்பதுபோலக் காண்கிறது. சிமிழைத் திறந்தால் மூடி வேறுதான். அதுபோல, உட்பகைவனைக் கொண்ட குடித்தனம் ஒன்றுபட்டதுபோலத் தோன்றினும், வேறுபட்டு, உள்ளே சண்டையும் சச்சரவுமாகவே யிருக்கும். உட்பகைவன் ஒருவருக்கொருவர் சிண்டுமுடித்துவிட்டு விஷமம் செய்து கொண்டே யிருப்பான்.

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாது
உட்பகை யுற்ற குடி.

அரத்தினுல் அராவிய பொன் தேய்வதுபோல, உட்பகைவன் உள்ள குடித்தனத்தின் அறிவு, ஆற்றல், வளமை யனைத்தும் தேய்ந்து போகும்.

அரம்பொருத பொன்போலத் தேயும், உரம்பொரு (து)
உட்பகை யுற்ற குடி.

எள்ளின் பிளவுபோலச் சிறிதாயினும், உட்பகை பெரும் பிளவுண்டுபண்ணிக் கேடு விளைக்கும். உட்பகை சிறிதானாலும் பல கேடுகளைக் கொண்டுள்ளது.

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்,
உட்பகை யுள்ளதாங் கேடு.

ஒரு சிறு குடிசையில் விஷப்பாம்புடன் கூடி வாழ்வது போல, மனப்பொருத்தமில்லாத உட்பகைவனோடு நெருங்கி வாழுதலும் அபாயமாகும். திடீரென்று அவன் நம்மைக் கெடுப்பான்.

உடம்பா டிலாதவர் வாழ்க்கை, குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

## 115. இடுக்கண் உடம்பிற் கியல்பெனத் தாங்குக

குடும்ப வாழ்விலும் பொது வாழ்விலும் பல இடர்கள் வரும்; இது உலகியல்பு. இடுக்கண் வருங்கால் நகுக. அந்த நகையே இடரைத்தாண்ட நம்முடன் வரும் ஒப்பற்ற துணையாகும். வெள்ளம்போல இடும்பை வந்தாலும் அறிவாளி, உள்ளத்தில் அதைரியபடாமல், அதை எதிர்க்க உறுதிகொண்டு நினைத்தால், எல்லா இடரும் கெடும்.

வெள்ளத் தனைய இடும்பை, அறிவுடையான்
உள்ளத்தி னுள்ளக் கெடும்.

துன்பம் வந்தபோது மனந் தளர்ந்து துன்பப்படாத தைரியவான்கள், அந்தத் துன்பத்திற்கே துன்பஞ் செய்து விரட்டுவர். அவர் வீரப்பொறுமையால் துன்பம் ஓடிப் போகும்.

இடும்பைக் கிடும்பை படுப்பர், இடும்பைக் (கு)
இடும்பை படாஅ தவர்.

வண்டியிழுக்கும் காளை எவ்வளவு சேறும் நொடியும் தடை களும் வந்தாலும், விடாது சிரமபப்பட்டாயினும் வண் டியை இழுத்துச் செல்லுகிறது. அவ்வளவு பொறுமையுட னும்,விடாப்பிடியாகவும் உழைப்பவனுக்கு வரும் இடர்கள் அவனை இடர்ப்படுத்த முடியாது ஏமாந்துபோகும். மேன் மேலும் இடர்கள் வந்தாலும் தனது மன மழியாது, கொள்கையைக் கொண்டு செலுத்தும் வீரன்முன், வந்த துன்பமே துன்பப்பட் டோடும். துன்பத்தை வெல்லுவ தற்கு வேண்டுவது சமத்துவம். சுகம் துக்கம், நல்லது பொல்லது என்ற இருவிகாரத்திலும் ஒட்டாது மனதைச் சமப்படுத்தவேண்டும். செல்வம் பெற்றபோது யாருக்குந் தராது கருமித்தனம் செய்யக்கூடாது. கருமி, செல்வத்தை யிழந்தால், 'ஐயோ போச்சே' என்று வயிற்றிலடித் தலறு வான்; செத்துக்கூடப் போவான். 'பிறர்க்குதவவே இது இறைவன் கொடுத்த செல்வம்' என்று தராளமாகப் பாத் துண்பவர், செல்வம் அற்றபோது அல்லற்பட மாட்டார் கள். 'இருந்தமட்டும் ஈந்துவந்தது லாபம்' என்பர்.

அற்றேமென் றல்லற் படுபவோ, பெற்றேமென் (று)
ஓம்புதல் தேற்று தவர்.

(ஓம்புதல்-கருமித்தனஞ்செய்தல்.) மேலான அறிவாளிகள், 'இந்த உடம்பு இடும்பைக்கு இலக்கானது' என்றறிவர். ஆதலால், அதற்கியல்பான துன்பம் வந்தால் அதைத் துன்பமாக நினைத்துக் கலங்கார்.

இலக்கம் உடம்பிடும்பைக் கென்று, கலக்கத்தைக்
கையாறுக் கொள்ளாதா மேல்.

(கையாறு-துன்பம்).வினையுடல் துன்பக் களன் என்றறிந்து, சிற்றின்பங்களில் பாசம்பற்றித் திரியாதவன், துன்பப்பட மாட்டான். உலகந் தரும் இன்பசுகங்கள் வந்தபோது, அவற்றில் மயங்காது, புறத்தே அனுபவித்தாலும் மனத்தே, 'இந்த இன்பங்கள் நிலையற்றன' என்று தெளிந்து பற்றற் றிருப்பவன், துன்பம் வரும்போதும் அதேமாதிரி 'இவை நிலையற்றன' என்று துன்புறு திருப்பான். இஃதே, **கீதை** உபதேசிக்கும் **சமத்துவம்.**

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துள்
துன்ப முறுத லிலன்.

துன்பங்களையெல்லாம் இன்பமாகக் கொண்டால், எடுத்த நல்ல காரியம் நிறைவேறும்; பகைவர்கூட நன்கு மதிப்பர்; அவ்வளவு புகழுண்டாகும்.

இன்னாமை யின்ப மெனக்கொளின், ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

## 116. மானங் காத்து வாழுக வுலகில்

தனி வாழ்விலும் பொது வாழ்விலும், மானத்தை உயிர் போலக் காக்கவேண்டும். குலப்பெருமை குறைவதானால், அவசியம் வேண்டிய அருமையான பொருள்களையும் ஆசைப்படாது விட்டுவிடவேண்டும். மானமும் புகழும் வேண்டும். வீரர், புகழ் சம்பாதிக்கும் போதும் தமக்குப் பெருமையில்லாத பொய், வஞ்சம் முதலிய இழி தொழில் புரியார். செல்வப் பெருக்குற்றபோது, செருக் கின்றிப் பணிவுடன் நடக்கவேண்டும். சிறிது செல்வம் சுருங்கினால், குலப்பெருமை குன்றாது உயர்ந்த கொள்கை கொண்டொழுகவேண்டும். நாடிழந்தாலும் **அரிச்சந்திரன்** வாக்கிழக்கவில்லை.

பெருக்கத்து வேண்டும் பணிதல்; சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

மானங்கெட்ட தொழில் செய்து தமது கௌரவமான நிலையினின்று இழிந்த மனிதர், தலையினின்று இழிந்த மயிருக்குச் சமானம் ஆவர். தலையிலிருக்குமட்டும் அதற்குத் தைலம் தடவிச் சீவி முடித்துப் பூச்சூட்டுவர். உதிர்ந்ததும் அதை எடுத்து எறியவேண்டியதுதானே! அதுபோல, மானங்கெட்டபேரும் அவமதிப் புறுவர்.

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

குன்றுமணி யவ்வளவு சிறிய இழிதொழில் செய்தாலும், குன்றைப்போன்ற கம்பீரமான ஆட்களும் உலக மதிப்பில் தாழுவர்.

குன்றி னனையாருங் குன்றுவர்—குன்றுவ
குன்றி யனைய செயின்.

தம்மை யிகழ்வார்பின்னே சென்று, அவர்களைக் கெஞ்சி வாழுதலால் இகத்தில் புகழில்லை; மறுமையிலும் வீடில்லையாகும். அதனாற் பயனென்ன? தன்னை வெறுத்துப் பகைப்பவர்பின் சென்று பல்லைக்காட்டிக் கெஞ்சி வாழுவதைவிட, தனது வறிய நிலையிலே கெட்டு, 'மானமாகச் செத்தான்' என்று பேர்வாங்குவது நல்லது.

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின், அந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

பெரும்புகழ் சிறந்த தனது குலத்தின் மானம் கெடும்படியான நிலைமை வந்தபோது, மனிதத்தன்மையுள்ளவர் இந்த ஊனுடலை மதித்து இழிதொழில் செய்யார். ஊன் வளர்க்கும் இந்த நரவாழ்வு என்ன, சாகா மருந்தா? மானங்கெட்டு

ஊனை வளர்ப்பதைவிட, மானத்துடன் உயிர்விடுவதே மேல். ஒரு மயிர் உதிர்ந்தால் கவரிமான் (Yak) உயிர் வாழாது. மானங்கெடும் நிலைமை வந்தால், உணர்வுள்ள மாந்தர் உயிரை விடுவர்.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்,
உயிர்நீப்பர் மானம் வரின்.

அவமானம் வந்தால் உயிர்விடும் மகான்களின் ஒள்ளிய புகழை உலகம் தொழுதிசைக்கும். **குரு கோவிந்தன்** வீரத் தந்தை **தேஜபகதூரும்**, வீரமைந்தர் **ஜொராபர் பத்தேஸ் சிங்கும்** குலப்பெருமைக்காக உயிரைப் பலியாக்கினர். அவர் புகழை உலகம் போற்றுகிறது.

## 117. சிறுமை யொழிக. பெருமை யொளிர்க!

மானமாக வாழவேண்டுமானால் அற்பத்தனம் கூடாது; பெருந்தன்மையுடன் நடக்கவேண்டும். பெருமையுடைய வர் காரியத்திற் புகுந்தால், அருமையான செயல்களைச் செய்து தமது குலத்திற்கும் உலகிற்கும் பெருந்துணையா வர். இதற்கு **மஹாத்மா காந்தி** உதாரணம்.

பெருமை யுடையவ ராற்றுவார் ஆற்றின்,
அருமை யுடைய செயல்.

கற்புள்ள மாதர் தமது கணவர்மேல் மனமொன்றி அன்புசெய்வர். அந்த மனவொருமைப்பாடே கற்பின் உயிர். அதுபோல, பெருந்தன்மையாளர் தமது மனச்சாட்சி சொல்வதைக் கொண்டே உண்மையாக நடப்பர். தமக் குத்தாம் உண்மையாக நடத்தலே பெருமையின் பெருமை.

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

பெருந்தன்மையாளர் கல்வி கேள்வி யொழுக்கங்களிற் சிறந்த பெரியாரைப் பணிந்து பயன் பெறுவர். சிறுமதி யாளர் உணர்வில், பெரியாரை வழிபட்டு அவர் நல்லு ரையைக் கொள்ளும் நோக்கமே யிராது.

> சிறியா ருணர்ச்சியு ளில்லை,: பெரியாரைப்
> பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

சீர்மையற்ற இச்சிறுமதியாளரிடம் செல்வம் அதிகாரம் முத லிய சிறப்புகள் சேர்ந்தால், அவர்கள் செருக்கை அளக்க முடியாது! பெருமை, யாரிடமும் செருக்காது; தாழ்ந்து நடக்கும். சிறுமையோ செருக்கின் சிகரத்தில் ஏறி நிற்கும். பெருமை பணியும். சிறுமை, தன்னைத்தான் வியந்து தற் புகழ் அணியும்,

> பணியுமா மென்றும் பெருமை; சிறுமை
> அணியுமாந் தன்னை வியந்து.

பெருமை, பிறர் குறைகளைச் சொல்லாது, அவர்கள் மானத்தை மறைக்கும். சிறுமையோ, பிறர் குற்றங் குறை களையே ஊரறியக் கூறிவிடும்.

> அற்ற மறைக்கும் பெருமை; சிறுமைதான்
> குற்றமே கூறி விடும்.

குலம், உத்தியோகம் முதலியவற்றில் ஒருவர் மேலாயிருக்க லாம். அவர்களிடம் மேன்மையான குணங்கள் இல்லேல் அவர்கள் மேலோராக மாட்டார்கள். ஒருவர் பிறப்பிலும், செல்வநிலையிலும் கீழாகலாம். அவரிடம் கீழ்க்குணம் இல்லாவிடில் அவர் கீழோரல்லர். உயர்ந்த குலம் என்று ஒருவன் கள்ளும், சூதும், விபசாரமும், பொய்ச்சாட்சியு முடையவனாக வாழ்ந்தால் அவனை இழிகுலத்தானாகவே உலகம் கருதும். திருக்குல **நந்தனார்**, வேட **வால்மீகி** முத

வியோர் தங்கள் செயலொழுக்கங்களால் மேன்மை பெற்றூர். பிறப்பு அனைவருக்கும் ஒன்றுதான். ஆன்மா வுக்கு சாதிவேறுபா டில்லை. அவரவர் செய்யும் தொழிலா லேயே 'மேலோர்' 'கீழோர்' என்று வேறுபாடுகள் காணப்படுகின்றன, "நான்கு வருணமும் குணகர்ம விபாகமே" என்னும் கீதை. பொதுநலம், நல்லொழுக் கம், அறிவு, ஈகை, வாய்மை, தூய்மை உள்ளோர் மேலோர். சுயநலம், மடமை, தீய நடத்தை, லோபித்தனம், பொய், பொறுமை, அசுத்த முள்ளவர் கீழோர்.

மேலிருந்து மேலல்லார் மேலல்லர்; கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.
பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

இவ்வாறு பெருந்தன்மையுடன் நடந்து புகழ்பட வாழவேண்டும். உள்ள எழுச்சியுடன் பெருஞ்செயல்கள் செய்து வாழ்வதே ஒள்ளிய புகழாகும். இஃதின்றி வாழ விரும்புவது இழிவாகும். மாந்தர், பெருமையாகப் புகழ் சிறந்து வாழுக!

## நூல் 14

## மெய்ப்பொரு ளுணர்ச்சி

---

### 118. வல்லான் வகுத்ததே வாழ்வின் வாய்க்கால்

இதுகாறும் சொல்லியவாறு உலக நாடகம் நடக்கிறது. இன்பதுன்பப் படலங்கள் அதைக் கவர்கின்றன. கல்வி, கலை, காதல், தொழில், குடும்பம், செல்வம், வறுமை, அரசியல் வாழ்வில் போர், போட்டி, பொறுமை, புகழ் முதலிய பல ஸ்வரங்களுடன் வாழ்வின் பாட்டு நவரச பாவனைகளை இசைக்கிறது. மனிதன் ஆயிரம் எண்ணுகிறான். ஏதோ இரண்டொன்று பலிக்கிறது. **கைசரும்** (Kaizer), **நெப்போலியனும்** எவ்வளவோ பயங்கரப்போர் புரிந்து உலகைக்கட்டி ஆள விரும்பினர். எல்லாம் கனவானது. படைகொண்டு நாடுகளை வெல்லப் புறப்பட்ட **சிக்கந்தர்**, சிந்துநதிமட்டும் தனது இரத்தக் கொடியை நட்டு ஊர்கூடதிரும்பாது **பாபிலோனில்** இறந்தான். அத்துடன் அவனது வெற்றியும் முடிந்தது. ஒன்று நினைக்க மற்றொன்று வருகிறது. மனிதனைவிடப் பெரிய ஒரு ஊழ்வலி உலகை ஆளுகிறது. அது முன்வினைப் பயன். ஊழ்வலி பெரிது. அதை விலக்க மனிதன் மதிவலியால் ஒரு சூழ்ச்சி செய்கிறான்; பலிப்பதில்லை. 'இதோ நான்' என்று ஊழ்வலி முன்னேவந்து நின்று தன் எண்ணத்தை நிறைவேற்றுகிறது. பாம்பிற்குப் பயந்த **பரிட்சித்து** மன்னன் நடுக்கடலில் மாளிகை கட்டி வாழ்ந்தும் என்ன பயன்? **தட்சகப் பாம்பு** மாறுவடிவாக வந்து அவனைக் கொத்தியே தீர்த்தது.

ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

நாம் ஒரு பொருளை வருந்திக் காப்பாற்றினாலும், விதி சம்மதமில்லாவிட்டால் அப்பொருள் நமக்குத் தங்காது. நமக்கென்று ஏற்பட்ட பொருள் புறத்தே கொண்டு போட்டுவிட்டாலும் போகாது, நம்மிடமே வந்து சேரும். கடலிற்போட்ட **ஏலேலன்** தங்கம் அவனுக்கே வந்ததன்றோ? **ஆகூழ், போகூழ்** என்று ஊழ் இரண்டு. இன்பமும் செல்வமும் ஆவதற்குக் காரணம் ஆகூழ். அவை நம்மை விட்டுப் போவதற்குக் காரணம் போகூழ். ஆகூழ் வரும்போது 'இன்ன முயற்சிசெய், செல்வந்தனாகலாம்' என்று தூண்டும். அந்த முயற்சி தானாகவே தோன்றும். திடீரென்று ஒரு வியாபாரம் செய்யத்தோன்றி அதில் **ராக்பெல்லரைப்** போல ஒருவன் கோடீச்வரனாகிவிடுவான். போகூழ் வந்ததோ, உடனே அவனைச் சோம்பல் என்னும் மூதேவி வந்து பிடித்துக்கொள்வாள்; தின்று, குடித்து, உறங்கி, மயங்கி, தமாஷ்செய்து, உள்ளதை விரைவில் வேட்டையாடித் தீர்த்துவிடுவான்.

ஆகூழாற் றோன்றும் அசைவின்மை; கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

(அசைவின்மை—அயரா முயற்சி.) அந்த இழவு போகூழ் வந்துவிட்டால், மனிதனுக்கு உள்ள அறிவையும் மழுக்கி, மடயனாக்கும். கூடிவருங்காலம் வந்தால் மனிதன் அறிவு விசாலமாகும். **தருமனுக்கும், நளனுக்கும்** சூதாட்டத்தில் மனமிரங்கச் செய்தது இழவூழ். **விவேகானந்தரைச்** சிகாகோவிற்கு (Chicago) ஊக்கியது ஆகூழ். நுண்ணிய பல நூல்கள் கற்றுப் பண்டிதனானால்தான் என்ன? அவனவனுக்கு இயல்பாக, ஊழின்பயனாக விதிக்கப்பெற்ற உண்மை

யறிவே மிகுந்து நிற்கும். கல்வியறிவு செயற்கையறிவே. உள்ளத்தறிவே இயற்கையறிவு. அந்த அறிவே ஒரு **முஸோலினியையும், பரமஹம்ஸரையும், குருநானகரையும்** ஆக்கியது. ஐ.சி.எஸ். (I.C.S.) பரீட்சைக்குப் படித்த **அரவிந்தர்** யோகியாக விளங்குகிறார். ஆகூழ் மற்றதை விலக்கி அவருக்குரிய நிலையில் அவரை வைத்தது. வீட்டில் எவ்வளவு பாடம் புகட்டியும், பள்ளியில் சேர்த்தும், லண்டனுக்கனுப்பியும் **ரவீந்திரநாத தாகூர்** (Rabindranath Tagore), ஒன்றிலும் மனம் பற்றாமல் ஒரு அரிய கவியாக மலர்ந்தார். அந்தே அவரது உண்மை யறிவு.

> நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
> உண்மை யறிவே மிகும்.

உலகத்தில் **ஹோமர்** (Homer) போன்ற மகாகவிகள் வறுமையால் வருந்திச் சென்றனர். படிக்கத்தெரியாத எத்தனையோ பேர் அரசாண்டனர்; உலகவாழ்வில் வெற்றி பெற்றுச் செல்வச் செழிப்புடன் பொலிந்தனர். **சிவாஜி, அக்பர், ரஞ்சித சிங்** முதலியோர் சீருஞ் செல்வமும் பெற்று இயற்கை யறிவால் அற்புதமாக உலகாண்டனர். பெரிய செல்வத்திற் பிறந்து அரசுரிமையிருந்தும் **புத்தரும், பர்த்ருஹரியும்** அனைத்தும் துறந்து ஞானிகளாயினர். வாழ்வில் சிறந்தோங்கலும், இவ்வாறு அறிந்து தெளிந்து ஞானிகளாதலும் உலகில் வெவ்வேறான இயல்பாம்.

> இருவே றுலகத் தியற்கை: திருவேறு;
> தெள்ளிய ராதலும் வேறு.

விதிவசத்தால் நல்லதுந் தீயதாகும்; தீயதும் நல்லதாகும். அடவி சென்ற இராமர் அரக்கர் குலத்தை ஒழித்தார். தருமரிடம் நாடுபறித்தாண்ட துரியோதனன் பாரதப்போரில் தனது தீய கிளைகளோடு மடிந்தான். நல்லது வரும்போது

உலகோர் நல்லதென்று இன்புறுகின்றனர். அந்த நல்லதும் நிலையில்லை, போய்விடும். தீயகாலம் வரும்போது அதுவும் நிலையில்லை. ஊழின் பயனைப் பொறுக்காமல் அல்லற் படுவதேன்? பரமஞானிகள், ஊழ்வினைகளைப் பொறுத்து அனுபவித்தே தீர்ப்பர். காலில் நாய்ப்புண் வந்து பூச்சி பிடித்தது **சதாசிவப்ரஹ்மேந்திரர்க்கு**. அப்புழுக்கள் கீழே உதிரும்போது, "கர்மமே, உன் கடனைத் தீர்த்துக்கொள்" என்று அவர் மீண்டும் எடுத்துப் புண்ணில் விட்டுக்கொள் வார். வனவாசத்திலும், அரசாங்கத்திலும் தருமபுத்திர் ஒரே சமமாக அறவழி பற்றியே நடந்தார். முடிசூட்டிக்கொள் ளச் சொன்னபோது இருந்த முகமலர்ச்சியே, வனம்புகச் சொன்னபோதும் இராமன் முகத்தில் காணப்பட்டது. அறிவாளிகள் இவ்வுலகின் சுகதுக்கங்களில் பற்றுவைக் காது சமநிலையிலிருப்பர்.

> நன்றுங்கால் நல்லவாக் காண்பவர், அன்றுங்கால்
> அல்லற் படுவ தெவன்?

வறுமையால் வருந்தி, உண்ண வழியில்லாதவர்கள் பேசா மல் துறவு பூணுவதற்கென்ன? ஊழ்வலியால் இன்னும் தேகாபிமானங்கொண்டு இரந்தாயினும் பிழைக்கிறார்கள் அல்லவா? விதி அவ்வாறுளது. பெரிய செல்வத்தைத் துறந்து ஓடுங்கையுமாகக் கிளம்புகிறார் **பட்டினத்தார்**. மந்திரிபதவி கிடைக்கும் அதிட்டத்தையும் உதறித்தள்ளி ஞானியாகக் கிளம்பிச் செல்லுகிறார் **தாயுமானவர்**. அவரவர் மனப்பக்குவத்திற்குத் தக்கபடி வினை விளைவதும், விடு வதும் ஆகிறது. எல்லாம் வல்ல ஒரு சர்வ சக்திமான், பரம் பொருள், ஆதிபகவன், ஒவ்வோருயிருக்கும் வாய்க்கால் வகுத்துள்ளான். அதன்வழியாகவே அது போயாகவேண் டும். கோடிப் பொருள் சேர்த்துக் குபேரனுயிருப்பவர்க்

கும், இறைவன் எப்படி விதிவகுக்கிறானே அப்படியே துய்க்கமுடியும். ஒரு ஜமீன்தாருக்குக் கோடிப்பொன் உள்ளது; அழகிய மனைவியர் உளர்; பணிப்பெண்கள் பலர்; பாட்டும் கூத்தும், கேளிக்கையும் செல்விமுடியா. ஆனால், ஆள் அலி ; என்ன பயன் ?

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

விதி யொன்று உள்ளது. அருமை நண்பர் வ. வெ. சு. ஐயரை அருவி விழுங்குவானேன் ?

## 119. ஞால வாழ்வு நாடகம் போலாம்

எதற்கும் இங்கு நிலைப்பில்லை. இரவும் பகலும்போல இன்ப துன்பங்கள் வருகின்றன. தோற்றமெல்லாம் மாற்றம். படக்காட்சி மாதிரி நிகழ்ச்சிப்படலங்கள் சுழன்று சுழன்று செல்லுகின்றன காலத்திரையில். மனை, செல்வம், பட்டம், பதவி, அரசு, சேவகம் எல்லாம் உலகமேடையில் வேடம்போட்டாடிச் செல்லுகின்றன. இவ்வாறு நிலையற்ற பொருள்களை நிலையென்று நினைக்கும் அற்ப மதிமயக்கம் இழிவாகும்.

நில்லா தவற்றை, நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

உலகம் ஒரு நாடகக்கொட்டகை, கூத்தாட்டவை. உறவினர், நண்பர், சீர் சிறப்புகளுடன் வரும் பெருஞ்செல்வம், நாடகம் பார்க்கும் சபையோர், அவைக்குழாம். ஆட்டம் ஆனதும் கூட்டங் கலைந்து போகும்.

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்,
போக்கு மதுவிளிந் தற்று.

'செல்வோம்' என்று செல்வம் செல்லும். அது நிலையற்றது; ஒருவரிடமும் நீடித்து நிற்காது. **சந்திரகுப்தன், அசோகன், ராஜராஜ சோழன், நெடுஞ்செழியன், சேரன் செங்குட்டுவன், சிவாஜி** முதலியோர் ஆண்ட செல்வமெல்லாம் இன்று அன்னியர் கையில் இருக்கிறது. நாளை யார் கைக்கு மாறுமோ? அவர்கள் செய்த அறங்களும், குடிகளிடம் காட்டிய அன்புமே இன்று சரிதையேறி விளங்குகின்றன. பாண்டியர் இல்லை; அவர்கள் வளர்த்த **தமிழ்ச்செல்வம்** உள்ளது. ராஜராஜன் இல்லை; அவன் கட்டிய கோயிலும், கலாசாலைகளும் உள்ளன. ஆதலால், செல்வம் உள்ள போதே பலருக்குப் பயனாகும்படி வழங்கவேண்டும்.

அற்கா வியல்பிற்றுச் செல்வம்; அதுபெற்றால்,
அற்குப வாங்கே செயல்.

ஆங்கே செய்க. ஏன்? நாள் என்பது ஒரு வாள். அஃது உயிரை அறுத்துக்கொண்டேயிருக்கிறது. ஒவ்வொரு நாளும் மனிதன் மயானத்தை நோக்கி யாத்திரை செய்து கொண்டேயிருக்கிறான். சவலைக்குழந்தை, பையன், வாலிபன், காதலன், தந்தை, தாத்தா ஆகி ஒருநாள் நாச்சாக, விக்கல் எழ, சுவாசம் இழுக்கிறது. உடலைப் போட்டுவிட்டு, உயிர் மாயமாகப் பறந்து எங்கோ செல்லுகிறது. அவ்வாறு மரணவத்தைப் படுமுன்பே, நல்ல அறவினைகளை விரைந்து செய்யவேண்டும். நேற்றிருந்தவன் இன்றில்லை—இதுதான் உலகின் பெருமை.

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

'அடுத்த நிமிஷம் என்ன நடக்குமோ, வாழுவோமோ, விதி எப்படியோ' என்று ஒருபொழுதும் அறியாத இம்மாந்தர் கருதும் எண்ணங்களோ, கோடியல்ல, பலகோடி!

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

எத்தனையோ மனக்கோட்டை கட்டுகிறான் மனிதன்—அகங்கார வுணர்வால். அனைத்தையும் ஏமாற்றி, ஒருநாள் முட்டையைத் தனியே உடைத்தெறிந்து, புள் பறந்து செல்வதுபோல, உடலை விட்டு உயிர் பறந்து செல்லுகிறது. உடலுக்கும் உயிருக்கும் உள்ள நட்பு, முட்டைக்கும் குஞ்சுக்கும் உள்ள நட்புபோல நிலையற்றது.

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே,
உடம்போ டுயிரிடை நட்பு.

விழிப்பும் உறக்கமும் போலவே பிறப்பும் இறப்பும் உண்டாகும்.

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

உயிர் உடம்பில் குடிக்கூலிக்கிருக்கிறது—அதற்கு என்றுமிருக்க ஒரு நிலையான வீடு அமைய வில்லைப்போலும்!

## 120. உள்ளத் துண்மை யுணர்ந்தால் முத்தி

இவ்வாறு நிலையற்ற வாழ்வுக் கூத்தின் பின்னேயிருந்து அதை யியக்கும் ஒரு பொருள் உள்ளது. ஆட்டக்காரன் இல்லாதுபோனால் பாவை ஆடுமா? பற்றற்ற சாட்சியாயிருந்து, தனது சக்தியால் ஒரு பரம்பொருள் உலகை இயக்கி, நாடோறும் ஆன்மாவைப் பக்குவப்படுத்தித் தன்பால் இழுக்கிறது. அப்பரம்பொருள் ஒவ்வொருவர் உள்ளத்தும் உள்ளது. இறைவனை "**உள்ளமே**" என்கிறார் **அப்பர்**. 'நான் இந்த உடலல்லன், உலகல்லன், நான் யார்? இவ்வுடல் வீழினும் நான் வாழுகிறேன். நான் இவ்வுட

லின் இன்பதுன்பக் கனவுகள் அற்ற **சுத்தான்மா'** என்று நன்கு ஞானவிசாரம் செய்து, (ஓர்ந்து), உள்ளத்தில் உள்ள அந்த ஆன்மவடிவைத் தியானிக்க வேண்டும். ஒருதலையாக, புலன்களையும் மனத்தையும் வேறுவழிச் செல்லவிடாது, தாரணைசெய்து, ஒருமனப்பட்டு, உள்ளப்பொருளான ஆத்மாவையே தியானித்தடையவேண்டும். எனில், அவனுக்குப் பிறவித் துயரின் நினைப்பே வேண்டா. அவன் ஜீவன் முக்தி பெறுவான்.

ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

இந்த ஆத்மசித்திதான் உயர்ந்த அறிவு. மற்றவெல்லாம் வீண் மயக்கம்; பிறவிக்கு வித்து. பிறவித்தொல்லை பெருந் தொல்லை. பிறவி வருவதேன்? உள்ள பொருளான ஆன்மாவை மறந்து, பொருளற்ற அநாத்ம வஸ்துக்களை உண்மைப் பொருளென உணரும் மயக்கத்தால், மாயத்தால், பொய்யுணர்வால் துன்பப்பிறவி, மாண்பற்ற பிறவி யுண்டாகிறது.

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானு மாணாப் பிறப்பு.

தோற்றத்தில் மயங்காத மாசற்ற காட்சியாளரான ஆத்ம ஞானிகளுக்கு இந்தப் பொய்யிருள் மாயம் நீங்கி, பிறவித் துயர் ஒழிந்து, ஜீவன்முக்தியின்பம் உண்டாகும். 'உடல், உலகம் இவை நானல்ல; நான் ஆன்மா' என்று ஐயமறத் தெளிந்த சுத்தான்ம ஞானிகளுக்கு, மண்ணுலகைவிட விண்ணுலகம் சமீபத்திலிருக்கிறது. அவர்கள் இவ்வுலகிலேயே விண்ணின்பம் பெற்று ஜீவன் முக்தராக வாழுவர். ஞானியின் உடல் உலவும் விண். மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகளால், ஊறு, சுவை, ஒளி, மணம், ஒலி

ஆகிய ஐந்து உணர்வைப் பெற்ற மானிடத்தால் பய னென்ன? விலங்குகளும் இவ்வுணர்வைப் பெற்றுள்ளன. இவற்றிற்குமேல் மனமும், அஃது உள்ளத்தில் அடங்கிய போது ஆன்ம உணர்வும் எய்துகின்றது. அந்த ஆன்ம வுணர்வே மெய்யுணர்வு. அதை யடையாவிட்டால் ஐயு ணர் வெய்திய மனிதப்பிறவி பயன்பெறாது.

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

எந்தப்பொருள் எத்தகைய இயல்புள்ளதாயினும் சரி; இனம், வகை, நிறம், வடிவுகளால் எப்படிப்பட்ட தாகுலும் சரி; இத்தோற்றங்களுக்கெல்லாம் பின்னால் ஒரு மெய்ப் பொருள் உள்ளது; அஃதே அந்தராத்மா. அதைக்காண் பதே அறிவு. இதன் விரிவான விளக்கம் **இன்பமாலை**யிற் காண்க. அழியும் தோற்றப் பொருள்களின்பின்னே அழி யாத ஆன்மாவைக் காண்பவனே அறிவாளி யென்பது கீதை, உபநிடதம், பிரமசூத்திராதி நூல்களின் சம்மதம்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

மனிதனது மெய்ப்பொருள் ஆத்மா; உடல் விகாரம், சட்டை. இங்கு, அத்யாத்ம நூல்களைக் குருவிடம் வணங் கிக் கற்று, தியானத்தால் மெய்பொருளை உள்ளே கண்ட வர்களே மீண்டும் இந்த ஊன்பிறவிக்குத் திரும்பாத ஞான முக்திநெறியைப் பெறுவர்.

கற்றீண்டு, மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

மடைமையால் பிறப்புண்டாம். அந்தப் பேதமை நீங்க, முக்திக்குச் சிறந்த சாதனமாகும் செம்பொருளான ஆத்மா

வைத் தியான மோன சமாதிகளாற் காண்பதே அறிவு. அச் செம்பொருளையே எல்லாம் சார்ந்திருக்கின்றன. அஃதின்றி எதற்கும் நிலையில்லை, இயக்கமில்லை. அதற்கு அஞ்சியே காற்று அசைகிறது, கதிர் காந்துகிறது என்கிறது உப நிடதம். அனைத்தும் உண்மைப் பொருளான ஆன்மா விலேயே ஆதாரப்பட்டுள்ளதை உணர்க. மற்ற மாயச் சார்புகளான இருவினைக்கட்டுகளையும், ஆசாபாசங்களையும் நீக்குக. அந்தப் பற்றற்ற நிலையிலே ஒழுகினால், மனிதவாழ் வைச் சார்ந்து துன்புறுத்தும் ஆசை, கவலை பிணி, இடர் கள் ஆகிய நோய்களெல்லாம் கிட்டவராதொழியும். ஆன் மாவைச் சார்ந்தவனை நோய்,கவலை, இருவினைப் பாசங்கள் முதலியன சாரா.

> சார்புணர்ந்து, சார்பு கெடவொழுகின், மற்றழித்துச்
> சார்தரா, சார்தரு நோய்.

இந்தநோய் எதனால் உண்டாகிறது? காமக்குரோதத்தால் என்கிறது **கீதை**; காமம், குரோதம், லோபம் மூன்றும் நரக வழி. காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்றின் பெயர்கூட இல்லாது கெடவேண்டும். அப்போதுதான், மெய்ப் பொருள் எய்திப் பொய்த்துயர் ஒழியும் என்கிறது **பொய்யா மொழி**.

> காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
> நாமங் கெடக்கெடு நோய்.

இந்த மூன்று நோய்களையும் போக்கி, அனைவரும் மெய்யின்பப் பொருளான சுத்தான்மாவை யடைந்து நடமாடுங் கோயில்களாக வாழ்க!

ஓம், உண்மை, அறிவு, இன்பம், அமைதி!

---

# நூல் 15

## துறவுந் தவமும்

---

### 121. நெஞ்சத் துறவிலேல் வஞ்சத் துறவு

இவ்வாறு காமம் வெகுளி மயக்கங்களைத் கடந்து தியான சமாதிகளால் ஆத்மசித்தி பெறுவதற்குத் துறவு இன்றியமையாதது. துறவென்றால் வெளி வேட மன்று, மனத்துறவு. போலித்துறவு துறவறத்திற்கே மாசாகும். மனமடங்காத போலித் துறவிகளாலேதான் இக்காலத்தில் துறவறத்திற்கே மதிப்புக் குறைந்துள்ளது. காஷாயம், தண்டு, கமண்டலம், சபமாலை, விபூதிப்பட்டை, பின்னால் சிஷ்யன் எல்லாம் தடபுடலாகக் கொண்டு, மனத்தில் 'யாரை ஏமாற்றி காசு பறிக்கலாம், எந்தப் பெண்ணை மந்திர தந்திரங்களால் கவரலாம்' என்று வஞ்சம் நினைக்கும் போலித்துறவி, அறியாதவர்களைச் சிலநாட்கள் ஏமாற்றலாம். ஆனால் அவன் உடலை ஆக்கிய பஞ்சபூதங்களும் உள்ளிருந்து, 'அட பைத்திகாரா! எத்தனைநாள் இப்படி ஊரை ஏமாற்றுவாய்? உன் குட்டு வெளியானால், உதைதான் விழும்! வெட்கமில்லையா?' என்று சிரித்து இடிக்கும்!

> வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
> ஐந்து மகத்தே நகும்.

ஆள் ஆசானபாகு, கம்பீரமான தோற்றம்; காவியுடையும் சேர்ந்து காம்பீர்யத்தை அதிகப் படுத்துகின்றது. எனினும் என்ன? உள்ளே, 'மனதாரக் குற்றம் செய்கிறோம்'

என்ற உணர்ச்சி குறுகுறு என்கிறது. இராவணத்துறவி காமுகக் கருவிதானே ? மனத்தை அடக்க வல்லமை யில்லை! காவியுடுத்துச் சாமியென்று கம்பீரமாகப் புறப்படுகிறான். அவனது சாமியார் கோலம் எப்படிப்பட்டது? பசுவானது புலித்தோல் போர்த்து, ஆட்களைப் பயமுறுத்திப் பயிர்களை மேய்ந்து திரிவதுபோன்றது. தவவேடம் பூண்டு, அதற்கு ஏற்காத பெண், பொன் வேட்டையாடித்திரிதல் எப்படிப் பட்டது? புதரில் மறைந்து வேடன் பறவைகளை அம்பால் எய்தும், கண்ணிவைத்தும் பிடிப்பது போன்றது.

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து,
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

'நாம் பற்றற்றோம், முக்திபெற்றோம், வரந்தருவோம்' என்று பேசி, மக்களை மயக்குகிறான் போலித்துறவி. ஆனை இரகசியமாகக் கவனித்தால் ஒழுக்கம் சுத்தமோசம்; காஷாயக் கள்ளன் ; ஒருநாள் ஆள் அகப்பட்டுக்கொள்ளு கிறான். ஊரார் செம்மையாக விசாரித்து அனுப்புகின் றனர். அப்போது, 'ஐயையோ எற்று, எற்று, என்செய் தோம், என்செய்தோம்' என்று இரங்கும்படி அவன் பல விதத் துன்பங்களுக்கு உள்ளாவான். வசவு, கேலி, அவ மானம் எல்லாம் வரும்!

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்கம், எற்றெற்றென்(று)
ஏதம் பலவுந் தரும்.

காமக் குரோதாதிகளை வென்று மனத்துறவு கொள்ளாது, வேடம் புனைந்து, துறந்தவர்போல உலகை வஞ்சித்து வாழும் போலியைப் போலக் கொடிய பாவி வேறில்லை. அவனால் துறவுக்கே கெட்டபேர் உண்டாகும். குன்று மணி ஒருபுறம் சிவப்பாயிருந்து மூக்கில் கரியாயிருக்கிறது.

அதுபோல, இப்போலித் துறவியின் உடை காவி ; உள்ளம் கரி. நீராடி, வேடங்களில் மறைந் தொழுகும் மாந்தர் பலர் ; மனத்தில் மும்மல மாசு படிந்திருக்கும் ; வெளிக்குச் சிறந்த துறவியெனக் காண்பார். அம்பு நேராக, அழகாகத்தான் இருக்கிறது ; பாய்ந்தால் உயிரை வாங்குகிறது. அது கொடிது. யாழ் வளைந்திருக்கிறது ; வாசித்தால் செவிக்கினிது. அதுபோல, தோற்றத்தால் அல்ல ; காமம், வெகுளி, வஞ்சம், பொய் களவற்ற நன்னடத்தையாலேயே துறவியை அறிக.

> கணைகொடிது, யாழ்கோடு செவ்விதாங் கன்ன
> வினைபடு பாலாற் கொளல்.

உலகம் பழிக்கும் தீய ஒழுக்கங்களை ஒழித்தால், தலையை மொட்டையாக மழித்தலும், சடைமுடி வளர்த்தலும் வேண்டா.

> மழித்தலு நீட்டலும் வேண்டா, வுலகம்
> பழித்த தொழித்து விடின்.

## 122. அவா வொழிந்தால் அற்றது பிறவி

பிறவிப் பிணியைத் தீர்க்கவேண்டும். உயிர்களுக்கு என்றும் தப்பாத பிறவியை விளைவிக்கும் வித்து ஆசை. ஆசையால் பற்றும். பற்றால் பிறப்பாம்

> அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
> தவாஅப் பிறப்பீனும் வித்து.

மனிதனாகப் பிறந்து ஒருவன் விரும்பவேண்டிய இன்பம் என்ன ? மீண்டும் இந்த வினையுடலிற் பிறந்து தொல்லைப் படாத நித்திய சுத்த முக்தியே. அதையடையும் வழி, முத்தியைத்தவிர வேறு எந்தப் பொருளையும் வேண்டாத வைராக்கியமே.

வேண்டுங்கால், வேண்டும் பிறவாமை; மற்றது,
வேண்டாமை வேண்ட வரும்.

" ஆசையறுமின்கள், ஆசையறுமின்கள், ஈசனோ டாயினும் ஆசையறுமின்கள் " என்றார் **திருமூலர்.** ஆசையால் துன் பமும், ஆசைவிடவிட ஆனந்தமும் விளையும். 'ஒரு பொரு ளும் வேண்டா' என்ற பற்றின்மையே, பந்த பாச மோக மின்மையே, ஒருவன் அடையத்தக்க உயர்ந்த செல்வம். அதைப்போன்ற இன்பச் சுதந்திரச் செல்வம் இவ்வுலகில் இல்லை. வானிலும் அதைப்போன்ற பெருஞ் செல்வம் இல்லை.

வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை,
யாண்டு மஃதொப்ப தில்.

ஆசை அழுக்கு. ஆசையின்மையே தூய்மை. அத்தூய்மை, வாய்மையான ஆன்மப்பொருளையே வேண்டித் தியானஞ் செய்தால் வரும். நிலை பொருளான பரமாத்மாவைத்தவிர வேறொன்றும் வேண்டற்பாலதன்று. மற்றெல்லாத் தோற் றப்பொருளும் மாறும், வீழும், அழியும். **பிரமமே** சத்தியம்; **சத்தியமே** வெற்றி ; ' சத்தியத்தினும் உயர்ந்த அறம் இல்லை . என்றனர் ஆன்றோர். அந்த உண்மையை நாடிப் பொய்த் தோற்றங்களிற் பற்றுவைக்காதவனே பரிசுத்தவான்.

தூஉய்மை யென்ப தவாவின்மை; மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

அவாவற்றவரே, பற்றற்ற, துயரற்ற முக்தபுருஷர். மனத்தே அவாவி, புறத்தே துறவிபோலக் காட்டும் பிறர் அந்த முக்தர்களைப்போலப் பிறவிப் பிணியை விடுத்துக் கரையேறிய சுதந்திரர்களல்லர். எத்தகைய அவாவிருந் தாலும் ஒருவன் அமைதியா யிருக்கமுடியாது. "சங்கற்

பங்களை அறவே விடுத்து, இந்திரியங்களிலிருந்து மனத்தை உள்ளேயிழுத்து, ஆத்மாவிலேயே அசையாமல் இருத்துக" என்று **கீதை** உபதேசிக்கிறது. இந்த அவாவை முற்றத் துறந்து அசையா நிஷ்டையில் போதியடி வீற்றிருந்தே **புத்தர்** முக்தரானார். அவர், "ஆசையே துன்பவிதை, அதை ஒழித்தலே இன்பவிண்" என்று உபதேசித்தார். இந்த ஆசையை முற்றும் ஒழித்து, நாடு, நகர், செல்வம், அனைத்தையும் துறந்தே **மகாவீரர்** கடுந்தவம் புரிந்து சித்திபெற்றார். இந்த ஆசைப்பற்றின்றி, திருப்புளிப் பொந்தில் புகுந்து பல்லாண்டுகள் தவம்புரிந்து தெய்வவொளிபெற்ற **நம்மாழ்வார்**, "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்று அழுந்தக் கூறினார்.

அற்றவ ரென்பார் அவாவற்றார்; மற்றையார்
அற்றாக வற்ற திலர்.

மனிதனை வஞ்சிப்பது அவா. மனதை அடக்கிய வைராக்கியவான்களையும் இந்த அவா பதம்பார்க்கும், இழுத்தலைக்கும். ஆதலால், இந்த அவாவை அஞ்சி விலகவேண்டும். அப்போதே கடவுளறம் கைகூடும், துறவு நிலைக்கும்.

அஞ்சுவ தோரு மறனே; யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

அவாவை முற்றும் அறுத்தெறிந்தால் அழியாத முக்திநிலையெய்தும்; தவவினை வேண்டியவுடனே வரும். அவாவில்லார்க்குத் துன்பமில்லை. அவாவிருந்தால் துன்பம் தப்பாது மேன்மேலும் அலைபோல வந்து மோதும். அவா துன்பத்திற் றுன்பம்; பெருந்துன்பம். அது கெட்டால் இடையறாத பேரின்பம் வந்து கைகூடும்.

இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்,

ஆசைக்கு அளவுண்டா? நெருப்பிற்கு எவ்வளவு விறகு கொடுத்தாலும் அது அவ்விறகை உண்டு, மேன்மேல் வளர்ந்தேறுவதுபோல, விஷய சுகங்களைக் கொடுக்கக் கொடுக்க உண்டு மேலோங்கும் ஆசைத்தீ. ஆசை அடங்காது, நிறையாது, தினவெடுத்துக் கொண்டேயிருக்கும். அதை விட்டொழித்தால் அக்கணமே பேராத இயல்நிலை, சகசநிலை கைகூடும்.

## 123. நண்ணிய தவத்தால் எண்ணிய தாகும்

இவ்வாறு மனம் புறஞ்செல்லாமல் உள்ளடக்கி, மற்ற புறப்பற்றுக்களை யொழித்து, உண்மைப் பொருளில் நிலை பெறுதல் சாமானியமன்று. அதற்கு நீண்ட தவம் வேண்டும். அந்தத் தவங்கூட முன்னே தவஞ்செய்து விட்ட குறையால் எய்தும். தவமும் தவமுடையார்க்காகும். தவமே கண்ணான வைராக்கிய சித்தருக்கே தவம் கைகூடும். ஆசையாணவ மாயங்களால் சித்தம் சலிப்பவர் தவத்தை மேற்கொள்வது வீணாகும். தவத்திற்கு அளவற்ற, வருடக்கணக்கான பொறுமை வேண்டும். புறப்பற்றுக்களை அடக்கும் போது, மனமும் புலன்களும் பெரிய புரட்சி செய்யும்; உள்ளடங்கிய புலன்களை வெளியே இழுக்கும். அவற்றையெல்லாம் ஞானவிசாரத்தாலும், வைராக்கிய சாதனங்களாலும் அடக்கி வெல்லவேண்டும். உடலுக்கு வரும் துன்பங்களையெல்லாம் பொறுக்க வேண்டும். நிஷ்டையிலிருக்கும்போது விலங்குகள், பூச்சிகள், மனிதர் செய்யும் தொல்லைகள் பல. 'அவையெல்லாம் நமக்கன்று. நமது நிலை அழியாத ஆன்மா' என்ற உறுதியுடன் தாங்கவேண்டும். காமக்குரோதங்கள் வலைவீசி நம்மை யிழுக்கும். அந்த வலையைக் கட்டுடன் அறுத்தெறியவேண்டும். தன்னை மயக்க வந்த பெண், பொன் மாயங்களை, "உடையானைக்கடு

கச் சென்றடைவேன் ; நும்மால் ஆட்டுணேன் ; கெடுவீர்காள்" என்ற வைராக்கியத்துடன் விலக்கினார் **அப்பர்.** பொன் புவி மாயத்தால் தம்மை மயக்க முயன்ற சாத்தானை, "சாத்தானே, பின் சென்றொழி" என்று விரட்டி யடித்தார் **ஏசுநாதர்.** அப்படிப்பட்ட வைராக்கியம் வேண்டும். தாயார் தம்முன்னின்று அழைத்து, அழுது கதறியபோதும் **பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள்** தமது சகசநிலை மாறாது "சும்மாயிருக்கையே சுகம்" என்று எழுதிக்காட்டித் தம் உள் வேலையைக் கவனித்தாற்போல இருக்கவேண்டும். **குருகோவிந்தன்** யமுனைக் காட்டில் மஹாகாளியின் சாட்சாத் காரத்திற்காகக் கடுந்தவம் புரியும்போது, சீடர்கள் வந்து முறையிட்டழைத்தனர். "இப்போது சமயமில்லை" என்று போகச்சொன்னார். அவ்வளவு தீவிரமான வைராக்கியத்தில் தான் தவம் பலிக்கும். தவத்தை மேற்கொள்வோன் தனக்கு உற்ற துன்பங்களைப் பொறுக்கவேண்டும் ; எவ்வுயிர்க்கும் தன்னால் எவ்விதமான துன்பமும் வராது காக்கவேண்டும். அதுவே தவத்தின் உருவம். அத்தகைய அஹிம்ஸா தருமமே மனத்தைப் புனிதமாக்கும்.

உற்றநோய் நோன்றல், உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

இப்படித் தவம்புரிவோருக்கு உணவு, உடை, தகுந்த இடம்தருதல் இல்லறத்தாருக்குப் பெரும் புண்ணியம் ஆம். நமது பாரத நாட்டு மன்னர், முனிவர் பணியை முதற்கடமையாகக் காத்தனர். அவ்வாறு தவசித்தர் சமூகத்தின் ஆதரவு பெற்றுத் தவக்கனலை மாந்தர் நலத்திற்காகப் பரப்பிய நாட்களிலேதான், தமது நாடு, எல்லாச் செல்வமும் கல்வியும் கலையும் வேதமும் நிறைந்து, பூலோக சுவர்க்கம் போலப் பொலிந்தது. தவத்தினருக்கு இப்படித் தொண்டு

செய்யவே, மற்றப் பலகோடி மக்கள் இல்லறத்தில் இருக்கின்றனர் போலும். தவத்தால் ஆகாததொன்றுமில்லை. உலகில் அறம் நிறுவி, தீய அரக்கரை ஒழிக்க அவதார மூர்த்தியான விஷ்ணு, நெஞ்சமாகிய பாற்கடலில், குண்டலிப் பாம்பின் மேல் துரியத்துயில்கொண்டு முதலில் தவம் புரிகிறார். அவரை வேண்டித் தேவரும் தவம்புரிகின்றனர். பிறகு தான் தவசக்தியால் பகவான் அவதரித்து உலகைக் காப்பாற்றுகிறார். பாரத தேசத்தின் உச்சியில், கைலையில், சிவபிரானார் தவம் புரிகிறார். தென் முனையில் திருக்குமரி தவம் புரிகின்றாள். பாரத நாகரிகம் தக்கனல் விரிவு. தவத்தினால் மனிதனிடம் மறைந்துள்ள ஒரு சக்திக்கனல் எழுந்து உடலெல்லாம் பரவும்; தன்னைச் சுற்றிலும் உள்ளவர்க்கும் பரவும். அதன் சக்தி அபாரமானது. அந்தச் சக்தி தான் **பரமஹம்ஸரையும்**, **ரமணமஹரிஷிகளையும்** உலகம் வணங்கச்செய்தது. காளிகோவில் மூலையிலும் திருவண்ணாமலைக் குகையிலும் வளர்ந்த இந்த இரண்டு தவசக்திகள் மேற்கையும் கிழக்கையும் இருந்த இடத்தினின்றே திக்விஜயம் செய்கின்றன. நிலைபெற்ற தவத்திற்கு எல்லாச்சக்தியும் உண்டு. வசிட்டர், தவசக்தியால், கௌசிகன் சேனை முழுதையும் தோற்கடித்தார். தவத்தின் பெருமையறிந்து கௌசிகர் அரசைத்துறந்து தாமே தவம்பூண்டார். தமது தவசக்தியால் விசுவாமித்திரர் ஐந்துலகங்களைப் படைத்தார். அத்திரி, அகத்தியர் முதலிய முனிவர் உதவிய மந்திரக் கணைகளே இராமனுக்கு வெற்றி அளித்தன.

ஒன்னார்த் தெறலும், உவந்தாரை யாக்கலும்,
எண்ணிற் றவத்தான் வரும்.

**சதாசிவ ப்ரஹ்மேந்திரரள்** போன்ற மகாதபசிகள் நோய் தீர்த்தனர்; மூடனைப் புலவனாக்கினர். தவத்தினால் நாம்

வேண்டியபொருள் வேண்டியபடி கைகூடும். தவப் பலன் தப்பாது கைமேல் கிடைக்கும் தனது நாட்டை மீட்கவும் காக்கவும், துருவன், குருகோவிந்தன் முதலிய மகான்கள் எவ்வளவோ தவமேற்கொண்டனர். சமர்த்த **குரு ராமதாஸர்** நீண்ட மந்திரத் தவத்தால் பெற்ற சக்தி யினுலேதான் சிவாஜி ஒரு பெரிய சத்திரபதியாகி, நாட்டை யும் அறத்தையும் காத்தான். **புத்தரின்** தவப்பயனே, **அசோகன்** புகழுக்குக் காரணம். எதைநோக்கித் தவம் புரிந்தோமோ அது கிடைக்கும். அதனுலேதான் முற்காலத் தில் அரக்கர் கூடத் தவம்புரிந்து ஆயுளும் ஆற்றலும் பெற் றனர். பரிபூரணமான சகஜநிலை பெற்ற மகான்விளங்கும் சமுதாயம் எல்லா நலங்களும் பெறும். அவரது தவக் கனல், சுற்றும் கதிர்பரவி மக்களுக்கு அளவற்ற நன்மை செய்யும்.

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

தவஞ் செய்பவர் பிறர் தமக்குச் செய்யும் இன்னல் இடர் களைப் பொறுத்து, உலக சம்பவங்களில் மனங்கலங்காமல் தமக்குரிய அத்யாத்ம கர்மங்களை அடக்கமாகச் செய்து கொண்டிருப்பர். தவசித்தர் அன்னியங் காணுது, தமது ஆத்மநிட்டையே கருமமாயிருப்பர். பொருளின்பங்களை வேட்டையாடித்திரியும் பிறர், ஆசைவலையிற் சிக்கித் தமது நித்திய சுகத்திற்கும், பிறர்க்கும் அவஞ் செய்வர். உலகில் தீமையற்று, அறவழி வாழவும் தபோபலம் வேண்டும். அதற்காகத்தான் இல்லறத்தாருக்கு நல்லொழுக்கம், ஈகை, விருந்தோம்பல், இன்னு செய்யாமை, பொறுமை முதலிய பல நியமங்கள் பெரியோரால் விதிக்கப்பட்டுள்ளன. வள் ளுவர் காட்டும் இல்லறமும் மனைவியுடன் புரியும் அருந்தவ

மாகும். தவஞ்செய்பவர் தமது நிலையில் உறுதியாயிருந்து தவவினை புரிவர். தவமில்லாத பிறர், புலன்களைக் கண்டபடி சிதறவிட்டுத் தீங்கியிழைப்பர்.

> தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
> அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.

பொன்னைத் தீயில் உருக்கவுருக்க மாற்று மிகுந்து ஒளியோங்குகிறது. அதுபோலத் தமக்கு வரும் துன்பங்களையெல்லாம் பொறுத்துப் பொறுத்துச் சுடச்சுட நோற்கும் தவசிகளுக்கு மேன்மேலும் ஆத்மப்பிரகாசம் கதிரிட்டொளிரும். தவக்கனலில் மனத்தை வாட்ட வாட்டச் சுத்தமும், ஞானமும் மிகுந்தொளிரும்.

> சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
> சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

**மகாவீரர்** அவ்வாறு நோற்றுக் கேவலஞானம் பெற்றார். உயிரைத் தனது வசப்படுத்தி ஆத்மசித்தி பூதசித்தி மனோஜயம் பெற்ற மகானை மற்ற மன்னுயிரெல்லாம் வணங்கும். தம்மை வென்ற தவசித்தருக்குத் தமது தவக்காந்தத்தினால் மௌனமாகப் பிறர் மனத்தை வெல்லும் சக்தியுண்டு. தவயோகிகள் முன் அமர்ந்தாலே ஒரு சக்தி நமது மனத்திற் பாய்ந்து நம்மைப் பரிசுத்தமாக்கி அவர்பால் ஈடுபடுத்தும்.

> தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
> மன்னுயி ரெல்லாந் தொழும்.

நீண்ட தவஞ்செய்து சக்திபெற்ற தீரர், கூற்றையும் கடந்து அமரவாழ்வு வாழ்வர். "ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம் நடுங்குவதில்லை; நமனுமங் கில்லை" என்றார் திருமூலர். மார்க்கண்டன் தவத்தால் சிவனருள் பெற்றுக் கூற்றையும் மாற்றி நீடூழி வாழ்ந்தான்.

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

தவத்தால் நினைத்தது கைகூடும். உலகில் பலர் ஆற்றலும் அறிவும் பொருளும் இல்லாதிருப்பதற்குக் காரணம் தவக் குறைதான். சிலர்தாம் பொறுமையுடன் தவசித்தி பெறு கின்றனர்; பலர், தவமே கருதாது, ஆசைத் தளையில் அகப் பட்டு, இயற்கைச் சக்கிரத்திற் சுழல்கின்றனர்.

இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்; பலர் நோலா தவர்.

## 124. பற்றற் றிறைவனைப் பற்றுத லின்பம்

தவத்தின் உயிர்நாடி துறவு—ஆசை ஆணவ மாயங் களினின்று விடுபடல். உலகில் ஒவ்வொன்றிலும் இன்ப துன்பங் கலந்தேயுள. எங்கெந்தப் பொருளை விலக்கு கிறோமோ அதனால் வரும் துன்பம் நமக்குக் குறைகிறது. அந்தப்பொருள் நம்மை அடிமைப்படுத்தாது; பிறரைக் கெஞ்சாது சுதந்திரமாக வாழலாம்.

யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன்.

"மனத்துறவுடன் அனுபவி" என்றார் வேதமுனிவர். "பற் றறு, தெய்வ வேள்வியாகத் துய்" என்றார் கீதாசாரியார். 'இன்பம் வேண்டுமானால், துற; துறந்தபின் உன்னைத்தேடி வரும் இன்பங்கள் மிகப்பல' என்கிறார் வள்ளுவர். அனைத் துந் துறந்த புத்தருக்கும், கிறிஸ்துவிற்கும், மணிவாசகருக் கும், பரமஹம்ஸருக்கும் உலகில் எவ்வளவு சிறப்புகள் நடக்கின்றன! எத்தனை கோயில்கள், எத்தனை கலைகள், எத்தனை விழாக்கள் அவர்கள் பெயரால் நடக்கின்றன!

வேண்டி னுண் டாகத் துறக்க ; துறந்தபின்
ஈண்டியற் பால பல,

ஆனால் எல்லாரும் துறவி என்று கிளம்பிவிட முடியுமோ? ஆ! துறவு எவ்வளவு கடினம்! ஐம்புலன்களையும் அடக்கி யாளவேண்டும். மனிதன் வேண்டும் உலகின்பங்களையெல் லாம் ஒருங்கே விடவேண்டும். திருவருட் செல்வம் விரும் பிய மாணிக்கவாசகர் மந்திரி பதவி, பொருள், வீடு, சுற்றம் அனைத்தையும் விடுத்தார்; "ஐய, நின்ன தல்ல தில்லை, மற்றோர் பற்று" என்று அரனடியே பற்றினார். சுற்றத்தார் பித்தனென்றனர்; அரசன் ஒறுத்தான்; அனைத்தையும் பிள்ளை விளையாட்டென்று பொறுத்து, "இன்றோர் இடை யூறு எனக்குண்டோ? நன்றே செய்வாய்; பிழை செய்வாய்; நானோ இதற்கு நாயகமே; பாரொடு விண்ணாய்ப் பரந்த வெம் பரனே, பற்றுநான் பற்றிலேன் கண்டாய்!" என்று இறைவனடியே பற்றியிருந்தார். அதுபோல ஐம்புல னடக்கி, மானாபிமானம் ஆசையாணவம் அனைத்தையும் விடவேண்டும். அதுவே துறவு.

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை ; விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

தனக்கென்று மனை, பொருள், சங்கற்பங்கூடக் கூடாது. அதுதான் தவத்தினர்க்கு இயல்பானது. "96 பவுண்டு உடல்தான் என் சுமை" என்றார் **ராமதீர்த்தர்**. எதை நாம் பிரியமாக வைத்திருக்கிறோமோ அதன்மேல் பற்றுண்டாகி, அதனால் வரும் துன்பம் நமது தவத்திற்கு இடையூறாகும்.

இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை, யுடைமை,
மயலாகு மற்றும் பெயர்த்து.

'ஐயா, நான் கோவணமே சுமையெனத் திரிகிறேன்' என் றார் **பட்டினத்தார்**. பிறப்பை யறுக்க, முற்றத் துறந்தவர்

க்கு உடல்கூடச் சுமையாகும். வேறெந்தத் தொடர்பை, பற்றை, பொருளை அவர்கள் விரும்புவர்?

> மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல்? பிறப்பறுக்கல்
> உற்றார்க் குடம்பு மிகை.

**சதாசிவப்பிரமேந்திரர்** கொடுமுடிக் காவிரியில் புதைந்தும் சமாதியிலிருந்தார். உடம்புகூட அவருக்கு உணர்வில்லை, தேகாபிமானம் முற்றும் ஒழியவேண்டும். 'யான், எனது என்னும் செருக்கே அவாவிற்கும் பற்றிற்கும் காரணம். அச்செருக்கு ஒழிந்து, 'எல்லாம் அவன், அவனே அனைத்துமானன், அனைத்தும் வல்லான், சர்வாந்தர்யாமி' என்று உணர்வோன் ஆணவமாயமற்று, இறைவனடிபுகுந்து, வானோரைவிட மேலான முக்திநிலை பெறுவான்.

> யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க் (கு)
> உயர்ந்த வுலகம் புகும்.

வேதரிஷிகள், மாணிக்கவாசகர், அப்பர், முதலிய மகான்கள் அத்தகைய நிலைபெற்றனர். 'நான் எனது' என்னும் ஆணவத்துடன் உலகப் பொருள்களைப் பற்றி விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருப்பவர்களை, உலகமாயத்தால்வரும் இடும்பைகள் விடாது பற்றிக்கொண்டு சீரழிக்கும்.

> பற்றி விடாஅ இடும்பைகள், பற்றினைப்
> பற்றி விடாஅ தவர்க்கு.

புத்தர், பட்டினத்தடிகள், மாணிக்கவாசகர், நம்மாழ்வார் போன்ற தீரர்கள், முற்றத்துறந்து, விடுதலைபெற்றனர். விசுவாமித்திரர், தொண்டரடிப்பொடியாழ்வார் முதலியோர் இடையே மாயவலைப்பட்டுப் பிறகு விழிப்புற்றெழுந்தனர். துறவின் பெருமையைக் கருதியே **ஏகநாதர்**

சீடருக்கு, "அனைத்தையும் விடுத்துப் பின்னே வாருங்கள்" என்று கட்டளையிட்டார்; "ஆடையுணவின் கவலை கூட வேண்டா. குருவிக்கு ஊட்டி, அல்லிக்கு உடுத்திக் காப்பாற்றுவோன் உங்களைக் காப்பாற்றுவான்" என்றார்.

தலைப்பட்டார் தீரத் துறந்தார் ; மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

பற்றற்றால், அப்போதே பந்தமொழியும், பிறவிப் பிணியறும். பற்று நீங்காதுபோனால் மனம் நிலையாமல் திரிந்து பந்தங்களைப் பெருக்கும்; பிறவிநோய் விடாது பற்றும். ஜீவாத்மாக்களுக்கு ஒரே பற்றுத்தான் உண்டு. அதுவே எப்பற்றும் இல்லாத நித்திய முக்தனான, சர்வ சாட்சியான, சச்சிதானந்தனான **பரமாத்மா.** அவனையே பற்றுக. எதற்கு? வரங் கேட்கவா? இல்லை. பற்றுகளை விட்டொழிக்கும் வைராக்கியம் பெறுதற்கு. வறுமைதீரக் காளியை வரங் கேட்கப்போன **விவேகானந்தர்** மும்முறையும் வைராக்கிய வரமே கேட்டார். "இறைவனே, உலகவாழ்வை அடி முதல் நுனிமட்டும் பார்த்தேன். மாந்தர் இயல்பைப் பார்த்தேன். வாழ்வில் பலதுறைகளிலும் நுழைந்து அனுபவ மூட்டை சுமந்தேன். அந்த மூட்டை என்னை மண்ணோடு மண்ணாய் அழுத்தியது. இருவிகாரப் போர்க்களமான உலகில் நானும் ஒரு போர்வீரனாயிருந்து வேண்டிய புண்பட்டேன். இனி இந்த ஆசையாணவப் போர்க்களத்தை யொழித்தேன். உனது திருவடியே தஞ்சம், உண்மை, இன்பம் என்று பற்றினேன். வேறு பற்றற்றேன். இறைவனே, உன்னைத்தவிர வேறு எதை நம்பமுடியும்? எது சுகம்? நீயே சுகம். ஆண்டவனே! என் உள்ளம் நின் கோயிலாகுக. என் மனம் அலையாது நினது திருவடியே பற்றி நிற்கட்டும். கடவுளே, நின் பற்றன்றி வேறு பற்றற்ற இன்பமே நான்

வேண்டும் வரம். அருளுக!" என்று இறைவன் மாணடி பற்றவேண்டும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை ; யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

ஒவ்வொருவர் உள்ள மலர்மிசையும் விளங்கும் இறைவனைப் பற்றி வாழ்தலே, புண்ணிய மகான்கள் உபதேசம். அதுவே நிலையான இன்பம். அதுவே **திருக்குறள்** காட்டும் **இன்பம்!** அது **பொய்யா மொழி.** அதைப் பின்பற்றினோர் இம்மையிலேயே பேரின்ப வாழ்வு பெறுவதுறுதி.

இன்பமே தானும் இறைவ னடிபற்றி,
இன்பமாய் வாழ்வோ மினிது!

**சுவாமி சுத்தானந்த பாரதியார் இயற்றிய**

**திருக்குறளின்பம்**

**முற்றுப் பெற்றது.**



Printed at Shakti Press Ltd. (Shanti Press), Madras.